# சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்

காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்

க.சிந்தியா

பதிவுஎண்: 15901202






தமிழ்த்துறை

காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகம்

காந்திகிராமம் -624 302

திண்டுக்கல் மாவட்டம்

தமிழ்நாடு


ஜூன் - 2021

# சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்

காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்

க.சிந்தியா

பதிவுஎண்: 15901202






தமிழ்த்துறை

காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகம்

காந்திகிராமம் -624 302

திண்டுக்கல் மாவட்டம்

தமிழ்நாடு


ஜூன் - 2021

**முனைவர் வ.இராசரத்தினம்,**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
காந்திகிராம கிராமிய நிகா்நிலைப் பல்கலைக்கழகம்,
காந்திகிராமம் - 624 302,
திண்டுக்கல் மாவட்டம்.

## நெறியாளர் சான்றிதழ்

**“சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்”** என்னும் தலைப்பில் க.சிந்தியா மேற்கொண்ட இந்த ஆய்வு அவரது சொந்த முயற்சியால் உருவானது என்றும் காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் என்னுடைய மேற்பார்வையின் கீழ் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்டது என்றும் இவ்வாய்வேட்டின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்

இடம் : காந்திகிராமம்

நாள் :

**(வ.இராசரத்தினம்)**
**மேற்பார்வையாளர்**

**க.சிந்தியா,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை
காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகம்,
காந்திகிராமம் - 624 302,
திண்டுக்கல் மாவட்டம்.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்"** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இந்த ஆய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்தப் பல்கலைக்கழகப் பட்டப்பேற்றிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் இதன் மூலம் உறுதியளிக்கிறேன்.

இடம் : காந்திகிராமம்

நாள் :

**(க.சிந்தியா)**

**ஆய்வாளர்**

## நன்றியுரை

**“சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வு மேற்கொள்வதற்கு ஒப்புதல் அளித்த **காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகத்திற்கும் தமிழ்த்துறைக்கும்** எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு செம்மையாக அமைவதற்கு, ஆய்வு எண்ணத்தையும் ஆய்விற்கான விளக்கங்களையும் எனக்குக் கற்றுக் கொடுத்து, ஆய்வு வழிமுறைகளை எளிதாக எடுத்துக் கூறி, இவ்வாய்விற்கு நெறியாளராக இருந்து அன்போடு வழிகாட்டி, எனக்குப் பேருதவி புரிந்துவரும் எனது மதிப்பிற்குரிய ஆசான் மற்றும் **பேராசிரியர் முனைவர்.வ.இராசரத்தினம்** அவர்களுக்கு என்றென்றும் என் நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வேடு செம்மையாக அமைவதற்குத் தேவையான ஆலோசனைகள் வழங்கி, நூல்கள் கொடுத்து உதவிய **தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் ஒ.முத்தையா** அவர்களுக்கும், **பிற தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும்** எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டிற்குத் தேவையான நூல்களை வழங்கிய **காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழக டாக்டர் ஜி.ராமச்சந்திரன் நூலகத்திற்கும், தமிழ்த்துறை நூலகத்திற்கும், திண்டுக்கல் மாவட்ட பொதுநூலகத்திற்கும், மதுரை மாவட்ட பொதுநூலகத்திற்கும், மதுரை காமராஜர் பல்கலைக்கழக நூலகத்திற்கும்** என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் ஆய்வு செய்தபோது, என் அலுவலகப்பணி தொடர்பான வேலைகளை உரிய காலத்தில் சிறப்பாகச் செய்து கொடுத்த **அலுவலகப் பணியாளர்கள் அனைவருக்கும்** என் நன்றி உரியது.

என் கல்வி வளர்ச்சிக்குத் துணைநின்ற **என் பெற்றோர் திரு.ப.கந்தசாமி– திருமதி.க.ராஜாத்தி** மற்றும் **என் சகோதர சகோதரிகளுக்கும்** என் நன்றியை உரித்தாக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுத் தொடர்பாக எனக்குத் துணை நின்று உதவி புரிந்த **எனது தோழமைகளுக்கும்** எனது நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன். இவ்வாய்வேட்டை நல்ல முறையில் எழுதுவதற்கு என்னை ஊக்கப்படுத்தி அதனைத் தட்டச்சும் செய்து கொடுத்து உதவிய எனது அன்பிற்குரிய சகோதரி **பா.சடையம்மாள் தேவி – சா.செபஸ்டின் கிறிஸ்டிராஜ்** அவர்களுக்கும் பிழைகளைத் திருத்த உதவி புரிந்த **முனைவர் செ.ராஜேஸ் கண்ணா, ரா.நாகஜோதி, முனைவர் ந.சங்கரநாராயணன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(க.சிந்தியா)**

# சுருக்கக் குறியீட்டுவிளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சூத். | | சூத்திரம் |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| நற். | - | நற்றிணை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பக் | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பரி.திர. | - | பரிபாடல்திரட்டு |
| பா. | - | பாடல் |
| புறம் | - | புறநானூறு |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மு.ஆ | - | முதுகலைஆய்வேடு |
| முந்நூல் | - | முன்னர்குறிப்பிட்ட நூல் |
| மு.ப.ஆ | - | முனைவர்பட்டஆய்வேடு |
| முல். | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேலேகுறிப்பிட்ட நூல் |
| மொழி. | - | மொழிபெயர்ப்பு |

# பொருளடக்கம்


| இயல்கள் | தலைப்புகள் | பக்கங்கள் |
|---|---|---|
| | முன்னுரை | 1 - 9 |
| 1. | குடி - குடிகள் சொல் வரையறையும் வகைப்பாடும் | 10 - 37 |
| 2. | பத்துப்பாட்டு இலக்கியங்களில் குடிகள் | 38 - 121 |
| 3. | எட்டுத்தொகை இலக்கியங்களில் குடிகள் | 122 - 211 |
| 4. | சங்ககாலக் குடிகளின் மேல்நிலையாக்க முயற்சிகள் | 212 - 259 |
| | முடிவுரை | 260 - 264 |
| | துணைநூற்பட்டியல் | |
| | பின்னிணைப்பு | |

# சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்

## முன்னுரை

தொடக்ககாலத் தமிழ்ச் சமூகத்தினை அறிவதற்குச் சங்க இலக்கியங்கள் பெரிதும் துணை நிற்கின்றன. இவை அக்காலகட்டங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை, பொருளாதாரம், பழக்கவழக்கங்கள், தொழில்கள் ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. தமிழ் மக்களின் சமயம், பண்பாடு, அரசியல், பொருளாதாரம், சமுதாயம் ஆகியவற்றின் வரலாற்றுக் கருவூலமாகவும் திகழ்கின்றன. சங்ககாலச் சமூகத்தில் ஐந்து திணைகளுக்கு ஏற்ப, தொழில் அடிப்படையில் மக்களைக் குறவர், கானவர் ஆயர், இடையர், உழவர், பரதவர், வலைஞர், மறவர், எயினர் எனவும் இவர்களுக்கு உறுதுணையாக இருந்தவர்களை குயவர், தச்சன், கொல்லன், புலையர், புலைத்தி, அறிவர் எனவும் பிரித்து அழைத்துள்ளனர். இம்மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்ப தமது வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொண்டுள்ளனர். சங்ககால மக்கள் இனக்குழுச் சமூகமாகவே வாழ்ந்துள்ளனர் எனினும் அந்தந்த நிலங்களுக்குள் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைமுறையில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அம்மாற்றங்களுக்கான காரணங்களை ஆராய்வது இன்றியமையாதது. எனவே சங்ககால சமுதாய அமைப்பு முறையிலான மாற்றங்களை ஆராய்ந்து விளக்குவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

சங்ககால மக்களிடம் படிநிலை அமைப்பு முறைகள் காணப்பட்டுள்ளன. ஆகையால் அவர்களிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் பாகுபாடுகளும் காணப்பட்டுள்ளன. இந்நிலையில் இருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ள மேல்நிலையாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆகையால் இவ்வாய்வேட்டிற்குச் “**சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்**” என்னும் ஆய்வுத் தலைப்புத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

சங்ககாலத் திணை சார்ந்த குடிகளின் வாழ்வியலையும் அவர்களில் பிற தொழில்களைச் செய்து வாழ்ந்து வந்த தொழிற்குடிகளின்

வாழ்வியலையும் ஆய்வு செய்யும் இவ்வாய்வேடு கீழ்க்காணும் நோக்கங்களைக் கொண்டுள்ளது.

1. ஐந்து திணைகளில் வாழ்ந்த மக்கள் நில அமைப்பு அடிப்படையில் தொழிற்குடிகள் ஆயினர். இத்தகைய தொழிற்குடிகளின் தோற்றப் பின்புலத்தை அறிதல்.
2. கிடைநிலை அமைப்பு முறையில் வாழ்ந்த சங்க கால மக்களுக்குள் படிநிலைகள், பாகுபாடுகள், ஏற்றத்தாழ்வுகள் போன்றவை தோற்றம் பெற்றமைக்கான காரணங்களை ஆராய்தல்.

**ஆய்வுச்சிக்கல்**

தொழிற்குடிகளாக இருந்த சங்ககால மக்கள் பிறப்பின் அடிப்படையில் எப்பொழுது சாதியக்குடிகளாக மாறினர் என்பதைக் கண்டறிவதே இவ்வாய்வின் சிக்கலாகக் கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வின் கருதுகோள்**

திணைசார் வாழ்க்கைமுறையைக் கொண்ட சங்ககாலச் சமுதாயம் படிநிலைகளைக் கொண்ட செங்குத்து அமைப்பாக இருந்திருக்க வாய்ப்பில்லை. எனினும் ஆரிய வருணாசிரமக் கோட்பாட்டின் தாக்கமும் குடிகளின் மேல்நிலையாக்க முயற்சிகளுமே செங்குத்துப் படிநிலைகளைக் கொண்ட சமுதாய அமைப்புக்கு வழிகோலின என்பதே ஆய்வின் கருதுகோளாக அமைகிறது.

**ஆய்வு எல்லை**

சங்ககாலக் குடிகளை ஆராய்வதற்குச் சங்ககால நூல்கள் முழுவதும் இன்றியமையாதவை எனினும் ஆய்வு எல்லை கருதி பதினெண் மேற்கணக்கு நூல்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகையில் இடம்பெறும் பதினெட்டு நூல்கள் மட்டும் ஆய்வு எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு மூலங்கள்**

இவ்வாய்விற்குத் தேவையான நூல்கள் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் எனப் பகுக்கப்பட்டுள்ளன.

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஆகப் பதினெட்டு நூல்களும் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

சங்க இலக்கிய ஆய்வு தொடர்பான நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், கலைக்களஞ்சியங்கள், அகராதிக் குறிப்புகள், மின்னிதழ்களில் வெளிவந்த கட்டுரைகள் ஆகியவை இவ்வாய்வின் துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியம் காட்டும் குடிகள் தொடர்பாகச் சில ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன.

**முனைவர் பட்ட ஆய்வேடுகள்**

1. சு. இராமர் - திணைமரபுகளும் திணைக்குடிகளும், முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 2014.

2. போ.சத்தியவாணி - தமிழ்ச் செவ்வியல் நூல்களில் பிறகுடிகளின் பதிவுகள் (வரலாற்றியல், தொல்லியல், ஆய்வு நோக்கில்) முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் மதுரை, 2013.

3. வே.சண்முகநாதன் - தமிழ் இலக்கியங்கள் காட்டும் குடி, குடிமக்கள் கோட்பாடு, முனைவர் பட்ட ஆய்வேடு, அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி, முசிறி, 1990.

4. இரா.சங்கர் - சங்ககால மக்களின் வாழ்வியலும் தற்கால நிலையும் முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர், 2008.

**நூல்கள்**

1. பெ. மாதையன் - சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும் (2012)
2. ந.சி. கந்தையா பிள்ளை - தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (2015)
3. ராஜ் கௌதமன் - பாட்டும் தொகையும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்

**‘சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்’** என்னும் இவ்வாய்வு மேற்கண்ட ஆய்வுகளிலிருந்து வேறுபட்டு, கிடைநிலையாக இருந்த சங்க சமுதாயம் படிநிலைகளை நோக்கி பயணித்ததற்கான காரணங்களை ஆய்வதாக அமைந்துள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் சங்ககாலச் சமுதாயக் குடிகள் பற்றி ஆராய்வதால் ‘சமுதாயவியல் அணுகுமுறை’ (Sociological Approach) பயன்படுத்தப்பட்டுள்ளது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

**‘சங்ககாலக் குடிகளின் படிநிலைகளும் மேல்நிலையாக்க முயற்சிகளும்’** என்னும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன:

இயல்-1 குடி – குடிகள் சொல் வரையறையும் வகைப்பாடும்

இயல்-2 பத்துப்பாட்டு இலக்கியங்களில் குடிகள்

இயல்-3 எட்டுத்தொகை இலக்கியங்களில் குடிகள்

இயல்-4 சங்ககாலக் குடிகளின் மேல்நிலையாக்க முயற்சிகள்

**இயல் விளக்கங்கள்**

முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுச்சிக்கல், ஆய்வின்கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு, இயல் விளக்கங்கள் ஆகியவை குறித்து விளக்கப்பெற்றுள்ளன.

‘**குடி - குடிகள்சொல் வரையறைகளும் வகைப்பாடுகளும்**’ என்னும் முதல் இயலில் ‘குடி’ என்ற சொல்லுக்கான விளக்கங்கள், வரையறைகள், வகைப்பாடுகள் மற்றும் அறிஞர்கள் குறிப்பிட்டுள்ள குடிகளின் வகைப்பாடுகள் போன்றவை ஆராய்ந்து விளக்கப்பெற்றுள்ளன.

‘குடி’ என்பது குலம், குழு, குடும்பம், ஊர், மக்கள் கூட்டம், பழமையான குடிச்சிறப்பு போன்றவற்றைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது. இச்சொல் பல நிலைகளில் பொருள் தருவதாக அமையினும் ‘குடி’ என்பதற்கு ‘மக்கள்’ என்னும் பொருளே ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் குடிக்கு இணைச்சொற்களாக இல், இடம், திணை, குலம் போன்றவையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. அதோடு, குடிகள் வாழும் நிலத்திற்குத் திணை என்பதும் இங்குப் பெயராக அமைந்துள்ளது.

**‘பத்துப்பாட்டு இலக்கியங்களில் குடிகள்’** என்னும் இரண்டாம் இயலில் பத்துப்பாட்டு நூல்களில் இடம்பெற்றுள்ள திணைக்குடிகள் மற்றும் தொழிற்குடிகளின் வாழ்க்கைமுறைகள், பிரிவுகள், பாகுபாடுகள், படிநிலைகள் மற்றும் அதற்கான காரணங்கள் ஆகியவை ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டு நூல்களில் இடம்பெற்றுள்ள திணை சார்ந்த குடிகள் பெரும்பாலும் உழைக்கும் மக்களாகவே வாழ்ந்துள்ளனர். குறிஞ்சி நில மக்கள் உடல் உழைப்பால் உற்பத்தி செய்த பொருட்களை உடல் உழைப்பற்ற ஆட்சி அதிகாரத்தில் இருப்பவருக்கும் பொருளாதாரத்தில் மேம்பட்டு வாழ்பவருக்கும் அளித்து வாழ வேண்டிய அவல நிலைக்கு உள்ளாக்கப்பட்டுள்ளனர்.

இதனைக் குறிஞ்சி நிலத்தார் நன்னனுக்குத் திறைப் பொருள் செலுத்தும் நிலையை மலைபடுகடாம் (500-526) குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

ஒரே நிலத்தைச் சார்ந்த மக்களாக இருந்தாலும் வாழும் இடத்தின் வசதிக்கு ஏற்ப உணவின் தரம் வேறுபட்டிருந்தது. கால்நடைகளை மேய்ப்பது, பாதுகாப்பது போன்ற தொழில்களைச் செய்யும் முல்லை நில மக்கள் உழவுத்தொழில் செய்தும் வாழ்ந்துள்ளனர். தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் ஆகியோரின் நாடுகளில் இடம்பெற்ற முல்லை நிலத்தார் மற்ற நாடுகளில் வாழும் முல்லை நில மக்களைவிட உயர்வான நிலையில் வாழ்ந்துள்ளனர்.

வேளாண்மை செய்து வாழும் வேளாளர்களில் உழுதுண்ணும் வேளாளர்கள், உழுவித்துண்ணும் வேளாளர்கள் என்ற இரு பிரிவினர் இருந்துள்ளனர். உழுதுண்ணும் வேளாளர் வைக்கோல் வேயப்பட்ட குடிசையில் பழைய சோறு, அவல் என உண்டு வாழ, உழுவித்துண்போர் வெண்ணிற நெற்சோறு, கோழிப்பொரியல் சேர்த்து உண்டு, இல்லங்களில் செல்வச்செழிப்புடன் வாழ்ந்துள்ளனர். இவ்வாறு உழைப்பவரது உணவு ஒன்றாகவும் பிறர் உழைப்பில் வாழ்பவரது உணவு மற்றொன்றாகவும்

இருந்துள்ளமை சமூகத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வு நிலவியதைக் காட்டுகின்றது.

மருத நிலத்தைக் கரிகால் பெருவளத்தான், நல்லியக்கோடன், தொண்டைமான் இளந்திரையன், பாண்டியன் நெடுஞ்செழியன், நன்னன் போன்றோர் பல பகுதிகளில் ஆட்சி செலுத்தி வந்துள்ளனர். ஐந்து நிலங்களை ஆட்சி செய்பவர்களும் பாடல்களில் இடம்பெற்றுள்ளனர். நெய்தல் நிலத்தில் பரதவர், உப்பு விளைவிக்கும் அளவர், வலையர், கலங்களைச் செலுத்தும் மீகாமர் எனப் பல பிரிவு மக்கள் வாழ்ந்துள்ளனர். பரதவர்களுள் சிலர் கடல் வாணிபம் செய்வோராகவும் சிற்றரசர்களாகவும் இருந்துள்ளனர்.

வாழ்வாதாரத்திற்கான தொழில் செய்யக்கூடியவர்களாக காருகர், புலைத்தி, அட்டில் தொழிலர், தட்டார், தச்சர், கருமான், கன்னான், குயினர், ஓவியர், நாழிகைக் கணக்கர், அறிவர், துன்னர், கைவல் கம்மியர்களான பாய் பின்னுவோர், நூல் நூற்போர், சாயப்பாக்குத் தொழிலர், நீர் இறைப்போர், சங்கு அறுத்து வளையல் செய்யும் பார்ப்பார், முரசு அறைவோர், கரும்பு காய்ச்சுவோர், குற்றேவலர்கள், காவல் தொழில் செய்வோர், ஊர்க்காவலர், மெய்க்காவலர், கடைக்காப்பாளர், வரி வாங்குவோர், சுண்ணம் தயாரிப்போர் எனப் பல தொழிற் பிரிவினர் வாழ்ந்துள்ளனர்.

வாணிபம் தொடர்பான தொழில் செய்யக்கூடிய வணிகர்கள் செல்வச் செழிப்போடு மாளிகைகளில் உயர்ந்த மாடங்களில் வசித்தனர். மிளகு வணிகர், கூவியர் - உணவுப் பண்டங்கள் விற்போர், மீன், இறைச்சி விற்போர், கள் விற்போர், புடவைகள் விற்போர், வெற்றிலை, சுண்ணாம்பு, பாக்கு விற்போர், நறுமணப் பொருட்கள் விற்போர், பூ, மாலை, விற்போர், பொன், செம்பு விற்போர் எனப் பல வணிகத் தொடர்பான குடிகளும் வாழ்ந்துள்ளனர்.

கலை தொடர்பான தொழில் செய்யக்கூடிய பாணர், கூத்தர், பொருநர், விறலி, சூதர், மாகதர், வைதாளிகர் ஆகியோர் குறித்த செய்திகளும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்பெற்றுள்ளன.

**‘எட்டுத்தொகை இலக்கியங்களில் குடிகள்’** என்னும் மூன்றாம் இயலில் எட்டுத்தொகையில் குறிப்பிடப்பெற்றுள்ள திணை சார்ந்த குடிகள், தொழிற்குடிகள் ஆகியோரின் வாழ்க்கைமுறைகள், அம்மக்களுள் நிலவிய படிநிலைகள், வேறுபாடுகள், அதற்கான காரணங்கள் ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன.

ஆடுகளை மேய்ப்பவர், மாடுகளை மேய்ப்பவர் எனும் பாகுபாடு தற்பொழுது இல்லை. ஆனால் அப்பாகுபாடு சங்ககாலத்தில் இருந்ததாகக் கலித்தொகை சுட்டிக்காட்டுகிறது. மருத நிலத்தில் உழவர், கடைசியர், களமர், தொழுவர், அரிநர், அறைவனர், வினைஞர் எனப் பல பிரிவுகளாக மக்கள் வாழ்ந்துள்ளனர். அருமன் - சிறுகுடி, விரான் - இருப்பையூர், வாணன் - சிறுகுடி, தித்தன் - உறையூர், அருவந்தை - சோழநாட்டில் உள்ள அம்பர் ஊர், ஆதன் - போந்தை, ஒய்மான் வில்லியாதன் - மாவிலங்கை, கோப்பெருநற்கிள்ளி, சென்னி போன்ற பலரும் மருத நிலப் பகுதிகளை ஆட்சி செய்துள்ளனர்.

நெய்தல் நிலப்பரதவரின் தலைவர்களைத் ‘தென்பரதவர்’ எனக் குறிப்பிடுகின்றனர். இவர்களது வலிமை கண்டு பேரரசர்களும் எதிர்த்துள்ளனர். தழும்பன் - ஊணூர், பெரியன் - பொறையாறு, மத்தி - கழாஅர், பொறையன் - தொண்டி என்னும் பிறரும் நெய்தல் நிலப் பகுதிகளை ஆட்சி செய்துள்ளனர். பாலை நில மக்களுக்குத் தலைவர்களாக மீளி, விடலை, காளை போன்றோரைக் குறிப்பிடுவர். ஆனால் எட்டுத்தொகையில் ‘விடலை’ பற்றிய குறிப்பே காணப்படுகின்றது. அதனோடு ‘ஆதி’ என்பானும் பாலை நிலத்தாருக்குத் தலைவனாக இருந்துள்ளான்.

கலையியல் தொடர்பான தொழில் செய்த பாணர்களுள் சிறிய யாழ் கொண்டு வாசிக்கும் சிறு பாணர், பெரும்பாணர் என்ற பிரிவுகள் காணப்படுகின்றன. இப்பாணர்களுள் யாழ் வாசிப்பதோடு மீன் பிடித்தல் போன்ற பிற பணிகளைச் செய்வோரும் இருந்துள்ளனர். இசைக்கருவி இசைத்துப் பாடிய அகவுநர், மன்னனது போர்க்களச் சிறப்பை வாழ்த்திப் பாடிய அகவலன், மன்னர்களை மகிழ்வித்த நகைவர், வயிரியர், கோடியர், கண்ணுளர் போன்ற பலவிதமான தொழிற் குடிகள் குறித்தும் இவ்வியலில் விளக்கப்பெற்றுள்ளன.

**‘சங்ககாலக் குடிகளின் மேல்நிலையாக்க முயற்சிகள்’**என்னும் நான்காம் இயலில் திணை சார்ந்த குடிகளல்லாத தொழில் குடிகளின் தோற்றம், திணைமக்கள் - தலைவன் வேறுபாடு, வாழ்க்கைமுறை, நால்வருணப்பாகுபாடு, மேல்நிலையாக்க முயற்சிகள் ஆகியவை விளக்கப்பெற்றுள்ளன.

திணை சார்ந்த மக்கள் அன்றாட உழைப்பில் ஈடுபட்டு வாழ்ந்துவர. பொருளாதாரத்தில் மேம்பட்டோர் வீடுகளில் பந்து, கழங்காடுதல் போன்ற விளையாட்டுக்களில் ஈடுபட்டு, சிறப்பாக வாழ்ந்துள்ளனர். திணைசார்ந்த மக்கள் மலை, காடு, வயல், கடல் எனும் பகுதிகளிலும் எளிய வாழ்வு வாழ்ந்த சங்ககாலச் சமூகத்தில் பலஅடுக்கு மாடிக் கட்டிடங்களிலும் மாடமாளிகைகளிலும் சிறப்பாகச் சிலர் வாழ்ந்துள்ளனர். அவர்கள் எவ்விதத் துன்பமுமின்றி மிகுந்த வசதியோடு வாழ்ந்துள்ளமைக்கு அவர்களது அணிகலன்களை விளையாட்டுப் பொருள்களாகவும் கோழிகளை விரட்டுவதற்கும் பயன்படுத்தியமை சான்றாகும். திணைசார்ந்த மக்கள் விலங்குகளின் தோலைப் படுக்கையாகப் பயன்படுத்திய நிலையில், மன்னர்களும் அவரது மனைவியரும் முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட, மயிற்கற்றைகள் பரப்பிய யானைத்தந்தத்தால் ஆன கட்டில் மெத்தைகளில் துயில் கொண்டு வாழ்ந்துள்ளனர்.

திணை சார்ந்த மக்கள் மட்டுமல்லாது தொழில் சார்ந்த மக்களும் பல தோற்றம் பெற்றுள்ளனா். அவா்களில் பெரும்பாலானோர் நாகரிகம் தோன்றிய மருத நிலத்தில் தோன்றியிருப்பதையும் மருதம் தவிா்த்த பிற நிலங்களில் வாழ்ந்த மக்கள் அங்கு கிடைத்த பொருட்களைக் கொண்டு தொழில் செய்யும் கைத்தொழில் பிரிவினராகவும் தோன்றியிருக்கின்றனர். கலைப்பிரிவினா் பிற பகுதிகளுக்குச் சென்று தங்கிப் பணிபுரிந்தாலும் கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்திருப்பதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. மேலும், ஏவலாளர்கள், காவலாளர்கள் என மருதம், நெய்தல் நிலங்களில் வாழ்ந்தவர்கள் வேறு இடங்களிலிருந்து வந்தவர்களாகவும் கைப்பற்றப்பட்டு வந்தவர்களாகவும் இருந்துள்ளனர்.

நால் வருணத்தாரில் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் போன்ற தொழில்களைச் செய்தோர் (அந்தணர்) தூது செல்வதிலும் சங்கறுத்து வளையல் செய்வதிலும் ஈடுபட்டு பல பிரிவுகளாக வாழ்ந்துள்ளனர்.

வணிகர்கள் கடல் வாணிகம், தரை வாணிகம் என இரண்டிலும் ஈடுபட்டுள்ளனர். அந்தணர்கள் தாம் செய்த தொழில், குணம், அறிவு இவற்றைக் கொண்டு மன்னன் முதல் அனைவரையும் தங்களுக்குக் கீழ் கொண்டுவர முயன்றுள்ளனர். அந்தணர்களுக்குப் பணிந்து நடக்க வேண்டும், அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்படல் வேண்டும் எனப் பலவிதமாக வலியுறுத்தப்பட்டுள்ளது.

சங்ககாலச் சமூகத்தில் அந்தணர்கள் தங்களது மேன்மையை நிலைநாட்ட வேள்வி செய்தல், செய்வித்தல் ஆகியவற்றுக்கு முக்கியத்துவம் அளித்துள்ளனர். அவற்றை மன்னர்களின் தலையாய கடமையாகவும் அறிவுறுத்தியுள்ளனர்.

மன்னர்களும் தங்களுக்குள் போரிட்டு உயரத் தலைப்பட்டுள்ளனர். குறுநில மன்னர்களைத் தங்களுக்குப் படைத்தலைவர்களாகவும் உதவி செய்வோராகவும் பயன்படுத்தியுள்ளனர். குறுநிலமன்னர்கள் பெருமன்னர்களுக்கு அஞ்சித் திறை செலுத்தியுள்ளனர். மன்னர்கள் பிற மன்னரை அடக்கி ஆளவும் முயன்றிருக்கின்றனர். மூவேந்தர்களுக்கு அஞ்சி, துயில் கொள்ளாது, அடிபணிந்து வாழ்ந்துள்ளனர். மூவேந்தரும் தத்தம் வலிமையால் பிற மன்னர்களது நாடு முழுவதையும் அழித்து அவர்களது வளத்தையெல்லாம் கவர்ந்துள்ளனர். செல்வத்தையெல்லாம் இழந்து அவர்கள் வேறு இடத்திற்குத் தப்பிச்சென்று வாழ்ந்த அவலமும் ஏற்பட்டிருக்கின்றது. மன்னர்கள் பேரரசர்களாய் உயரத் தலைபட்டுப் பல போர்களைச் செய்து, திறைபெற்று, நாடுகளை அழித்துத் தமது புகழை நிலைநாட்ட விரும்பியுள்ளனர். மன்னர்களுக்குக் கீழ் அடங்கி அவர்களின் ஆட்சி செய்தவர்களாகவே குறுநில மன்னர்களும் இருந்துள்ளனர். மேலும், பேரரசு, சிற்றரசு எனும் படித்தர நிலையில் சங்ககால அரசுமுறை அமைந்துள்ளதை இவ்வியலில் விளக்கப்பெற்றுள்ளன.

இறுதியாக நான்கு இயல்களிலும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

மேலாய்வுக்கான களங்களும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்களின் பட்டியல் அகரவரிசைப்படி துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன. பின்னிணைப்பில் திணை அடிப்படையில் குடிகளின் பெயர் மற்றும் தொழில் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

# குடி – குடிகள் சொல் வரையறையும் வகைப்பாடும்

## 1.0 முன்னுரை

உலக இலக்கியங்களுள் தனித்தன்மை வாய்ந்தவை சங்க இலக்கியங்கள். அவை குறிப்பிட்ட கால இடைவெளியில் குறிப்பிட்ட நிலப்பரப்பிலுள்ள அனைத்து மக்களின் அன்றாட வாழ்வைப் படம்பிடித்துக்காட்டுவனாக அமைந்துள்ளன. மக்களின் வாழ்க்கைமுறை, வாழும் சூழ்நிலை, சமூக அமைப்பு ஆகியவற்றை முதல், கரு, உரிப்பொருள் எனப் பாகுபடுத்தி உயரிய திணைக்கோட்பாட்டின் வழியே வாழ்வின் நிலையை உள்ளது உள்ளபடி எடுத்துக் கூறுகின்றன. செம்மாந்த கருத்துக்களைக் கொண்டு நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் அடித்தளமிட்டவை அவ்விலக்கியங்கள். அவை உயரிய சிந்தனையையும் பரந்த நோக்கத்தையும் கொண்டு பாடப்பெற்றவையாகக் காணப்படுகின்றன.

சங்க இலக்கியங்கள் நிலத்தைப் பின்னணியாகக் கொண்டு நாளையும் பொழுதையும் வகைப்படுத்தி, மக்களின் தொழில் முறைகளைப் பதிவுசெய்துள்ளன. நாடாளுபவன் முதல் அன்றாட வாழ்வை நடத்தவே அல்லல் பட்ட எளியோன் வரை அனைவரது வாழ்க்கை முறைகளையும் வெளிப்படுத்துவனவாக அப்பாடல்கள் அமைந்துள்ளன. சங்க இலக்கியங்களில் திணை அடிப்படையில் தோன்றிய மக்கள் குழுக்களுக்குள் பலத் தொழில் செய்யும் மக்களையும் அறியமுடிகிறது. அவ்வகையில் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் குடிகள் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இக்குடிகளுக்குப் பெரும்பாலான இடங்களில் பொருள் மாற்றப்பட்டுள்ளது. குடி என்ற சொல்லுக்கான பொருள் விளக்கத்தையும் அச்சொல் பல்வேறு பொருண்மைகளில் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டதற்கான காரணங்களை அகராதி மற்றும் அறிஞர்கள் கருத்துக்கள்வழி ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## 1.1 குடி - குடிகள் சொல் விளக்கமும் வரையறையும்

'குடி' எனும் சொல்லுக்கு "உடம்பு, ஊர்ப்பொது, குடியானவன், குடியென்னேவல், குலம், கோத்திரம், சமுத்திரம், நெற்றிப்புருவம், பட்டினம், மருத நிலத்தார், மனைவி, வீடு, வாழ்விடம், குடும்பம், பருகு, மகன்"[1] என மதுரைத் தமிழ்ப் பேரகராதியும் "குடி - உடம்பு, ஊர்ப்பொது, குடியானவன், குடியென்னேவல், குலம், கோத்திரம், சமுசாரம், நெற்றிப்புருவம், பட்டினம்,

மருத நிலத்தார், மனைவி, வீடு, மதுபானம், குடியிருப்போர், குடும்பம்,ஊர், வாழ்விடம், குடிமக்கள், திணை"[2] எனக் கழகத்தமிழ் அகராதியும் "குடி - உடம்பு, ஊர்ப்பொது, குடியானவன், குடியென்னேவல், குலம், கோத்திரம், சமுசாரம், நெற்றிப்புருவம், பட்டினம், மருத நிலத்தார், மனைவி, வீடு"[3] என நா.கதிரைவேற்பிள்ளை தமிழ்மொழி அகராதி மற்றும் வெள்ளிவிழா தமிழ்ப் பேரகராதியும்

"குடி - ஊர், குலம், கோத்திரம்"[4] என இலக்கியச் சொல்லகராதியும் பொருள் கூறுகின்றது. "குடி-உடம்பு, ஊர்ப்பொது, குடிமக்கள், குடியானவன், குடியிருப்பு, குடும்பம், குலம், கோத்திரம், பட்டினம், புருவம், மருத நிலத்தார், மனைவி, வீடு"[5] எனதமிழ்ச்சொல்லகராதியும் "குடி - ஊர், குலம், கோத்திரம், மருத நிலத்தூர்"[6] என தமிழ் ஆங்கில அகராதியும்விளக்கம் தருகின்றன. மேலும் நர்மதாவின் தமிழ்ப்பேரகராதி "குடி - குடியானவன். ஆட்சிக்கு உட்பட்ட மக்கள், குடும்பம், வீடு, ஊர்"[7] என்றும்பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி "குடி - குடும்பம், கோத்திரம், குடியானவன், குடியிருப்பு, ஊர், மருத நிலத்தூர், வீடு, மனைவி, உடம்பு"[8] என்றும்தமிழ்ஆங்கில அகராதி "குடி - ஊர்ப்பொது, குடியென்னேவல், குலம், கோத்திரம், மருத நிலத்தூர், வீடு, உடம்பு"[9] என்றும் அடோன் தமிழ் - தமிழ் ஆங்கில அகராதி "குடி - குடியானவன், குடியிருப்போர், குடும்பம், கோத்திரம், குலம், வீடு, ஊர்"[10] என்றும் சுராவின் தமிழ் - தமிழ் ஆங்கில அகராதி "குடி - வீடு, மதுபானம், புருவம், குடியானவன், குடும்பம், குலம், ஊர், வாழிடம்"[11] எனவும் அகராதிகள் மாறுபட்ட பொருள்களைத் தருகின்றது. இவ்வாறு மேற்கூறப்பட்ட அகராதிகள் அனைத்தும் பல்வேறு காலச் சூழலுக்கேற்ப தோன்றியவையாதலால் பலவிதமான பொருள்களைத் தந்துள்ளன. எனினும் பெரும்பாலான அகராதிகள் குடும்பம், வீடு, குலம், குடியிருப்பு, குடும்பம், குடிமக்கள், பொருள்களைத் தருவதில் பெரும்பாலும் ஒன்றுபடுகின்றன. எனினும் குடிமக்கள் என்பதே அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட சொல்லாக இருப்பதைக் காணமுடிகிறது.

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் "குடி எனும் சொல்லுக்கு 'குடிமக்கள்'[12] என்ற பொருளையே தந்திருப்பதும் கவனிக்கத்தக்கது. அது மட்டுமல்லாது குடிமக்கள் எனும் சொல்லுக்குக் கழகத் தமிழ் அகராதி "பணி செய்யும் பதினெண் கணத்தார் என்றும் அவர்களை இலை வாணிகன், உப்பு வாணிகன், எண்ணெய் வாணிகன், ஓச்சன், கல்தச்சன், கன்னான்,

குயவன். கொல்லன், கோவிற்குடியான், தச்சன், தட்டான், நாவிதன், பள்ளி, பாணன், பூமாலைக்காரன், வண்ணான், வலையன், பறையன்"[13] என்று பொருள் விளக்கம் தருகின்றது. மேலும் பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதியும் "குடிமக்கள் - பணிசெய்யும் பதினெண் வகைச் சாதியார்"[14] என விளக்கம் தந்துள்ளது. ஆகவே, 'குடி', 'குடிமக்கள்' எனும் சொல்லானது மக்கள் மற்றும் மக்கள் தொகுதியினைக் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகின்றது.

### 1.2. சங்கப்பாடல்களில் குடி – சொல்விளக்கம்

சங்க இலக்கியங்களில் 'குடி' எனும் சொல் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அச்சொல்லுக்குச் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ள விளக்கத்தைப் பின்வருமாறு ஆராயலாம்.

#### 1.2.1. குடி – குடிமக்கள் எனும் பொருள்

கிள்ளி வளவனுக்கு, வெள்ளைக்குடி நாகனார் அறிவுரை கூறுவதாக அமைந்துள்ள புறப்பாடலில்,

"கண் பொர விளங்கு நின் விண் பொரு வியன்குடி
வெயில் மறைக் கொண்டன்றோ? ஆன்றே: வருந்திய
குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ.!" (புறம்.35:19-21)

எனும் இப்பாடலுக்கு ஔவை துரைசாமிபிள்ளை 'நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே, நீ குடிமக்கட்குக் காட் யெளியனாதல் வேண்டும்; நின் கொற்றக்குடை வெயில் மறைத்தற்குக் கொண்டதன்று; குடிகட்கு அருள் செய்தற் பொருட்டு' என்று விளக்கம் தருகின்றார்.

கு.வெ. பாலசுப்பிரமணியன் 'கண்ணைக் கவருமாறு அமைந்த விண்ணுயர்ந்த அகன்ற நின்குடை, வெயில் மறைப்பதற்காகவோ? அன்றே நின் குடிகளின் வருத்தம் மறைய நிழல் செய்து காப்பதற்காக அமைந்தது' என விளக்கம் தந்துள்ளார். இக்கூற்றுகளை ஆராயும் போது உரையாசிரியர்கள் பாடலில் இடம் பெற்றுள்ள 'குடி' எனும் சொல்லையே பயன்படுத்தியுள்ளனர். ஆனால் உ.வே. சாமிநாதையர் பாடலின் பின்னணிக்கேற்ப குடி என்பதற்கு குடிமக்கள் என விளக்கம் தந்திருப்பது ஏற்புடையதாக அமைந்துள்ளது. அதேபோல் இர.பிராபாகரனும் குடிமக்கள் என்றே விளக்கம் தந்துள்ளார்.

பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவரை நோக்கி வஞ்சினம் கூறுமிடத்து

"சிறு சொல் சொல்லிய சினம்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்கு அகப்படேஎன் ஆயின் - பொருந்திய
என் நிழல் வாழ்நர் செல் நிழல் காணாது
கொடியன் எம் இறை எனக்கண்ணீர் பரப்பி
குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக." (புறம்.72:7-12)

என்கிறான். இப்பாடல் பகுதியில் வரும் குடி பழிதூற்றும் என்ற தொடருக்கு குடை நிழலில் வாழும் மக்கள் என்றே ஔவை துரைசாமி பிள்ளை பொருள் உரைத்துள்ளார்.

அதேபோல்,

"முனைக்கு வரம்ப ஆகிய வென்வேல் நெடுந்தகை
நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலை
புன் காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
குடியும் மன்னும் தானே கொடி எடுத்து
நிறை அழிந்து எழுதரு தானைக்குச்
சிறையும் தானே தன் இறை விழுமுறினே" (புறம்.314: 2-7)

எனும் பாடலுக்கு கு.வெ.பாலசுப்பிரமணியன் சிற்றூரின் கண் வாழும் குடிமக்களுள் ஒருவனாக இருந்த நெடுந்தகை, தன் அரசனுக்குத் துன்பம் வருமாயின் கொடி ஏந்தி நிலைதடுமாறிச் செல்லும் தன் படைக்குக் காவலாய் விளங்குவான் எனும் பாடல் விளக்கத்தில் அவர் சீறூர்க் குடி என்பதற்குச் சிற்றூரில் வாழும் குடிமக்கள் என்று பொருள் தந்துள்ளார். மேலும்,

"வீங்கு சிலை மறவர்
பல் ஊழ் புக்குப் பயன்நிரை கவர
கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து" (அக.377:4-6)

எனும் இப்பாடலில் பெரு வில்லையுடைய மறவர்கள், பலமுறை புகுந்து பசுக்கூட்டங்களைக் கவர்ந்தமையால் வளமுற்ற குடிமக்கள் வாழ்வை இழந்து குடிபெயர்ந்ததால் ஊர் மன்றம் பாழ்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. மேலும்,காடுகளில் உள்ள மரங்கள் வெப்பம் தாங்காது வருந்திய தன்மையை,

"வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்
அலவுற்றுக் குடி கூவ ஆறு இன்றிப் பொருள் வெ.்.கி
கொலை அஞ்சா வினைவரால் கோல் கோடியவன் நிழல்
உலகு போல் உலறிய உயர்மர வெஞ்சுரம்" (கலி.10:4-7)

எனும் அடிகள் வருத்தமுற்றக் குடிகள் அலறும்படி கொலைத் தொழிலுக்கு அஞ்சாது, நெறியின்றிப் பொருளை வாங்கிக் கொண்டு செங்கோல் வளைந்த

மன்னனுடைய குடை நிழலில் தங்கிய உலகம் போல, ஞாயிற்று வெம்மையால் மரங்கள் உலறிவிட்டன எனக் கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகின்றது. இப்பாடலில் மக்கள் கூட்டத்தைக் குறிக்கக் கூடியதாய் குடி என்னும் சொல்லை உரையாசிரியர் அ.விசுவநாதன் கையாண்டுள்ளார்.

"முறை தளர்ந்த மன்னவன் கீழ்க்குடி போலக் கலங்குடீ
பொறை தளர்பு பனிவாரும் கண் ஆயின் எவன் செய்கோ"

(கலி.34:14-15)

எனும் கலித்தொகைப் பாடலானது, நாடாளும் முறைமை தளர்ந்த மன்னன் கீழிருந்த குடிகளைப் போல தலைவியின் கண்கள் பொறுமையில்லாது நீரைச் சிந்தியதாகக் கூறுகின்றது. இப்பாடலுக்குத் தகுந்த குடிமக்கள் எனும் பொருளை நேரடியாகப் பயன்படுத்தவில்லையெனினும் மன்னனது நிழலில் வாழும் குடிமக்கள் எனும் பொருளிலேயே அவர் கையாண்டுள்ளார்.

"பன் மலர்ப் பழனத் பாசடைத் தாமரை
இன்மலர் இமிர்பு ஊதும் துனை புணர் இருந்தும்பி
ஊண்துறை உடைந்த பூப்புனல் சாய்ப்ப புலந்து ஊடி
பண்புடை நல்நாட்டுப் பகை தலை வந்தென
அது கைவிட்டு அகன்று ஓரீஇ காக்கிற்பான் குடை நீழற்
பதி படர்ந்து இறைகொள்ளும் குடி போல" (கலி.78,1-10)

இப்பாடலானது, தாமரை மலரை ஆராவரித்துச் சூழும் வண்டினத்தைப் பெருகி வந்த நீர் சாய்த்ததனால், அம்மலரில் இருத்தலை வெறுத்து சென்றதைப்போல் நல்ல நாட்டைப் பகைவர் வந்து சூழ்ந்தனர் என்று அங்கு இருத்தலைக் கைவிட்டு தன்னைக் காக்கின்ற வேறு மன்னருடைய ஊர்களுக்குச் சென்று வாழ முற்பட்டுள்ளனர் எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

"சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீஇய நால் நிலவரொடு
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப" (மது.122-124)

எனும் மதுரைக்காஞ்சி வரிகளால் சிறப்பாகக் கூறப்படும் உழவு, வணிகம் என்கிற இருகூற்றால் சிறப்புற்று வாழும் குடிமக்கள் நான்கு நிலத்து வாழும் பிறமக்களிடம் நெடுஞ்செழியனது பழமை கூறி நின்று ஏவல் கேட்குமாறு கூறியுள்ளனர்.

"கொழும் பதிய குடி தேம்பிச்
செழுங் கேளிர் நிழல் சேர" (மது.167,168)

என்னும் மதுரைக்காஞ்சியில், பாண்டியன் நெடுஞ்செழியனைப் பகைத்த பகைவரது ஊர்களில் வாழ்ந்த குடிமக்கள் பசியால் துன்புற்று, வேற்றுநாட்டிலுள்ள தம் சுற்றத்தாரைத் தமக்குக் காவலாகக் கொண்டுள்ளதாக உரையாசிரியர் இரா.மோகன் குறிப்பிட்டுள்ளமையும் குடி எனும் சொல்லுக்கு மக்கள் என்றே பொருள் உரைக்கிறது. பாண்டியனது கிடங்கினைக் குறிப்பிடும்

'….. …. நாடு இழந்தனரும்
கொடும்பல் பதிய குடி இழந்தனரும்
தொன்று கறுத்த உறையும் துப்புத் தரவந்த
அண்ணல் யானை அடுபோர் வேந்தர்
இன்இசை முரசம் இடைப்புலத்து ஒழிய
பல்மாறு ஒட்டி பெயர் புறம் பெற்று
மண் உற ஆழ்ந்த மணி நீர்க்கிடங்கின்" (மது.345-357)

எனும் வரிகளில் செல்வமுடைய பல ஊர்களிலுள்ள குடிமக்களை இழந்தவரது மாறுபாட்டினைப் போக்கி, அவர் புறமுதுகினைக் காணும் சிறப்புடையதாகச் செழியனது கிடங்கு இருந்தது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேற்கண்ட பாடல்களை நோக்க உரையாசிரியர்கள் 'குடி' எனும் சொல்லை 'குடிமக்கள்' எனும் பொருளில் பல இடங்களில் கையாண்டுள்ளனர் என்பது புலனாகும்

**1.2.2 குடி – குடியிருப்பு எனும் பொருள்**

குடி எனும் சொல்லை குடியிருப்பு எனும் பொருளில் உரையாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

"மரை பிரித்து உண்ட நெல்லி வேலி
பரலுடை முன்றில் அம்குடிச் சீறூர்" (புறம்.170:1,2)

எனும் புறப்பாடல் அடிகள்மரையாவால் (காட்டுப்பசு) பிரிந்துண்ணப்பட்ட நெல்லி மரவேலியையுடையது. அதன் விதையாகிய பரல் பரந்த முற்றத்தினைக் கொண்ட அழகிய குடியிருப்பினையுடையது சீறூர்என்று சுட்டப்பட்டுள்ளதில் குடி எனும் சொல் குடியிருப்பைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

"களிறு பொரக் கலங்கு கழல் முள்வேலி
அரிது உண் கூவல் அம்குடிச் சீறூர்" (புறம்.306:1,2)

எனும் அடிகள் முல்லை நிலத்தார், யானை கலக்கி உண்ணும் நீர் நீர்நிலையைக் கொண்டதும் முள்வேலி சூழ்ந்த குடிகளையுடையதுமான சீற்றூரில் வாழ்ந்துள்ளனர் எனக் குறிப்பிடுகிறது. மேலும், சிற்றூரில்

புன்செய்கள் சூழ்ந்துள்ள அழகிய குடிகளையுடையது எனப் புறப்பாடல் (324:8) அடிகளும் விளக்குகின்றன. மேலும்,

"தன் ஊர்
வேட்டக் குடிதொறும்" (புறம்.333:14).

இப்புறப்பாடலில் வேட்டுவக் குடி என்பதற்கு கு.வெ.பாலசுப்பிரமணியன் வேட்டுவரது வீடுகள் என்று பொருள் தந்துள்ளார் இவை அனைத்தும் குடி என்பதை குடியிருப்பு என்ற பொருளில் வழங்கியதைக் காட்டுகிறது. மேலும்,

"நிலம் புதைப் பழுனிய மட்டின் தேறல்
புல் வேய்க் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து" (புறம்.120:11-12)

எனும் இப்பாடலில் பாரியின் நாட்டில், நிலத்தில் புதைக்கப்பட்டு, முற்றிய மதுவைப் புல்லால் வேய்ந்த சிறுமனையின்கண் உள்ள மலைவாழ் மக்கள் குடியுள்ள இடந்தோறும் உண்ணக் கொடுப்பர் என கு.வெ.பாலசுப்பிரமணியன் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

"வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு
மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட
நடுகாற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும்
குன்ற நாடன்" (நற்.285:3-7)

எனும் அடிகளில் கானவன் தான் வில்லால் கொன்ற முள்ளம்பன்றியைக் கைக்கொண்டு வெற்றி உவகையனாய் மனையிடத்தே உள்ள நாய்கள் புடைசூழத் தான் இருக்கும் குடிசைகளையுடைய குடியிருப்புக்குச் சென்றான் என்கிறது.

"முழா அரைப் போந்தை அரவாய் மாமடல்
நாளும் போழும் கிணையோடு சுருக்கி
ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஊழ் இரந்து உண்ணும் உயவல் வாழ்வை" (புறம்.375:4-7)

எனும் புறப்பாடலொன்று பொருநன், பனைமடல் நாரையும் பனங்குருத்தையும் கிணையோடு சேர்த்துக் கட்டி, ஏரால் உழுதுண்டு வாழ்வோரது மனையின்கண் சென்று அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் பொருந்திய வாழ்வையுடையவனாக இருந்துள்ளதைக் குறிப்பிடுகிறது. மேலும்,

"பதி முதல் பழகாப் பழங்கன் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலின்
குடிமுறை பாடி, ஒய்யென வருந்தி" (புறம்.393:1-3)

துன்ப வாழ்க்கையில் மனைவியுடனே வாழும் கிணைப் பொருநன் மதிநுட்பம் கெடுதலால் குடிதோறும் சென்று பாடி ஈவோரின்மையால் வருந்தியதாக வரும்

“கோட் தெங்கின் குலை வாழை
கொழுங்காந்தள் மலர் நாகத்து
துடிக் குடிஞை குடிபாக்கத்து” (பொரு.208-210)

பொருநராற்றுப்படை வரிகள் குலைகளையுடைய தெங்கு மற்றும் வாழை அதோடு, கொழுங்காந்தள் மற்றும் மலர்ந்த சுரபுன்னை இவற்றோடு துடியோசை போன்ற ஒலியினைச் செய்யும் பேராந்தையுடைய குடியினையுடையது பாக்கம் என இரா.மோகன் விளக்கம் தந்துள்ளார்.

“மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்
இருங் கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவீர்” (பெரு.166-168)

எனும் வரிகளில் கோவலரது குடியிருப்பில் தங்குவீராயின் தினையரிசிச் சோற்றைப் பாலுடன் பெறுகுவீா் எனப் பாணர்கள் ஆற்றுப்படுத்தப்பட்டுள்ளனா்.

“ஞாங்கர்க்
குடிநிறை வல்சிக் செஞ்சால் உழவர்” (பெரு.197)

எனும் வரிகளால் முல்லை நிலத்தைக் கடந்து சென்றால் நிறைந்த உணவினை உடையஉழவா் குடியிருப்புகளை அடையலாம் என்பது குடி என்பதற்குக் குடியிருப்பு என்னும் பொருளையேத் தருகின்றது. மேலும்,

“கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்
அவையா அரிசி அம்களித் துழவை
மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றி
பாம்பு உறை புற்றின் குரும்பி ஏய்க்கும்
பூம்புற நல் அடை அளைஇ தேம்பட
எல்லையும் இரவும் இருமுறை கழிப்பி
வல்வாய்ச் சாடியின் வழைச்சுஅற விளைந்த
வெந்நீரில் அரியல் விரல் அலை நறும்பிழி
தண் மீன் குட்டொடு தளர்தலும் பெறுகுவிர்” (பெரு.274-280)

பாணர்களே நீங்கள், வலைஞரது குடியிருப்பிலே தங்கினால் கொழியலரிசியால் களியாகத் துழாவி அட்ட கூழை நறுங்கள்ளுடனும் மீன் சூட்டுடனும் பெறலாம் என பாணர்கள் ஆற்றுப்படுத்தப்பட்டுள்ளதைப் பெரும்பாணாற்றுப்படையில் காணமுடிகிறது.

“நெடுந்தூண்டிலில் காழ் சேர்த்திய
குறுங் கூரைக் குடிநாப்பண்” (பட்.80,81)

எனும் வரிகளில் பரதவர்களின் இல்லங்கள் குறுகிய நுழைவாயிலைக் கொண்ட சிறிய குடில்கள் எனப் பொருள் கூறப்பட்டுள்ளது.

"பருவ வானத்துப் பாமழை கடுப்பக்
கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்" (பெரு.190,191)

எனும் பெரும்பாணாற்றுப்படை வரிகள் மழைக்காலத்தில் வானத்தில் பரந்த மேகத்தையொப்ப வரகு வைக்கோலால் வேயப்பட்ட கூரையையுடைய வீடுகளைக் கொண்டு சீறூர் இருந்துள்ளமையை குறிப்பிடுகிறது.

"பழம்பல் நெல்லின்குடிப் பரவை
தண் குடவாயில் அன்னோள்" (அகம்.44:16,18)

எனும் பாடல் வரிகள் குடவாயில் என்னும் ஊர் பழைய நெல்லினையுடைய பல குடிப்பரப்பினையுடையது எனக் குறிப்பிடுகின்றது. தலைவன், மலையைச் சார்ந்திருந்த சில குடிகளையுடைய பாக்கத்தில் இரவில் விருந்து அயரத் தங்கியதை,

"கல் சேர்பு இருந்த சில்குடிப் பாக்கத்த
எல் விருந்து அயர ஏமத்து அல்கி" (அகம்.187:12,13)

என அகநானூறு குறிப்பிடுகின்றது. இருப்பை மரத் தளிர்கள் நூலிலிருந்து விழும் முத்துப் போலச் செந்நிலத்து உதிர்ந்து கிடக்க, மழை பெய்ய மறந்த இடமாகிய அழகிய குடிகளை உடையது சீறூர் என அகப்பாடல் குறிப்பிடுகின்றது. இங்குச் சில்குடி எனும் சொல் குடியிருப்புகளையுடைய சிற்றூர் எனும் பொருளில் வந்திருப்பதைக் காணலாம்.

"பூத்த இருப்பைக் குழைபொதி குவி இணர்
குழல் துளை முத்தின் செந்நிலத்து உதிர
மழைதுளி மறந்த அம்குடிச் சீறூர்" (அகம்.225:11-13)

மேலும், அழகிய குடியிருப்புகளையுடையதாய் சீறூர் இருந்திருந்ததை,

"சுரை இவர் பொதியில் அம்குடிச் சீறூர்" (அகம்.287:5)
"புன் தலை மன்றத்து அம்குடிச் சீறூர்" (அகம்.321:10)
"முனை உழை இருந்த அம்குடிச் சீறூர்" (அகம்.367:5)
"அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்" (குறுந்.41:3)
"அடையாது இருந்த அம்குடிச் சீறூர்" (குறுந்.79:5)
"குவிந்த குரம்பை அம்குடிச் சீறூர்" (அகம்.329:4)

அகப்பாடல்கள் வரிகள் சுட்டிக்காட்டுகின்றன. மேற்குறிப்பிட்ட பாடல் அடிகளுக்கு உரையாசிரியர்கள் குடியிருப்புகளையுடைய சிற்றூர் என விளக்கம் தந்திருப்பது பொருத்தமானதே.

"மலை அயற் கலித்த மைஆர் ஏனல்
துணையின் தீர்ந்த கடுங்கண் யானை

ஆணையக் கண்ட அம்குடிச் குறவர்
கணையர் கிணையர் கைபுனை கவணர்
விளியர் புறக்குடி ஆர்க்கும் நாட" (நற்.108:1-5)

எனும் அடிகள் தினைப்புனத்துள் களிறு புகுந்ததைக் கண்ட அழகிய குடியில் உள்ள குறவர் கணை, கிணைப் பறை, கவண் இவற்றை வைத்து பேரிரைச்சல் எழுப்ப அவை குடியிருப்பின் புறம் எல்லாம் சென்று ஆராவரித்துள்ளமையைச் சுட்டுகின்றன. மேலும்,

"… யாமத்து
உடை திரை ஒலியின் துஞ்சும் மலிகடற்
சில் குடிப் பாக்கம்" (நற்:159:9-11)

எனும் அடிகள் நள்ளிரவில் முரிந்து விழுகின்ற அலையின் ஒலியைக் கேட்டுத் துயிலும் சிலவாகிய குடிகளையுடையது கடற்கரைப்பாக்கம் என நற்றிணைப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும் மற்றொரு பாடலில்

"தூங்கல் ஓலை ஓங்கு மடற்பெண்ணை
மா அரை புதைத்த மணல் மலி முன்றில்
வரையாத் தாரம் வரு விருந்து அயரும்
தன் குடி வாழ்நர் அம்குடிச் சீறூர்" (நற்:135:1-4)

எனப் பனைமர அடிப்பகுதி புதையுமாறு மூடப்பட்ட மணல்மிக்க முற்றத்திலிருந்து, அளவிடப்படாத உணவுப்பொருளை விருந்தினருக்குப் பகுத்துக்கொடுக்கும் குடும்ப வாழ்க்கையினையுடைய அழகிய குடியிருப்புகளைக் கொண்டது என்பது சிற்றூரைக் காட்சிப்படுத்துகிறது.

"அழிந்த வேலி அம்குடிச்சீறூர்
ஆள் இல் மன்றத்து அல்கு வளி ஆட்ட" (நற்:346:4,5)

எனும் அகப்பாடல் சிற்றூரில், வேலியையுடைய அழகிய குடியிருப்புகள் போரினால் அழிந்து விட, அங்குள்ள மன்றம் ஆளற்று இருந்ததைக் குறிப்பிடுகின்றது.

"கடிகொள் இருங்காப்பில் புல்லினத்து ஆயர்
குடிதோறும் நல்லாரை வேண்டுதி- எல்லா
இடுதெள் மருந்தோ நகை குறித்து எம்மை" (கலி:110:1-3)

எனும் கலித்தொகைப் பாடல் தலைவி, தலைவனை நோக்கி, கடுமையான காவலுடைய ஆட்டிடையருடைய குடிதோறும் உள்ள மகளிரை விரும்பி நின்றாய் எனக் கூறுவதாக அமைகிறது. மேற்சுட்டிய பாடல்களில் திணைமக்கள் அனைவரும் நெருங்கிய மற்றும் அழகிய பல குடியிருப்புகளையுடைய சிற்றூரில் வாழ்ந்து வந்திருப்பது தெளிவு. மேலும்,

உரையாசிரியர்கள் பாடலின் சூழலுக்கேற்ப ‘குடி’ என்ற சொல் குடியிருப்பு என்னும் பொருளில் வழங்கியுள்ளதையும் அறியலாம்.

### 1.2.3 குடி –குலம் எனும் பொருள்

சங்கப் பாக்களில் குடி என்னும் சொல் குலம் எனும் பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

“நின்னொடு தொன்று மூத்த உயிரினும் உயிரொடு
நின்று மூத்த யாக்கை அன்ன நின்
ஆடு குடி மூத்த விழுத் திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள் வலம் வாழ்த்த
இரவல் மாக்கள் ஈகை நுவல
ஒண்தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய
தண் கமழ் தேறல் மடுப்ப மகிழ் சிறந்து
ஆங்கு இனிது ஒழுகுமதி பெரும” (புறம்.24:26-33)

இப்பாடலுக்கு விளக்கமளித்துள்ள ஔவை துரைசாமி பிள்ளை பாடலில் உள்ள குடி எனும் சொல்லையே பயன்படுத்தியுள்ளார். ஆனால் கு.வெ.பாலசுப்பிரமணியன் உன்னுடைய மூத்த உயிரை விட, உயிருடன் விளங்கி முதிர்ந்த உடலைப் போன்றது உன் வெற்றியையுடைய குடி. அக்குடியின் பழைமையும் சிறப்பும் உடைய குலத்தில் பிறந்த வாட்போர் வல்லவர் உன் முயற்சியின் வலிமையை வாழ்த்தட்டும் இரவலர்கள் உன் கொடையைப் புகழட்டும் என நேடியான விளக்கம் தந்துள்ளமை பொருந்துவதாக அமைந்துள்ளது.

“தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க்கு எண்மை காணும் என” (புறம்.43:18,19)

இப்பாடலில் தம்மிடமிருந்து தப்பிய பகைவரைப் பொறுக்கும் தலைமை சோழர் குலத்தில் பிறந்தோர்க்கு எளிமையுடைத்து எனத் தாமப்பல் கண்ணனார் சோழன் மாவளத்தானிடம் கூறியுள்ளார். சோழர் குடியில் தோன்றிய நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் போர் நடக்கவிருக்கும் போது அதை தடுத்தும் நிறுத்தும் நோக்கில் கோவூர்கிழார் நெடுங்கிள்ளியிடம் கூறுவதாக அமையும் புறப்பாடலிலும் குடி எனும் சொல் குலம் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது.

“ஒருவீர் தோற்பினும் தோற்பநும் குடியே
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே அதனால்
குடிப்பொருள் அன்று நும் செய்தி கொடித்தேர்
நும் ஓர் அன்ன வேந்தர்க்கு
மெய்மலி உவகை செய்யும் இவ் இகலே” (புறம்.45:5-9)

வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்னும் மன்னன் தனக்கு முன்னுள்ளோர் இறந்து பட தளராது, நல்ல புகழையுடைய தமது குடியை ஆலமரத்தின் நெடுங்கிளையை விழுது தாங்குவதுபோல நடுக்கமற அணைத்துக் காத்ததாகப் புறப்பாடலொன்று குறிப்பிடுகிறது. இதனை,

"நீயே தண் புனற் காவிரிக் கிழவனை இவனே
முழு முதல் தொலைந்த கோளி ஆலத்துக்
கொழு நிழல் நெடுஞ் சினை வீழ் பொறுத்தாங்கு
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது
நல் இசை முதுகுடி நடுக்கு அறத் தழீஇ" (புறம்.58:1-5)

எனும் அடிகளால் அறியலாம். குலம் எனும் பொருளிலே குடி என்ற சொல்லை குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

"மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலின் ஓரிஇ பிறர்
வன்புலம் காவலின் மாறி யான் பிறக்கே." (புறம்.71:19)

இப்பாடலுக்கு உரைவிளக்கம் தந்துள்ள ஔவை.துரைசாமிபிள்ளை மற்றும் கு.வெ. பாலசுப்பிரமணியன் இருவரும் தென்புலத்தைக் காக்கும் காவல் வீரர்கள் பல உயிர்களைக் காக்கும் குலத்தில் சிறந்தவர்கள் என்னும் பொருளையே குறிப்பிட்டுள்ளமை பொருத்தமானதாக அமைகின்றது.

"குன்றுகண்டு அன்ன நிலைப்பல் போர்ப்பு
நாள்கடா அழித்த நனந்தலைக் கப்பை
வல்வில் இளையர்க்கு அல்குபதம் மாற்றாத்
தொல்குடி மன்னன் மகளே முன்நாள்
கூறி வந்த மாமுது வேந்தர்க்கு" (புறம்.353:8-11)

எனும் பாடலில் நெற்போர்களை அழித்துக் கடாவிடப்பட்ட இடத்தில் குவிந்த நெல்லை வலிய வில் வீரர்களுக்கு நாளுணவாக நல்குவதில் மாறுதல் இல்லாத தொன்மையான குடியில் தோன்றிய மன்னனின் மகள் எனத் தலைவி குறிப்பிடப்படுகிறாள். தொன்மையான குடி என்பது குலவரிசையைக் குறிப்பதாக அமைந்துள்ளது. மேலும் பொறையாற்றுகிழான் என்பவன் பண்புடைய முதுகுடியில் தோன்றியவனாகக் குறிப்பிடப்படுகின்றான். இதற்கு, "தீர்கை விடுக்கும் பண்பு இல முதுகுடி" (புறம்.,391:9) எனும் அடி உணர்த்துகிறது. மேலும்,

"கூலம் பகர்நர் குடிபுறந்தராஅ" (பதி.13:23)

எனும் அடியில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், நிலத்தில் விளையும் எண்வகைக் கூலங்களை விற்கும் வணிகர் குடியைப் பேணிக் காத்தவனாகக் குறிப்பிடப்படுகின்றான்.

மறவர் தாம் பிறந்த நல்ல புகழையுடைய குடியின் பெருமையை நிலைநிறுத்தும் பொருட்டுப் போர்ப் பாசறைக் கண்ணே சுழன்று திரிந்துள்ளனர். இதனை,

"கெடாஅநல் இசைத் தம்குடி நிறுமார்
இடாஅ ஏணி வியல் அறைக் கொட்ப" (பதி.81:13,14)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. மேற்சுட்டிய பாடல்களின் பின்னணியை ஆராயும் போது உரையாசிரியர்கள் குலம் எனும் பொருளிலே விளக்கமளித்துள்ளனர் எனலாம்.

"இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
இருப்பிறப்பாளர்" (முரு.178,182)

எனும் அடிகளில் இருப்பிறப்பாளராகிய அந்தணர் தாயும் தந்தையுமாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்று மதித்த, பலவாய் வேறுபட்ட பழைய குடியிற் பிறந்தவர் எனத் திருமுருகாற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன.

"சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்" (அகம்.290:8)
"குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்" (அகம்.352:8)

எனும் அகநானூற்றுப் பாடல் தலைவன் இயல்பினைக் குறிப்பிடும் போது, உயர்ந்த குடியைச் சேர்ந்தவன் என்றும் கடற்கரையை உடையவன் என்றும் குறிப்பிடுகின்றன. மேலும்,

"நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ் சூல் நம் குடிக்கு உதவி" (நற்:370:1,2)

எனும் அடிகளில் தலைவி சுற்றத்தார் சூழ ஓம்புகின்ற சிறந்த சூல் உடையளாய் மகவு ஈன்று தலைவன் குடிக்கு உதவினாள் என்பதாக நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது. இங்குத் தலைவி வாரிசைப் பெற்றுத்தருகிறாள் அதில் தலைவனின் குடிக்கு உரியதாகிறது என்பது குலமரபைக் குறிப்பிடுகிறது.

பாண்டிய மன்னனைக் குறிப்பிடும் கலித்தொகைப்பாடல்

"மலிதிரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின்
மெலிவு அன்றி மேல்சென்று மேவார் நாடு இடம்பட
புலியொடு வில் நீக்கி புகழ் பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
தொல் இசை நட்டகுடியொடு தோன்றிய
நல் இனத்து ஆயர்" (கலி.104:1-6)

என்கிறது. அதாவது பாண்டிய மன்னனின் நாடு கடல் கொண்டதால், தன் நாட்டை விரிவாக்க எண்ணி சேர, சோழப் படைகளை வென்று அவர்களின் வில், புலிக் கொடிகளை நீக்கித் தன் மீன் கொடியை நாட்டியுள்ளான். அத்தகைய தொன்மையான குடியோடு தோன்றியவர் என்பதில் குடிகள் என்பது பசு இனத்து ஆயரின் தொன்மையைக் குறிப்பிடுகின்றது.

"அரைசுபடக்கடந்து அட்டு ஆற்றின் தந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்கு
சீர்மிகு சிறப்பினோன் தொல்குடிக்கு உரித்து" (கலி.105: 1-7)

எனும் பாடலில் மாற்றரசர்களை வீழும்படி செய்து அவர்தம் செல்வங்களைக் கொண்டு வரும் சிறப்புகளையுடையவன் பாண்டியன். அவனது பழைய சிறப்புமிக்க குடிக்கு உரியதான முத்தும் பிறவும் என்றும் குறைவின்றிப் பெருக வேண்டும். முரசங்கள் முழங்கிய முதியகுடியிற் பிறந்தவன் தீதின்றி வாழ வேண்டும் என நினைத்துள்ளனர். பின்பு தோன்றிய பெருங்குடியில் பிறந்த ஆயர்கள் எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. இங்கு குடி என்பதற்கு குலம் எனும் சொல்லாட்சி பாடல்களில் இடம்பெறவில்லை. ஆயினும் குலம் எனும் பொருளில் உரையாசிரியர்கள் பாடலுக்கு விளக்கம் தந்துள்ளமை ஏற்புடையதே.

### 1.2.4 குடி- குடும்பம் எனும் பொருள்

குடி எனும் சொல் குடும்பம் எனும் பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்" (புறம்.183: 5-7)

எனும் அடிகள் ஒரு குடியில் - குடும்பத்தில் பிறந்த பலருள்ளும் மூத்தோன் வழியிற் செல்லாது அவருள் அறிவுடையோன் சென்ற நெறியிலே மன்னனும் செல்வான் எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

"நீ இழந்தனையே அறன்இல் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல் வளன் அறியான்
வீழ்குடி உழவன் வித்த உண்டா அங்கு
ஒருவன் ஆர் உயிர் உண்ணாய் ஆயின்
நேரார் பல் உயிர் பருகி
ஆர்குவை மன்னோ அவன் அமர் அடு களத்தே" (புறம்.230: 11-16)

இப்புறப்பாடல் பாடல், வாழ்தற்கு ஏதுவாக வயலிடத்து விளையும் வருவாயை அறியனாய்த் தளர்ந்த குடியையுடைய உழவன் விதையை உண்டாற் போல எழினியின் பெறுதற்கரிய உயிரை உண்டிலையாயின்

பகைவரது பல உயிரையும் நீ உண்டிருக்கலாம் என அரிசில்கிழார் கூற்றத்திடம் விளித்துப் பாடுவதாகஅமைந்துள்ளது. மேலும்,

"இரவல் மாக்கள் சிறுகுடி பெருக" (பதி.59:7)

பதிற்றுப்பத்தில் குறிப்பிடப்படும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன். இரத்தலையுடைய பரிசிலரது சிறுகுடும்பங்கள் வளர்ச்சியடையும்படி செய்ததாகக் குறிப்பிடுமிடத்தும்

"காந்தள்அம் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலி மகிழ் மேவலர் இரவலர்க்கு ஈயும்" (பதி.81: 22,23)

அங்குள்ள செழுங்குடியிற் பிறந்த செல்வர் ஆரவாரத்தையுடைய மகிழ்ச்சியினராய்த் தம்பால் வந்து இரப்போர்க்கு வேண்டுமவற்றைக் கொடுப்பர் என்பதாக குறிப்பிடுமிடத்தும் குடி எனும் சொல் குடும்பம் என்பதைக் குறிக்கின்றது. மேலும்,

"இருவகையான் இசை சான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்" (மது.121-122)

என்ற மதுரைக்காஞ்சி வரிகள் சிறிய குடிகளாய் பெரிய தொழில்களைச் செய்வாருடைய ஆராவாரம் முதுவெள்ளிலை என்னும் ஊரில் எழுந்துள்ளது என்கிறது. மேலும்,

"பொழுங்கடிச் செல்வரும் பிறரும் மேஎய்
மணம் புணர்ந்த ஓங்கிய அணங்குடை நல்இல்" (மது.577-578)

வளமான குடியில் தோன்றிய பிற செல்வரும் அவரால் தோன்றிய பிற செல்வரும் பொருந்தி வாழ்வதற்கிடனாகியது அணங்குடை நல்இல் என மதுரைக்காஞ்சி வரிகள் விளக்குகின்றன.

"சுவல் விளை நெல்லின் அவரை அம்புளிங்கூழ்
ஆற்கு இடை உழந்த நும் வருத்தம் வீட
அகலுள் ஆங்கண் கழி மிடைந்து இயற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவீர்" (மலை.436-439)

அகன்ற ஊரில் கழிகளால் செய்த புல்லால் வேய்ந்த குடில்கள் இருக்கும் குடிதோறும் நெல்லரிசி விரவி அவரை விதையினாற் சமைத்த புளிங்கூழ் பெறுகுவீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப்பெற்றுள்ளனர்.

"கொண்ட கொழுநன் குடி வறன் உற்றென
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகு நீர் நுணங்கு அறல்போல
பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையளே" (நற்.110: 10-13)

எனும் அடிகள் தலைவி, தன் கொழுநனின் குடி வறுமையுற்றதென்று தன் தந்தையின் செல்வமிக்க உன் வினையும் நினையாளாகி ஒரு பொழுதின்றியொரு பொழுதுண்ணும் வன்மையுடையளானாள் என நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது.

"பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்
கல் அதர் அரும் புழை அல்கி கானவன்
வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை
பனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி
குடிமுறை பகுக்கும் நெடு மலை நாட" (நற். 336: 1-5)

எனும் அடிகள் தினையைத் தின்றழித்த பன்றியேற்றைக் கானவன் வில்லாற் கொன்று, கொடுப்ப அவன் மனைவி அப்பன்றியை அறுத்துத் தன் சுற்றமாகிய குடியினருக்குப் பகுத்துக் கொடுத்ததாகக் கூறப்படுகின்றது.

"என்பால் அல் பாராட்டு உவந்தோய் குடி உண்டீத்தை என்
பாராட்டைப்பாலோ சில" (கலி.85:32,33)

எனும் அடிகள் என்னுடைய குடியின் பகுதியைச் சாராத தலைவனிடத்திநின்று வந்த பாராட்டினைக் கேட்டு மகிழ்ந்தவனே, என் பங்காகிய பாலைப் பருகுவாயாக என ஊடல் கொண்ட தலைவி தன் மகனை நோக்கிக் கூறியுள்ளாள். மேற்குறிப்பிட்ட பாடல்களை ஆராயும்போது உரையாசிரியர்கள் குடும்பம் எனும் பொருளில் குடி எனும் சொல்லை பயன்படுத்தியுள்ளதை அறியலாம்.

### 1.2.5 குடிகள் - குடிமக்கள் எனும் பொருள்

சங்க இலக்கியப் பாடல்களில் குடிகள் எனும் சொல் அதிக இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் உரையாசிரியர்கள் குடிகள் என்பதற்கு குடிமக்கள் என்னும் பொருளைப் பயன்படுத்தியுள்ளனர்.

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீர் ஊர் பூவின்
இதழகத்து அனைய தெருவம் இதழகத்து
அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண் தமிழ்க்குடிகள்" (பரி.திர.8:1-5)

எனும் அடிகளில் பாண்டிய மன்னனின் மதுரை நகர் திருமாலின் உந்தித் தாமரைப் பூப் போன்றது என்றும் மதுரை நகரின் மக்கள் தண் தமிழ்க்குடிகள் - குடிமக்கள் அம்மலரின் தாதுக்கள் போல்வர் எனவும் உரையாசிரியர் பெ.சுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார்.

"பீடு பெறு தொல்குடிப் பாடு பல தாங்கிய
மூதிலாளருள்ளும் காதலின்
தனக்கு முகந்து ஏந்திய பசும்பொன் மண்டை
இவற்கு ஈக" (புற.289:4-7)

என்ற அடிகளால்பெருமை பெற்ற பழைய குடிப்பிறந்தாரிடத்து வழி வழி வரும் நற்பண்பு பலவற்றையும் காத்து வரும் மறவருள்ளும் ஒரு மறவனைச் சுட்டிக்காட்டி அன்புடன் இவ்வீரனுக்குத் தனக்குத் தர ஏந்திய கள்ளைத் தருக என வேந்தன் கூறுவதாகப் புறப்பாடல் அமைந்துள்ளது.

"அரைசேர் யாத்த வெண்திரள் வினைவிறல்
எழூஉத் திணிதோள் சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ்சென்னி
குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்" (அகம்.375:9-12)

எனும் அடிகளில் வெற்றி நீங்காத உறுதியுடைய சோழன் இளம்பெருஞ்சென்னி, தனது குடிமக்களின் நன்மை கருதிய கடமை ஆகலின் போர் வினையை மேற்கொண்டு முடித்தான் எனக் குறிப்பிடுகிறது. குடிமக்களைப் பாதுகாத்து, பின்பு தன்னனைப் பாதுகாக்கும் இயல்புடையவன் பாண்டிய மன்னன். "குடி புறங்காத்து ஓம்பும் செங்கோலான்" (கலி.130:19) எனும் அடி சுட்டிகின்றது.

"கூலம் பகர்நர் குடிபுறந்தராஅ
குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி" (பதி.13: 23,24)

எனும் பதிற்றுப்பத்து அடிகள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், எண்வகைக் கூலங்களை விற்கும் வணிகர் குடி மற்றும் குடிமக்களைப் பாதுகாக்கும் வேளாளர் சுற்றத்தையும் பாதுகாத்துள்ளான் எனக் குறிப்பிடுகிறது.

தன் மகளை திருமணம் பேசும் பொருட்டு வந்த சான்றோரின் வழிநடை வருத்தத்தையும் நுமது வானளவு உயர்ந்த குடிமையையும் குடிச்சிறப்பையும் எண்ணிப் பார்த்து நம் மகளுக்கு விலையாகத் தலைவனது குன்றத்தை ஏற்றுக்கொண்டு இவளை அவனுக்குக் கொடுத்தால் பெரிதும் நன்று என நற்றாய் தந்தை மற்றும் தமையன்மாருக்குக் கூறி அறத்தோடு நின்றதாகக் கூறப்படுகிறது.

"கடிமலர்ப் புன்னைக் கீழ்க் காரிகை தொற்றாளைத்
தொடி நெகிழ்ந்த தோளாளாத் துறப்பாயால் மற்றுநின்
குடிமைக்கண் பெரியது ஓர் குற்றமாய்க் கிடவாதோ"(கலி.135:6-8)

திருமணம் செய்யாது இருந்த தலைவனைக் கண்ட தோழி, புன்னையின் கீழ் நின்னைப் புணர்ந்ததனால் தொடி நெகிழும்படி கைகவிடுவது நின்

குடிமைக்கண் தங்கும் பெருங்குற்ற மாகாதோ எனக்கேட்பதாகக் கலித்தொகைப் பாடல் இடம்பெறுகின்றது. மேற்கண்ட பாடல்களின் மூலம் சங்க இலக்கியங்களில் 'குடி' எனும் சொல் குடிமக்கள், குலம், குடிச்சிறப்பு, மனை, குடியிருப்பு, குடும்பம் எனும் பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளமையை அறியலாம்.

சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் 'குடி' எனும் இச்சொல் இடம் பெற்றுள்ளது. ஆனால், அது, மக்கள், அவர்கள் வாழும் இடம், குடும்ப அமைப்பு, மக்கள் பாகுபாடு ஆகிய பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை,

"அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணில் ஆடு முன்றில்" (குறுந்.41:3-4)

"நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ" (குறுந்.130:3-5)

"புல்வேய்க் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து" (புறம்.120:13)

"துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று
இந்நான் அல்லது குடியும் இல்லை" (புறம்.335:7-8)

போன்ற பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும் கா.சிவத்தம்பி அவர்கள் சங்க இலக்கியத்தில் 'குடி' என்ற சொல் குடும்பம் அல்லது குடியிருப்பு என்ற பொருளிலேயே பொதுவாகக் கையாளப்படுகின்றது. எனவே ஆதியில் குடியிருப்பைக் குறித்த இந்தச் சொல் காலக்கிரமத்திற் பொருள் மாறுதலடைந்து குடியிருப்பிலுள்ள மக்களின் ஒழுக்க வடிவங்களைச் சுட்டுவதாக மாறியிருப்பதும் சாத்தியமே"[15] என்ற கூற்றும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஆகவே ஒரு சொல் அது வழங்கப்பட்ட காலத்தில் அக்காலச் சூழலுக்கேற்ப பல்வேறு பொருண்மைகளைப் பெறுவது என்பது இயல்பானது தவிர்க்க இயலாதது. இவ்வாறு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே 'குடி' பற்றிய பதிவுகள் இவ்வாறு இடம் பெற்றிருக்க அக்குடிகள் குறித்த ஆய்வுகளும் மொ.அ.துரை அரங்கசாமி அவர்களால் மேற்கொள்ளப்பெற்றிருக்கின்றது. இவர் சேர, சோழ பாண்டியர்களைத் தமிழ்ச் சமூகத்தின் தொன்மைக் குடிகள் எனவும் அவர்களின் ஆளுமைக்குட்பட்ட

பகுதிகளில் வாழ்ந்த பிற குடிகளின் பெயர்களையும் “சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் பற்றிய ஆய்வில் குறிப்பிட்டுள்ளார் என்பதும் நோக்கத்தக்கது.

மேலும், பல்வேறு பொருண்மைகளில் வழங்கப்பட்ட இச்சொல் பண்டைக்காலத்தில் மக்கள் நிலப்பகுதிகள் தோறும் தங்கி நிலைத்து வாழ்ந்த போது ஒத்த பழக்க வழக்கங்களைக் கொண்ட குடிகள் அனைவரையும் சுட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்றும் சங்க காலத்திலும் பல்வேறு பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்ட இச்சொல், அடுத்தடுத்த காலங்களில் நிலப்பாகுபாடு தோற்றம் பெற்ற பின்பு ஒவ்வொரு பிரிவினரும் தங்களுக்கெனத் தனித்தப் பண்பு நலன்களோடு வாழத் தொடங்கியமைச் சுட்டியது. இதன்படி, மக்கள் அனைவரும் ‘குடி’ என்ற சொல்லால் வழங்கப்படலாயினர்”[16] என்னும் த.தனஞ்செயன் அவர்களின் கூற்றும் கவனிக்கத்தக்கது. குடிகள் என்பதற்கு,

“கற் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்தகுடி”[17]

என்று தமிழினத்தின் தொன்மையினைக் குறிப்பிட முனைந்த பண்டை இலக்கணத்தார் ‘குடி’ என்ற சொல்லினை மக்கள் தொகுதியினைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகின்றது. ‘குடி’ எனும் சொல் சங்க காலத்தில் மக்கள் கூட்டத்தைக் குறித்தது. குழு, ஊர், குடும்பம், வீடு என்ற சொல் சங்க இலக்கியங்களில் இரு நூற்றி ஐம்பத்து எட்டு இடங்களில் ஆளப்பட்டுள்ளது”[18] என்று பெ.மாதையன் குறிப்பிடுகிறார்.

குடி என்பதை “இரத்த உறவுடையபொருட்களைச் சுட்டும் குடி, குலம், திணை என்ற சொற்கள் இனம் என்ற சொல்லோடு நெருங்கியத் தொடர்புடையன”[19] என்று ப.கிருஷ்ணன் மற்றும் “குடி என்பதற்கு, கூட்டம் வாழிடம் என்ற இரு பொருள் உண்டு குடி என்பது தொடக்கத்தில் ரத்த உறவு கொண்ட மக்கள் கூட்டத்தையே குறித்திருக்க வேண்டும். காலப்போக்கில் குடிகள் இணைந்ததைக் குறித்திருக்க வேண்டும். அதன் பின் தங்கியிருந்த இடத்தைக் குறித்திருக்க வேண்டும்”[20] என்ற தி.சுப்பிரமணியன் அவர்களின் கூற்றுக்களைச் சு.இராமர் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு மேற்கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் ‘குடி’ என்பது மக்கள் கூட்டத்தையும் குழுவையும் குடியிருப்பையும் குடும்பத்தையும்

குலத்தையும் பழமையான குடிச்சிறப்பையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது என்பதை அறிய முடிகின்றது. இதனடிப்படையில் ‘குடி’ என்ற சொல் பல நிலைகளில் பொருள் தருவதாக அமையினும் ‘மக்கள்’ எனும் பொருளே இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குடிகள் எனும் மக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து நிலப்பரப்பில் வாழும் மாந்தர்களாவர். மேலும் குடிக்கு இணைச் சொற்களாக இல், இடம், திணை, குலம் போன்றவை காணப்படுகின்றன. திணை என்பது நிலத்தையும் குறிக்கின்றது. இவர்கள் ஐந்து நிலத்தில் வாழ்ந்தாலும் நிலம் சார்ந்த அம்மாந்தரை திணை சார்ந்த குடிகளாகவே குறிப்பிடுவர். மேலும், “திணை என்னும் சொல்லுக்குக் ‘குடி’ என்றும் ஒரு பொருள் உண்டு. குடிகள் வாழும் நிலமும் ‘திணை’ எனப்பட்டது”[21] என்ற கே.கே பிள்ளையின் கூற்றும் இங்குக் குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் திணைசார் குடிகளையும் மற்ற தொழில்சார் குடிகளையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. மேலும் திணை, தொழில் குடிகளை அறிஞர்கள் பலவாறாகக் குறிப்பிட்டுள்ள வகைமையைப் பின்வருமாறு காணலாம்.

### 1.3 குடிகளும் வகைப்பாடும்

அறிஞர்கள் குடி எனும் சொல்லுக்குப் பல பொருள்களைக் குறிப்பிடுவதோடு, பலவகையாகவும் வகைப்படுத்தி வந்துள்ளனர். அத்தகைய வகைப்பாட்டினை ஆராயலாம்.

#### 1.3.1 உ.வே.சாமிநாதையர் கருத்து

புறநானூற்றுக்கு உரையெழுதிய உ.வே.சாமிநாதையர் ‘சாதிகள்’ எனும் தலைப்பின் கீழ் திணைசார்ந்த மக்களையும் தொழில் சார்ந்த மக்களையும் வகைப்படுத்தியுள்ளார். “அந்தணர், அரசர், அளவர், இடையர், இயவர், உப்புவணிகர் (உமணர்), உழவர், எயிற்றியர், கடம்பர் கடைசியர், கம்மியர், களமர், கிணைஞர், கிணைமகள், குயவர், குறத்தியர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், துடியர், தேர்ப்பாகர், நுளையர், பரதவர், பறையர், பாடினி, பாணர், பாணிச்சி, புலையர், பூண்செய் கொல்லர், பூவிலைப்பெண்டு, பொதுவிலை மகளிர், பொருநர், மடையர், மழவர், மறத்தியர், மறவர், மோரியர், யவனர், யாழ்ப்புலவர், யானைப்பாகர், யானை வேட்டுவர், வடவடுகர், வண்ணாத்தி, வணிகர், வலைஞர், விலைப்பெண்டிர், வேடர்”[22] எனும் ஐம்பதுக்கும் மேற்பட்ட குடிகளைக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வகைப்பாட்டை ஆராயும் போது சாமிநாதையர் குடி என்பதற்குச் ‘சாதிகள்’ எனும் பொருளைக் கையாண்டு வகைப்படுத்தியுள்ளார். இங்கு ஐம்பதுக்கும் மேற்பட்ட பிரிவுகளைத் தனித்த ஒவ்வொரு சாதியாகக் குறிப்பிடுவது ஏற்புடையதன்று.

### 1.3.2 கே.கே.பிள்ளையின் கருத்து

கே.கே.பிள்ளை ‘தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்’ எனும் நூலில் தமிழகத்தில் சங்க காலத்திலேயே பல குலங்கள் மக்கள் செய்து வந்த தொழிலுக்கு ஏற்பத் தோன்றியிருந்தன எனக் கூறியுள்ளார். “அளவர், இடையர், இயவர், உமணர், உழவர், எயினர், கடம்பர், கம்மியர், களமர், கிளைஞர், குயவர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், துடியர், தேர்ப்பாகர், துணையர், பரதவர், பறையர், பாணர், புலையர், பொருநர், மழவர், வடவடுகர், வண்ணார், வணிகர், வேடர்”[23] எனப் பல குலங்கள் தோன்றியிருந்தமையைக் குறிப்பிடுகிறார். மேலும், கே.கே.பிள்ளை குடிகளைக் குலங்கள் எனக் கூறியிருப்பதும் நோக்கத்தக்கது.

### 1.3.4 தேவநேயப்பாவாணரின் கருத்து

குடிகளைக் குலங்கள் என்றே குறிப்பிட்டுள்ளனர். இவர் தொழிற்குலங்கள் எனும் தலைப்பின் கீழ், “அகவர் (சூதர்), அங்காடி வணிகர் (நாளங்காடி வணிகர், அல்லங்காடி வணிகர்), அச்சுக்கட்டிகள், அடியோர், அண்டர் (இடையர்), அரசர் (கிழவர், வேளிர், மன்னர், கோக்கள், வேந்தர்), அளவர், ஆட்டுவணிகர், ஆயர் (கோவலர், கோவர்), ஆறலைக் கள்வர், இராக்கடைப் பெண்டிர் (தெருப்பொதுமகளிர்), இயவர் (இசைக்கருவியாளர்), இலையமுதிடுவார் (இலைவாணியர்), உமணர், உழவர் (கடையர்), உறைகாரர், எயினர், எலிமயிர், நெசவர், ஓசுநர் (மீகாமர்), ஓவர் (மாகதர்), கடம்பர், கடகையர் (நாழிகைக்கணக்கர்), கண்ணுளர், கண்ணுளாளர் (சித்திரக்காரர்), கணிகையர் (நாடகக்கணிகையர், கோவிற்கணிகையர்), கணியர், காலக்கணிதர், கம்மியர் (கம்மாளர்), களகர் (கருங்களமர், வெண்களமர்), கன்னார் (செப்புக்கன்னார், வெண்கலக்கன்னார்), காழியர் (பிட்டு வணிகர்), கானவர், கிணைவர் (கிணைப் பொருநர்), கிழியினும் கிடையினும் பல தொழில் செய்வார், குயிலுவர் (தோலிசைக் கருவிகள் செய்வோர்), குறவர், குன்றவர், குறும்பர், கூத்தர், கூல வாணிகர், கூவியர் (அப்ப வணிகர்), கொல்லர், கோடியர் (கழைக்கூத்தர்),

சங்கறுப்போர், சாக்கையர், சாலியர் (நெசவர்), தச்சர், துடியர், தேர்த்தச்சர், தையற்காரர் (துன்னகாரர், சிப்பியர்), நுண்வினைக் கம்மியர், நுளையர், பட்டினவர் (மீன்விலைப் பரதவர்), பட்டுச்சாலியர், படையுள்படுவோன் (சின்னமூதி), பரதவர் (செட்டிகள்), பரதவர் (பரவர்), பரத்தையர் (இற்பரத்தையர், சேரிப்பரத்தையர்), பழையர்(கள் விற்கும் வலையர்), பறம்பர் (தோலின் துன்னர்), பறையர் (பறையறைந்து விளம்பரம் செய்வோர்), பாசவர் (ஊன் விற்போர்), பாணர் (இசைப்பாணர், குழற்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர்), பார்ப்பார், புலையர், பூ விற்பார், பொருநர் (ஏர்க்களம் பாடுநர், போர்க்களம் பாடுநர்), பொன்வணிகர், மணவர் (வாசவர்), மணிக்கோப்போர், மணி நகைத் தட்டார், மரக்கலக்கம்மியர், மழவர் (மழநாட்டு மறவர்), மறவர் (பாலை வாணர்), மாலைக்காரர், வண்ணார், வயிரியர் (ஒருவகைக் கூத்தர்), வலைஞர், வள்ளுவர் (அரசர் விளம்பரப் பறையர்), விலை மகளிர் (சிறு விலை மகளிர், பெருவிலை மகளிர்)”[24] எனத் திணைத் தொழில் குடிகளைக் குறிப்பிட்டு அவர்களுக்குள்ள பிரிவுகளையும் பிறப் பெயர்களையும் வகைப்படுத்திக் கூறியுள்ளார்.

### 1.3.5 பெ.மாதையனின் கருத்து

பெ.மாதையன் திணைமக்கள் மற்றும் தொழில் மக்கள் குறித்த வகைப்பாட்டை “குறிஞ்சியில் குறவர், குறத்தி, எயினர், எயிற்றியர், முல்லையில் ஆயர் (இடையர், கோவலர்), ஆய்ச்சியர், மருத நிலத்தில் உழவர், உழத்தியர், நெய்தலில் உமணர், உமட்டியர், பரதவர் எனும திணைமக்கள் மற்றும் தச்சர், கொல்லர், குயவர், நெசவாளர், பருத்திப்பெண்டு, பொற்கொல்லர், செம்பு வினைஞர், மரவேலை செய்யும் கம்மியர் எனும் பல்வேறு கைத்தொழிலாளர்கள் இருந்துள்ளதையும் பதிவு செய்துள்ளார். இவர்களோடு கட்டில் பின்னும் இழிசினன் (இழிபிறப்பாளன்), ஆடை வெளுப்போர், புலைத்தி (வண்ணத்தி), பிணம் சுடும் புலையன், நீர் இறைக்கும் தொழுவர், நெல்லரியும் தொழுவர். உழவு வேலை செய்யும் கடைசியர், விறகு விற்போர், பாசவர் எனும் ஆட்டு வணிகர், சாணை பிடிப்போர், எண்ணெய் ஆட்டும் செக்கர், சங்கை வளையலாக அறுப்போர், பொன்னை உரைத்துக் காணும் பொன் வணிகர், ஆடை விற்போர், முத்து சங்கு குளிப்போர், பூ, சுண்ணம், வெற்றிலைப்பாக்கு போன்ற பண்டங்கள் விற்கும் பல்வேறு சிறு வணிகர்கள் எனும் தொழிற்பிரிவினரையும் இத்தகைய வினைஞர்களோடு பறையன், துடியன், பாணன், கடம்பன், கூத்தர், விறலியர்,

கட்டடக் கலைஞர், ஓவியர்"[25] எனும் கலைஞர்களும் வாழ்ந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார். இங்கு, திணைமக்கள், கைத்தொழில் செய்வோர், தொழிற் பிரிவினரையும் இத்தகைய வினைஞர்களோடு பறையன், துடியன், பாணன், கடம்பன், கூத்தர், விறலியர், கட்டடக் கலைஞர், ஓவியர்"[26] எனும் கலைஞர்களும் வாழ்ந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார். இங்கு திணைமக்கள், கைத்தொழில் செய்வோர், தொழிற்பிரிவினர், கலைஞர்கள் எனப்பல பிரிவுகளாக மக்களை வகைப்படுத்திக் கூறியுள்ளமை நோக்கத்தக்கது.

### 1.3.6 வே.சிவசுப்பிரமணியனின் கருத்து

நற்றிணைக்குப் பின்னாளில் உரையெழுதிய வே.சிவசுப்பிரமணியன் அவர்கள் அந்நூலை ஆராய்ச்சி செய்து அந்நூலில் தொழில் பற்றிய சாதிப் பிரிவினைகள் பரக்க உள்ளன எனக் கூறி அவற்றைக் "கிணையர், இடையன், உமணர், கம்மியர், கானவன், குறவர், கொல்லன், சென்னியர், பரதவர், பாணன், பார்ப்பனர், புலையன், வடுகர்"[27]என குடிகளைச் சாதிப்பிரிவுகள் என்று குறிப்பிட்டுள்ளார்.

### 1.3.7 ந.சுப்ரமண்யனின் கருத்து

ந.சுப்ரமண்யன் 'சங்க கால வாழ்வியல்' எனும் தமது நூலில் போர்க்குடிகள் எனச் சிலப் பிரிவினரைக் குறிப்பிட்டுள்ளார். "போர்க்குடிகள் துடியர், பாணர், பறையர் மற்றும் கடம்பர். இவர்கள் துடியரும் பறையரும் முரசு கொட்டுவார், பாணர் பாட்டிசைத்துத் திரிவோர், கடம்பர் கடற்கொள்ளைக்காரர்கள்"[28] என விளக்கம் அளித்து நான்கு குடிகளைப் பற்றிக் கூறியுள்ளமை கவனிக்கத்தக்கது. அது மட்டுமல்லாது வெ.கனகசபையார் குறிப்பிட்டுள்ள உழவர், ஆயர், பொற்கொல்லர் போன்ற தொழிலர், படை ஆட்சிகள், வலையர், புலையர் (ஆடு, மாடு வெட்டுவோர், அரசாணை மேற்கொண்டு கொலைத் தண்டனை நிறைவோற்றுவோர் எனும் ஒருவகைச் சாதிப் பாகுபாட்டையும் குறிப்பிட்டுள்ளார்.

க.காந்திதாசன் 'சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல்' எனும் நூலில் கலைக் குடிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். "சங்க காலக் கலைஞர்கள் பாணர். பாண்மகன், பொருநர், வயிரியர், அகவுநர், ஆடுநர், இயவர், கண்ணுளர், கலப்பையர், கூத்தர், கோடியர், துடியர், பறையர்,

பரிசிலர், பாடுநர், முழவர், பாடினி, பாண்மகள், பாடுமகள், ஆடுமகள் விறலியர்"[29] என்று அழைக்கப்பட்டதைக் கூறுகின்றார்.

"குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் முதலிய பரந்த நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள், தாம் வாழ்ந்த நிலத்தின் தன்மை, செய்த தொழில் ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபட்டிருந்தனர். இத்தகைய மக்கள் சமூகத்தினரை 'வாழ்நிலப் பரப்பு வழிச் சமூகங்கள்' என்றும் அவற்றை நிலைக்களனாகக் கொண்டே தமிழ்ச் சமுதாயம் தோன்றியது என்றும் கூறுவர். வாழ்நிலப் பரப்புவழிச் சமூகங்களான திணைசார் குடிகளை அடுத்துத் தோன்றியவையே குயவர், கொல்லர், தச்சர், கூத்தர், உள்ளிட்ட தொழில் வழிக்குடிகளாகும். இவற்றையே பழமையான தமிழ்க்குடிகள் என்று இனம் காட்டுகின்றனர் என்றும் மேற்கூறப்பட்ட பழமையான குடிகளுள் குறிப்பிட்ட நான்கு குடிகளை மட்டும் தனித்துச் சிறப்பித்துக் கூறுவர். துடியன், பாணன், பறையன், கடம்பன் முதலிய இந்நான்கு குடிகளும் திராவிடருக்கு முற்பட்ட பழங்குடி மக்களாவர் என்றும் இந்நான்கு அல்லது குடியுமில்லை என்பதால் 'ஆரியர் கலப்பில்லாத ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழங்குடி மக்களை இப்பெயர்கள் சுட்டுவதாக இருக்கலாம் என்றும் அறிஞர்கள் கருதுவர்"[30] எனும் (தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு) கருத்தை ஆ.தனஞ்செயன் தமது கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார். மேலும் இந்நான்கு குடிகளுக்கும் வழங்கும் பெயர்கள் அடிப்படையில் தொழிலை ஆதாரமாகக் கொண்டவை. துடியை முழக்குபவன் 'துடியன்' என்றும் பண்ணினை இசைப்பவன் 'பாணன்' என்றும் பறையை அறைபவன் 'பறையன்' என்றும் அழைக்கப்பட்டனர். 'கடம்பன்' என்னும் குடிப்பெயர் குடமுழா என்னும் கருவியை அறைபவனுக்கு வழங்கிய பெயராகும். இவ்வாறு ஒவ்வொரு குடிப்பெயரும் இசைக்கலையோடு தொடர்புடைய தனித்தன்மை மிக்க பெயராகத் திகழ்கிறது எனவும் குறிப்பிடுகின்றார்.

மேலும், "அரசின் உரிமை பெற்ற நால்வகைக் படிகளைப் போல, பாணர்களையும் சேர்த்து மற்றொருநால்வகைக் குடிகளும் கூட அரசின் புரவலாதரவு பெற்றுக் கலைப்பணி ஆற்றி வந்தன. அவை கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகிய நிகழ்கலைக் கலைஞர்களின் குடிகளாகும்"[31] என்கிறார் ஆ.தனஞ்செயன். மேலும் இவர்களை அலைக்குடிக்கலைஞர்கள் எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு திணை, தொழில் அடிப்படையிலான

குடிகள் பலவற்றை அறிஞர்கள் பலவாறாக வகைப்படுத்தி வந்திருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

மொ.அ.துரை அரங்கசாமி அவர்கள் மக்கள் வாழ்ந்த பகுதிகளைக் கொண்டு ஒரு வகைப்பாட்டைக் குறிப்பிடுகின்றார். “சேர நாட்டில் வாழ்ந்த குடிகள்: குடவர்,குட்டுவர், அதியர், உதியர், மலையர், மழவர், மறவர், இளையர், பூழியர், வில்லோர், கொங்கர், குறவர். சோழ பாண்டிய நாட்டில் வாழ்ந்த பிற குடிகள், பரதவர், கோசர். மூவேந்தர் ஆட்சியில் அடங்காத குடிகள்: ஆவியர்,ஓவியர், வேளிர், அருவர், அண்டர், இடையர்”[32] எனும் அ.துரை அரங்கசாமி அவர்களின் இப்பாகுபாட்டை த.தனஞ்செயன் அப்படியே ஏற்றுக்கொண்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்க சங்ககாலச் சமூகத்தில் குடிகள் எனும் சொல் சாதியைக் குறிப்பதாகவும் குலங்களைக் குறிப்பதாகவும் தொழிலைக் குறிப்பதாகவும் அமைந்திருப்பதைக் காட்டுகிறது. மேலும், திணை சார்ந்த மக்கள் மட்டுமல்லாது தொழில் சார்ந்த மக்களும் பிற அயல்நாட்டு மக்களும் வாழ்ந்து வந்திருப்பதை அறிய முடிகின்றது. மேலும், அறிஞர்கள் வகைப்படுத்தியுள்ள குடிகள் போன்று பலவிதமான குடிகள் சங்ககாலச் சமூகத்தில் வாழ்ந்துள்ளனர் எனலாம்.

## 1.4 முடிவுரை

- ‘குடி’ எனும் சொல் பல்வேறு காலச் சூழலுக்கேற்ப பொருள் மாற்றம் அடைந்துள்ளது. சங்க இலக்கியத்தில் ‘குடி’ என்னும் சொல்லுக்குக் குடும்பம், மனை, குலம், குடியிருப்பு, குடிமக்கள் எனப் பலபொருட்கள் வழக்கிலிருந்துள்ளன. அவையனைத்தும் சேர்ந்து வாழ்ந்த மக்களையே சுட்டுகின்றன.
- குடி எனும் சொல் மக்கள் வாழும் இடம், குடும்ப அமைப்பு, மக்கள் பாகுபாடு ஆகிய பொருண்மைகளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளமையைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. எனினும் உரையாசிரியர்கள் சங்கப்பாக்களின் சூழலுக்கேற்ப பொருள் விளக்கம் தந்துள்ளனர்.
- ‘குடி’ என்பது மக்கள் கூட்டத்தையும் குழுவையும் பழமையான குடிச்சிறப்பையும் குறிக்கப் பயன்பட்டு, நாளடைவில் மக்களைக் குறிக்கும் சொல்லாக மாற்றம் பெற்றுள்ளது. குடி என்பதை மக்கள் எனும் பொருளிலேயே இவ்வாய்வில் பயன்படுத்தப்படுத்தப்பட்டுள்ளது.

- குடி என்னும் சொல்லுக்கு இணைச் சொற்களாக இல், இடம், திணை, குலம் போன்றவைக் காணப்படுகின்றன. குடிகள் வாழும் நிலத்திற்குத் திணை என்பதும் பெயராக அமைகின்றது. திணை என்பது நிலத்தைக் குறிக்கக்கூடிய சொல்லாகும். எனவே நிலம் சார்ந்த மாந்தரையும் திணைசார்ந்தக் குடிகளாகக் குறிப்பிட்டுள்ளமை தெளிவு.
- சங்ககாலச் சமூகத்தில் வாழ்ந்த குடிகளைத் திணை குடிகள், தொழில் குடிகள், போர் குடிகள், கலைக் குடிகள் என வகைப்படுத்தலாம். திணைசார்ந்த குடிகளில் குறவர், இடையர், உழவர், பரதவர், மறவர் போன்றோரும் தொழில் குடிகளில் குயவர், தச்சன், புலையர், வண்ணார் போன்றோரும் கலைக்குடிகளாகப் பாணர், கூத்தர், பொருநர் போன்றோரும் பலரையும் போர்க்குடிகளாகத் துடியன், பாணன், பறையர், கடம்பர் போன்றோரும் அடங்குவர் எனலாம்.

**சான்றெண் விளக்கம்**

1. சந்தியா நடராஜன் (பதிப்பாளர்), மதுரைத் தமிழ்ப்பேரகராதி, ப.651.
2. கழகத் தமிழ் அகராதி, ப.350.
3. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.456.
4. அ.குமாரசுவாமிப்பிள்ளை, இலக்கியச் சொல்லகராதி, ப.87.
5. கதிரைவேற்பிள்ளை, தமிழ்ச்சொல்லகராதி, ப.871.
6. விஸ்வநாதப்பிள்ளை, தமிழ் ஆங்கில அகராதி, ப.110.
7. மாருதிதாசன் (தொகுப்பாளர்), நர்மதாவின் தமிழ் அகராதி, ப.278.
8. ச.பவானந்தம்பிள்ளை, பவானந்தர், தமிழ்ச்சொல்லகராதி, ப.143.
9. விஸ்வநாதபிள்ளை, தமிழ் ஆங்கில அகராதி, ப.259.
10. அடோன் தமிழ் ஆங்கில அகராதி, ப.168.
11. இரா.சாரங்கபாணி(ப.ஆ), சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், ப.363.
12. சுராவின் தமிழ் ஆங்கில அகராதி, ப.339.
13. கழகத் தமிழ் அகராதி, ப.351.
14. ச.பவானந்தம்பிள்ளை, முந்நூல், ப.143.
15. கார்த்திகேசு சிவத்தம்பி, இலக்கணமும் சமூக உறவுகளும் பக்.28-29.
16. த.தனஞ்செயன், தமிழகத்தில் புரத வண்ணார்கள், பக்.51-52.
17. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, ப.39.
18. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.58.
19. சு.இராமர், திணைமரபுகளும் திணைக்குடிகளும், ப.20.
20. மேலது, பக். 20-21.
21. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.130.
22. உ.வே.சாமிநாதையரவர்கள், புறநானூறு மூலமும் உரையும், ப.119.
23. கே.கே.பிள்ளை, முந்நூல், ப.161.
24. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழர் வரலாறு, பக்.306-307.
25. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.118.
26. மேலது, ப.118.
27. வேங்கடராமன்(ப.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப.46.
28. ந.சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.346.
29. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.26.

30. ஆ.தனஞ்செயன், ஆற்றுப்படை நூல்கள் காட்டும் அலைக்குடிக் கலைஞர்கள் வாழ்வியல், ப.33.

31. மேலது, ப.34.

32. த.தனஞ்செயன், தமிழகத்தில் புரத வண்ணார்கள், பக்.81-82.

# பத்துப்பாட்டு இலக்கியங்களில் குடிகள்

## 2.0 முன்னுரை

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்ச் சமூகத்தினை அறிவதற்குப் பழமை வாய்ந்த இலக்கியங்கள் சிறந்த வரலாற்று ஆதாரமாக அமைகின்றன. அவ்வகையில் பொற்காலம் என வரலாற்று ஆசிரியர்களால் புகழ்ந்துரைக்கப்படும் சிறப்பினையுடையது சங்ககாலம். சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களால் இயற்றப்பட்ட இலக்கியங்கள் பலவாகும்.அவற்றுள் பத்துப்பாட்டு நீண்ட நெடும் பாட்டுக்களின் தொகையாகத் தனித் தன்மையுடன் திகழ்கின்றது. பத்துப்பாட்டு அகநூல்கள், புறநூல்கள், ஆற்றுப்படைநூல்கள் எனப் பல இலக்கிய வகைகளைக் கொண்டது. ஒவ்வொரு காலக்கட்டத்தைச் சேர்ந்த இலக்கியங்களும் அந்தந்தக் காலக்கட்டங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை, பொருளாதாரம், பழக்கவழக்கங்கள், தொழில்கள் ஆகியவற்றைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவ்வகையில் தமிழ் மக்களின் சமயம், பண்பாடு, அரசியல், பொருளாதாரம், சமுதாயம் ஆகியவற்றின் வரலாற்றுக் கருவூலமாய்த் திகழ்வது பத்துப்பாட்டு. எந்த ஒரு மனிதனும் தனித்து வாழ்தல் இயலாது. மக்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து வாழும் போது தான் சமூகம் உருவாகிறது. மக்கள் குழுவாக இணைந்து வாழ்தலே சமூக அமைப்பாகும். சங்ககாலச் சமூக அமைப்பினை வெளிப்படுத்தும் சிறந்த பெட்டகமாக பத்துப்பாட்டு நூல்கள் திகழ்கின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களைப்பற்றியும் அவர்கள் செய்து வந்த பல்வேறு தொழில்களைப் பற்றியும் இவ்விலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. பத்துப்பாட்டு நூல்களில் திணை அடிப்படையிலும் தொழில் அடிப்படையிலும் நிலவிய மக்கட் பாகுபாட்டையும் அதற்கான காரணங்களையும் இவ்வியல் விளக்க முற்படுகிறது.

சங்கத்தொகை நூல்களுள் முதன்மையாக வைத்து எண்ணப்படும் சிறப்பு வாய்ந்தது பத்துப்பாட்டு எனும் நூலாகும். பத்துப்பாட்டு நூறு அல்லது நூற்றின் மிக்க அடிகளால் ஆகிய பத்துத் தனித்தனி நூல்களைக் கொண்ட ஒரு தொகுப்பாகும்.

> "நூறடிச் சிறுமை நூற்றுப்பத்தளவே
> ஏரிய அடியின் ஈரமைப்பாட்டு
> தொடுப்பது பத்துப்பாட்டெனப்படுமே"[1]

என அதன் அடி எல்லையையும் “அதுவே அகவலின் வருமென அறைகுவர் புலவர்”[2] என அதன் இலக்கணத்தையும் பன்னிருபாட்டியல் கூறுகின்றது.

“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வள மதுரைக் காஞ்சி – மருவினிய
கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து”[3]

என்ற பழம்பாடல் ஒன்று பத்துப்பாட்டு நூல்கள் இன்னின்னவை என்பதை மிகத் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. “எந்த ஒரு சிறந்த இலக்கியமாக இருப்பினும் அதற்கு வாழ்வும் வளமும் இருநிலைகளிலிருந்து கிடைக்கின்றன. ஆராய்ச்சித் திறனில் தேர்ந்த அறிஞர்கள் அதன் நுட்பங்களையும் அழகுகளையும் கண்டு தெளியும் பொது வளம் கிடைக்கின்றது. இது மக்களை அடைந்து பரவும்போது வாழ்வு கிடைக்கிறது. வளம் எவ்வளவு அருமை வாய்ந்ததானும் அது மக்களால் நுகரப்படும் போதே வாழ்வு பெறுகின்றது”[4] என்று தண்டாயுதம் குறிப்பிடுகின்றார். “இலக்கியத்தின் முடிவானதும் இலட்சியமானதுமான வடிவமாகப் பாட்டே கருதப்படுகின்றது”[5] என்று வையாபுரிப்பிள்ளை கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. எட்டுத் தொகையுள் அகவல், கலிப்பா, பரிபா ஆகிய பல்வேறு பாவகைகளாலான பாடல்கள் காணப்பட, பத்துப்பாட்டுள் அகவற்பாவாலான பாடல்கள் மட்டும் மிகுதியாகக் காணப்படுவது பத்துப்பாட்டின் தனிச்சிறப்பு. மேலும் “பாவகையினால் பாட்டிற்குச் சிறப்பா அல்லது பாடப்பட்ட முறையினால் பா வகைக்குச் சிறப்பா என்று பிரித்தரிய முடியாத நிலையில் பா வகையும் பொருளும் உணர்த்தும் முறையும் பத்துப் பாட்டுப் பாடல்களில் பின்னிப் பிணைந்திருப்பதனால் பிற்காலத்தில் இதற்கு இலக்கணம் வகுத்தோர் பத்துப்பாட்டையே முன் மாதிரியாகக் கொண்டு இலக்கணம் வகுத்து விட்டனர்”[6] என இரா. தண்டாயுதம் சங்க இலக்கியம் என்ற தமது நூலில் குறிப்பிட்டிருப்பதும் பத்துப்பாட்டின் சிறப்பைக் காட்டுகிறது.

பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மலைபடுகடாம் என்ற கூத்தராற்றுப்படை என்னும் ஐந்தும் ஆற்றுப்படை நூல்களாக அமைந்துள்ளன. பத்துப்பாட்டில் பாதி ஆற்றுப்படை இலக்கியங்களாக விளங்குவதிலிருந்து அக்காலத்தில் இவ்விலக்கிய வகை பெற்றிருந்த செல்வாக்கை அறிய முடிகின்றது. முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு,

பட்டினப்பாலை ஆகிய இவை மூன்றும் அகப்பொருள் பற்றியன. மதுரைக் காஞ்சி புறப்பொருள் பற்றியது. நெடுநல்வாடை அகப்பொருள் புறப்பொருள் இரண்டும் கலந்த நூலாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த பத்துப்பாட்டு நூல்களின் அறிமுகத்தைப் பின்வருமாறு காணலாம். ஆற்றுப்படை என்பது சங்கச் சான்றோர் பாடிய பாட்டு வகைகளுள் ஒன்று. ஆற்றுப்படையாவது ஆற்றின் கண்படுப்பது ஆறு என்பது வழி படுப்பது செலுத்துவது அதாவது, ஒருவர் செல்ல வேண்டிய வழி துறைகளைச் சொல்லித் தெரிவித்து, அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாறு செலுத்துவது என்பதாகக் கூறுவர். இதனை,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"[7]

என்ற தொல்காப்பிய நூற்பா ஆற்றுப்படையின் இலக்கணத்தைச் சுட்டுகின்றது. ஒரு புரவலனிடம் சென்று பெரும்பொருள் பரிசிலாகப் பெற்றுவந்த பொருநர், பாணர், விறலியர், கூத்தர், புலவர் ஆகியோருள் ஒருவர். பரிசில் பெறாதார் ஒருவருக்குத் தாம் பெற்ற பெருவளத்தைச் சுட்டிக்காட்டி அதனை நல்கிய தலைவன்பால் செல்லுதற்குரிய வழி முறைகளையும் எடுத்துச் சொல்லி, அப்புரவலன்பால் செலுத்துவது ஆற்றுப்படை எனப்படும்.

### 2.1. பத்துப்பாட்டில் நிலப்பாகுபாடு

சங்க இலக்கியங்களின் கால வரிசையில் பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் பத்துப்பாட்டில் தமிழக நிலப்பெயர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையென முறையாக வழங்கப்பட்டுள்ளன.

"கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு அணிந்து" (மது: 300)
என்று குறிஞ்சி நிலத்தைப் பற்றியும்,

"முல்லை சான்ற புறவு அணிந்து" (மது: 285)
என்று முல்லை நிலத்தைப் பற்றியும்,

"மருதம் சான்ற தண்பணை சுற்றி" (மது: 270)
என்று மருத நிலத்தைப் பற்றியும்,

"நெய்தல் சான்ற வளம்பல பயின்று: ஆங்கு
ஐம்பால் திணையும் கவினி அமைவர" (மது: 325)

என்று நெய்தல் நிலத்தைப் பற்றியும்,

“பாலை சான்ற சுரம் சேர்ந்து” (மது: 314)

என்று பாலை நிலத்தைப் பற்றியும் மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் கூறியுள்ளமையை அறிய முடிகின்றது. சங்க இலக்கியங்களில் ஐந்து திணைகள் பண்டைத்தமிழரின் சமுதாய வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு திணையின் நில அமைப்புக்கு ஏற்றவாறு அந்நில மக்களின் வாழ்க்கை முறை வேறுபடுகின்றது. அவ்வகையில் ஐந்து திணை மக்களின் வாழ்வியலைப் பின்வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

## 2.2 குறிஞ்சி நிலம்

குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடமுமாகும். குறிஞ்சி என்பது ஒழுக்கத்தால் பெற்ற பெயர் எனவும் மலரால் பெற்ற பெயர் எனவும் இருவிதமான கருத்து நிலவுகிறது. “குறிஞ்சி என்பது பூவால் பெற்ற பெயர் அன்று அங்கு நிகழ்ந்த ஒழுக்கத்தால் பெற்ற பெயர்”[8] என இளம்பூரணர், மு.இராகவையங்கார் போன்றவர்கள் குறிப்பிடுவதை ந.பிச்சமுத்து தமது நூலில் எடுத்தாண்டுள்ளார். இவர்கள் கூறும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளக்கூடியவையாக இருந்தாலும் மலர்களைக் கொண்டுதான் நிலத்திற்குப் பெயர் சூட்டியிருத்தல் வேண்டும் என உரையாசிரியர்கள் கூறுகின்றனர். இதனை,

“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆர் அளவின்றே – சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”[9]

என்ற குறுந்தொகைப் பாடலில் கரிய கொம்புகளில் பூத்து விளங்கும் குறிஞ்சிப் பூக்களைக் கொண்டு மலைப்பகுதியில் பெரிய தேனை வண்டுகள் தொகுத்தற்கு இடனாகிய நாட்டையுடைய தலைவன் என உரையாசிரியர் வி.நாகராஜன் குறிப்பிடுகையில் மிகுதியான குறிஞ்சி மலர்களைக் கொண்ட மலைப்பகுதி மலைக்குரிய சிறப்பு குறிஞ்சி மலர் என்பதனை முதன்மைப்படுத்துவதாக அமைந்துள்ளது என்பார்.

### 2.2.1 குறிஞ்சி நில மக்கள்

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்களாகக் குறவர், குன்றவர், வேட்டுவர், கானவர், பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி எனக் குறிப்பிடப்படுகின்றனர். பல பாடல்களில் குறிஞ்சி நில மக்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பத்துப்பாட்டில் குறவன், கானவன் என்ற இரண்டு சொற்கள் மட்டுமே பெரும்பான்மையாகப் பேசப்படுகின்றன.

### 2.2.2 குறிஞ்சி நில மக்களின் குடியிருப்பு

மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சியில் வாழ்ந்த மக்கள் குறிய கால்களை நட்டுத் தினையரிந்த தாளால் குடிசை வேய்ந்து வாழ்ந்துள்ளதை,

"இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை" (குறி.153)

என்ற குறிஞ்சிப்பாட்டு வரி உறுதிப்படுத்துகின்றது. மேலும், குறவர்களின் குடில்கள் ஊகம்புல்லால் வேயப்பெற்றத் தன்மையை மலைபடுகடாம்(438-439) வரிகள் குறிப்பிடுகின்றன. "மலையில் வாழும் விலங்கினங்கள் உள்ளே நுழையாத அளவிற்குக் கோழிக்கூடு போன்ற குடில்களில் வாழ்ந்தனர் என்றும் மலைச்சரிவுகளிலும் மேடு பள்ளங்களாகிய நில அமைப்பு அறிந்து தங்களிடம் கிடைக்கக்கூடிய பொருட்களைக் கொண்டே தங்கள் குடில்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்ததையும் குறிப்பிடுகின்றார்"[10]. கு.இராசரத்தினம். இவற்றை ஆராயும்போது, குறிஞ்சி நிலத்தவர்கள் வாழும் குடியிருப்பு மாடமாளிகைகளாகவோ, சித்திர வேலைப்பாடுகளைக் கொண்ட குடியிருப்புக்களாகவோ இல்லை. மணம் கமழும் இயற்கை சூழ்ந்த மலையடிவாரங்களில் சிறு குடிசையில் வாழ்ந்துள்ளனர். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழிடம் சிறிய ஊராகவும், சிறு குடிசையையும் கொண்டுள்ளது எனத் திருமுருகாற்றுப்படை (194-196) வரிகள் குறிப்பிடுகின்றன. மேற்கூறியவற்றை நோக்க, இம்மக்களின் வாழிடம் இயற்கையான முறையில் அமைக்கப்பட்ட குடிசைகள் என்பது புலனாகின்றது.

### 2.2.3 குறிஞ்சி நிலமக்களின் உணவு

மனிதன் உயிர் வாழ இன்றியமையாத பொருள் உணவு. பண்டைய மனிதனது முதல் தொழில் உணவு தேடல். அவன் இயற்கையாய்க் கிடைத்த காய்கள், விதைகள் மற்றும் கிழங்குகளை உணவாக உட்கொண்டுள்ளான். பின்னர் பறவைகளையும் விலங்குகளையும் வேட்டையாடி அவற்றின் இறைச்சியைப் பதப்படுத்தாமலே உண்டுள்ளான். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் மலையில் விளைந்த தினை, மூங்கிலரிசி, கிழங்கு வகைகள், காட்டு விலங்குகளின் இறைச்சி ஆகியவற்றையே உணவாக உட்கொண்டதை,

"தேன் நெய்யோடு கிழங்கு மாறியோர்
மீன் நெய்யொடு நறவு மறுகவும்" (பொரு: 214-215)

என்ற பொருநராற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடலில் குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் உண்டு, எஞ்சியவற்றைப் பிற நிலத்தார்க்கு விற்று மீன், நெய், கள் வாங்கிச் சென்றுள்ளமையை அறியமுடிகிறது. நன்னனது மலைப்பகுதியில் வாழ்ந்த குறிஞ்சிநிலத்தார் தினைச்சோறும் நெய்யில் வெந்த இறைச்சியும் உண்டதை மலைபடுகடாம் (168-169), (152-153) வரிகள் குறிப்பிடுகின்றன. இவ்வரிகள் தேன், கிழங்கு, பன்றி மற்றும் மற்ற விலங்குகளின் தசை ஆகியவற்றைத் தம் வட்டியில் வைத்திருந்த கானவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. மேலும், நெல்லாற் சமைத்த கள்ளையும் தேனால் செய்து மூங்கிற் குழாய்க்குள் நிரப்பிய கள்ளையும் பருகியுள்ளனர். அருவி நீரினால் அடித்து வரப்பட்ட பலாப்பழத்தின் முதிர்ந்து உதிர்ந்த பலாக் கொட்டை, மா, புளி நீர், மோர் ஆகியவற்றைக் கொண்டு கலந்த குழம்பையும் மூங்கில் அரிசிச் சோற்றையும் உணவாக உட்கொண்டுள்ளதை, மலைப்படுகடாம் (171-182) வரிகள் குறிப்பிடுகின்றன. “மலை நிலத்துக் குறவர்கள் தாம் வேட்டையாடிய உடும்பிறைச்சி, கடமானிறைச்சி, பன்றியிறைச்சி முதலியவற்றை உண்டனர். தேக்கள் தேறலை மூங்கிற்குழாயில் இட்டு அருந்தினர். மேலும் தாமே சமைத்த நெல்லால் ஆகிய கள்ளையும் உண்டனர். மூங்கிலரிசியால் சமைத்த உணவைப் பலாக்கொட்டை மாவோடு கலந்து உண்பர்”[11] எனத் தட்சிணாமூர்த்தி குறிப்பிடுவதும் “குறிஞ்சி நிலத்தார், பெண் நாய் கடித்த உடும்பின் இறைச்சியையும் கடமான் இறைச்சியையும் பன்றி இறைச்சியையும் உண்டனர். நெல்லாற் சமைத்த கள்ளையும் தேனாற் செய்து மூங்கில் குழையுள் முற்றிய கள்ளையும் பருகினர். பலாக்கொட்டை, மா,புளிநீர், மோர் ஆகிய இவற்றைக் கொண்டு தயாரித்த குழம்பையும் மூங்கில் அரிசிச் சோற்றையும் உண்டனர்”[12] என மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் இணைத்துநோக்கத்தக்கன. மலைநாட்டைக் காவல் புரிந்த வீரர்களும் இறைச்சி மற்றும் கிழங்கை உண்டுள்ளனர். மலைமீது நடந்து சென்ற கூத்தர், தினைப்புனத்தைக் காவல் செய்யும் காவலனால் கொல்லப்பட்ட காட்டுப் பன்றியின் மயிரைப் போக்கி, மூங்கில் உராய்வால் பற்றியெறியும் நெருப்பில் அதனை வதக்கி, அப்பன்றியின் இறைச்சியைத் தின்று எஞ்சிய பகுதியை வழியுணவிற்காகவும் எடுத்துச் சென்றுள்ளனர். மேற்கூறியவற்றை நோக்க, குறிஞ்சி நில மக்கள் இயற்கையாய்க் கிடைத்த கிழங்கு, மூங்கிலரிசிச் சோறு,வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சி ஆகியவற்றையே உணவாக உண்டு வாழ்ந்துள்ளனர்.

### 2.2.4 குறிஞ்சி நில மக்களின் தொழில்

சங்க காலத்தில் தொழில்கள் அனைத்தும் ஐவகை நிலத்தை அடிப்படையாகக் கொண்டுதான் நடை பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் குறிஞ்சி நில மக்களின் தொழில்களாக வேட்டையாடுதல், தேனெடுத்தல், தினைப்பயிரிடுதல், கிழங்கு அகழ்ந்தெடுத்தல், தினைப்புனங்களைக் காத்தல் முதலியன குறிப்பிடப்பெற்றுள்ளன. மேலும் "குறிஞ்சி நிலத்து மக்கள் மலைச் சரிவுப் பகுதிகளையும் மலைமீது சமநிலமாயுள்ள பகுதியையும் விளைநிலமாக்குதல், மலை நெல் தினை முதலிய கூல வகைகளை விதைத்தல், தினைப்புனங்களைக் காத்தல், தேனெடுத்தல், கிழங்கு வகைகளைப் பயிராக்குதல், வேட்டையாடுதல் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தார்கள்"[13] என மா.இராசமாணிக்கனார் குறிஞ்சி நில மக்களின் தொழில்களைச் சுட்டிக்காட்டியுள்ளமையும் நோக்கத்தக்கது.

குறிஞ்சி நில மக்களின் முக்கியத் தொழில் வேட்டையாடுதல். "விலங்குகள் வளர்த்தல், பயிரிடுதல் முதலியனவற்றைவிட வேட்டைத் தொழில் சாலப் பழமையானதாகும் என்றும் பண்டைய மனிதன் முதன் முதலாக வேட்டையாடுதலையே மேற்கொண்டான்."[14] என்று மானிடவியலார் கூறுவதை கு.இராசரத்தினம் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு வேட்டைத் தொழில் என்பது பழமையான ஒன்றாக இருந்திருப்பதை அறிய முடிகின்றது. மேலும், ஒரு தொழிலை நிலத்தின் அமைப்பு மக்களின் நாகரிக நிலை, அறிவு முதிர்ச்சி, வாழ்க்கைத் தேவைகள், திறமையின் அளவு ஆகியனவே உருவாக்குகின்றன எனலாம். இயற்கைப் பின்னணியைக் கொண்டது குறிஞ்சி நிலம். அங்கு விலங்குகள் அதிகமாக உலவுகின்றன. இந்நிலமக்கள் நாகரிக முதிர்ச்சி இல்லாத கல்வி வாய்ப்பிற்கு அதிக இடமற்ற வாழ்க்கையை உடையவர்கள். உடல் வலிமையே அவர்களது முதன்மையான உடைமையாகும். விலங்குகளுக்கிடையே அச்சம் தரத்தக்க வாழ்க்கையை அவர்கள் கொண்டிருந்ததால் விலங்குகளை எதிர்த்துப் போராட வேண்டிய வலிமை இயல்பாகவே அவர்களுக்கு வந்து விடுகிறது. "கொடிய விலங்குகளைப் பார்த்து மனிதர்கள் எவ்வாறு அச்சமுறுகிறார்களோ அவ்வாறே வேட்டையாடும் மனிதர்களைப் பாரத்து விலங்குகளும் அச்சமுறுகின்றன"[15] என்று ராபர்ட் ஹென்றி கூற்றை கு.இராசரெத்தினம் குறிப்பிடுகின்றார். எனவே குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடும் தொழிலை மேற்கொள்ள நில அமைப்பும் உணவுத் தேவையுமே காரணம் என்பது

மறுக்க முடியாத உண்மை. இதனைப் பத்துப்பாட்டு நூல்களும் உறுதி செய்கின்றன. மலைப்பகுதியிலே வாழக்கூடிய குறவன் குழித் தோண்டி, அதில் பன்றியை விழ வைத்துக் கொன்ற தன்மையை, மதுரைக்காஞ்சி வரிகள் (294-295) குறிப்பிடுகின்றன. மரங்கள் மிகுதியாக உள்ள காட்டில் இரவில் விலங்குகள் சுற்றித்திரியும் இடத்தில் வில்லையுடைய குறவர்கள் திரிந்தமையை மலைப்படுகடாம் (271-275) வரிகள் குறிப்பிடுகின்றன. கூத்தரை ஆற்றுப்படுத்துவோர் மணம் கமழும் மலைப்பக்கத்து, சிறுகுடியில் வாழும் கானவரிடத்துச் செல்வீரானால் தேனையும் கிழங்கு வகைகளையும் பன்றி இறைச்சியையும் உண்ணத் தருவார்கள் என்றும் கானவர் வேட்டையாடிக் கொண்டு வந்த பொருட்கள் யாவற்றையும் யானைக் கொம்பினைக் காவு மரமாகக் கொண்டு அவற்றில் தொங்க விட்டிருப்பர் என்றும் மலைபடுகடாம் (151-155) வரிகள் கூறுவதிலிருந்து கானவர் வேட்டைத் தொழிலைச் சிறப்பாக மேற்கொண்டுள்ளனர் என்பது தெளிவாகிறது. மேலும், கானவர் வேட்டையாடிய பொருட்களையே உணவாகக் கொண்டுள்ளமையையும் அறிந்து கொள்ள முடிகின்றது. எனவே மேற்சுட்டிய பாடல் வரிகளின் மூலம் குறவர்கள் வேட்டைத் தொழிலை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தமை நன்குப் புலனாகிறது.

வேட்டைத் தொழிலோடு இந்நிலத்து மக்கள் கனிகள் காய்கள் கீரைகள் ஆகியவற்றைச் சேகரித்து உண்டனர். மேலும், இந்நிலத்து மக்கள் தோரை நெல், தினை இவற்றைப் பயிரிட நிலம் இல்லாத போது மணம் கமழ் சந்தன மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தி, அதில் தோரை நெல், வெண்சிறுகடுகு, இஞ்சி, மஞ்சள், மிளகு, அவரை போன்ற பல தானியங்களைப் பயிரிட்டு வாழ்ந்ததை மதுரைக்காஞ்சி (286-289) குறிப்பிட்டுள்ளமையை அறியலாம். மணமுள்ள அகில் சந்தன மரங்களை அழித்துத் திருத்திய மேட்டு நிலத்தில் விதைத்த சிறிய கதிர்களையுடைய தோரை நெல்லும் நீண்ட தாளினையுடைய வெண்சிறு கடுகும் ஐவனம் என்னும் வெண்ணெல்லோடு பிணக்கங் கொண்டு வளருமாறு செய்து இஞ்சி, மஞ்சள், பசிய மிளகுக் கொடி ஆகியவற்றையும் விளைவிப்பர்”[16] எனும் சசிவல்வி கூற்றும் குறிப்பிடத்தக்கது. இதில் ஐவன வெண்ணெல் என்பதற்கு மதுரைத் தமிழ்ப் பேரகராதி மலைநெல் அல்ல காட்டு நெல்”[17] என்று பொருள் கூறுகிறது. “சங்ககாலக் குறிஞ்சி நிலப் பொதுமக்கள் வெண்ணெல், ஐவன நெல், தோரை நெல், என்ற மூன்று வகையான நெல்லைப்

பயிரிட்டிருக்கின்றனர்”[18] என்றும் சந்தன மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தி விளைவிக்கும் முறை பழைய கற்காலம் முதலே இருந்து வந்ததை, “பயிரிடுவதற்கு முன் செழித்து வளர்ந்த சந்தனம் முதலிய மரங்களை எரித்து எரித்தவற்றின் சாம்பலையே உரமாகக் கொண்டு பயிரிடும் முறை பழைய கற்கால முறையாகும்”[19] என்றும் கு.இராசரத்தினம் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. இக்குன்றக் குறவர்கள் தமது உடல் உழைப்பினால் எள், தினை, அவரை, வரகு, நெல், வெண்சிறுகடுகு, இஞ்சி, கிழங்குகள், வாழை, மூங்கில் நெல், நாவல் பழம், உயவைக்கொடி, கூவைக் கிழங்குகள், மாமரங்கள், ஆசினி, பலா, ஐவன நெல், வெண் நெல், என விளைவித்து வாழ்ந்துள்ளதை மலைபடுகடாம் (104-139) வரிகள் குறிப்பிடுகின்றன.

குறவர்கள் மலைப்பகுதிகளில் விளைந்த பிரம்புக் கொண்டு அமைக்கப்பட்ட பரண்மேல் ஏறித் தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகளையும் பிறவற்றையும் கொண்டு கதிர்களைத் தின்ன வரும் கிளிகளைப் பகற்பொழுதில் ஓட்டிப் பாதுகாத்தமையைக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது. மேலும், இரவுப் பொழுதில் ஆண்களும் பகற்பொழுதில் பெண்களும் பாதுகாத்து வந்தமையையும் குறிஞ்சிப்பாட்டு (40-45) மதுரைக்காஞ்சி (291-293) பாடல்வரிகளால் அறியமுடிகிறது.

குறிஞ்சி நிலத்தார் தினைப் புனங்களில் யானை, புலி முதலிய விலங்குகளால் அழிவு நேராமல் காக்க கிளி முதலிய பறவைகளை விரட்டுவதற்கு மரங்கள் மேல் உயர்ந்த பரண்கள் அமைத்துள்ளனர். இப்பரண்களை ஆகாயத்தைத் தீண்டும் அளவுக்கு உயரமாக அமைப்பதால் அதில் அமருபவனைசேணோன் எனக்கூறியுள்ளனர். இப்பரண்கள் மலைப்பகுதியில் விளையக்கூடிய பிரம்புகளால் அமைக்கப்பட்டுள்ளன. பெண்கள் பறவைகள், இரை தேடிச் சென்று மாலையில் தங்களது இருப்பிடங்களை அடையும் பகற்பொழுதில் கதிர்களைத் தின்னவரும் கிளிகளை ஒலியெழுப்பி பாதுகாத்துள்ளமையை “புள் ஆர் இயத்து விலங்கு மலைச் சிலம்பின் வள் உயர்த் தெள்விளி இடை இடைப் பயிற்றி கிள்ளை ஒப்பியும்” (குறி.99-101) என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகள் குறிப்பிடுகின்றன. இல்வாழ்க்கையில் ஈடுபட்ட மகளிர் தம் கணவர்க்குத் துணையாய்ப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டனர். இல்லறப்பணிகளில் ஈடுபட்டனர் மணமாகாத

மகளிர் தினைப்புனத்தையும் பிற பயிர் நிலங்களையும் காவல் காத்தனர்”[20] என்ற மா.இராசமாணிக்கனாரின் கூற்றும் இதனை உறுதிப்படுத்துகிறது. ஆண்கள் தினைப் புனத்தில் புகுந்த களிற்றைப் பாம்பு போன்ற அழகிய தன் வில்லில் நாண் ஏற்றி அம்பு எய்து விரட்டியுள்ளனர். காடெல்லாம் பெரிய ஓசை எழும் வகையில் சீழ்க்கை ஒலியெழுப்பியும் களிற்றைத் தினைப்புனத்திலிருந்து வெளியேறச் செய்துள்ளமையை, குறிஞ்சிப்பாட்டு (156-165) வரிகளால் அறிந்து கொள்ளமுடிகின்றது. மேற்கூறியவற்றை நோக்க குறிஞ்சி நிலத்தார் தினைப்புனக் காவலுக்குக் கவண்கற்கள், வில், அம்பு, தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். மேலும், சீழ்க்கை ஒலியும் பாதுகாப்புக் கருவியாகப் பயன்பட்டுள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

குறிஞ்சி நிலத்தாரின் மற்றொரு சிறந்த தொழில் தேனெடுத்தல், இது உணவுப் பொருள்களில் சிறந்த ஒன்றாகவும் இருந்துள்ளது. மலைகளில் நிறைய தேன் கிடைத்துள்ளது. குறவர் உயர்ந்த மலையில் கண் ஏணி வழியாகச் சென்று தேனீக்கள் திரட்டி வைத்தத் தேனை எடுத்துக் கொண்டு வந்த செய்தியை மலைபடுகடாம் (315-318) வரிகள் குறிப்பிடுகின்றன. இங்குக் “கண்ணேணி என்பதற்குக் கணுக்களில் அடி வைத்து ஏறிச் செல்லும் படி அமைந்துள்ள மூங்கில், மலையுச்சியில் ஓங்கி வளர்ந்த மரத்தினுச்சியில் உள்ள தேனிறாலை அழிக்கும் பொருட்டுச் செங்குத்தான மலையில் ஏறுவதற்கு அதன் அயலில் இவ்விரு மூங்கில்களைக் கூட்டி நிறுத்தியமைப்பது”[21] என விளக்குகிறார். மா.இராசமாணிக்கனார். இக்கூற்றுக்கேற்ப குறிஞ்சி நிலத்தார் உடல் உழைப்பினையே முதன்மையாகக் கொண்டு இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொண்டுள்ளனர் என்பது திண்ணம்.

குறிஞ்சி நிலத்துத் தலைவன் தமது வலிமையால் பகைவரது நாட்டை கொள்ளையடித்து உண்ணும் இயல்புடையவன். இவன் வேட்டைக்குச் செல்லும் நாய் போல காவலர்களோடு சென்று பகை மன்னருடைய பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வந்ததாக, பெரும்பாணாற்றுப்படை (பெரு: 137-141) வரிகள் குறிப்பிடுகின்றன. அம்பினை உடைய கானவர்கள் தங்கள் நிலத்தில் பாறைகளைச் சார்ந்த சிறிய வழியைக் கடப்பவர்களுக்கு இடையூறு இல்லாது காவல் புரிந்தமையை மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது. இதனை,

"படுத்து வைத்தன்ன பாறை மருங்கின்
எடுத்து நிறுத்தன்ன இட்டு அருஞ் சிறுநெறி
தொடுத்த வாளியர், துணைபுணர் கானவர்
இடுக்கண் செய்யாது இயங்குநர் இயக்கும்" (மலை : 15-18)

"பாடு இன் அருவிப் பயம் கெழு மீமிசை
காடு காத்து உறையும் கானவர் உளரே" (மலை: 278-79)

ஆகிய வரிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. குறிஞ்சி நில மக்கள் தங்களது உயிரைப் பணயம் வைத்து வேட்டையாடி, பயிரிட்டு, காத்து பிறருக்கும் உதவிபுரிந்து வாழ்ந்துள்ளனர். மேலும் இவர்கள் தங்களை விட மேம்பட்டுச் சிறப்புடன் வாழ்ந்த மன்னர்கள், சிற்றரசர்கள் குடித்தலைவாகள் என அனைவருக்கும் தேவையானவற்றைச் செய்து கொடுத்து உழைக்கும் மக்களாகவே இருந்து வந்துள்ளனர். இதனைக் குறிஞ்சிப்பாட்டு, சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி போன்ற நூல்கள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன. குறிஞ்சி நிலத்துக்குள் குறவர் - குறத்திகள், கானவர் - கொடிச்சியர் என்ற இரு பிரிவினர் வாழ்ந்துள்ளமையைக் காணமுடிகின்றது. குறிஞ்சி நிலத்துத் தலைவனாக நல்லியக் கோடன் விளங்கியதைச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. நல்லியக் கோடனது மலையின் இயல்பை மகளிர் கூந்தலைப் போன்று மயில் தன் தோகையை விரித்து ஆடுதற்குக் காரணமான மேகங்கள் இடையே தவழ்கின்றமலை. அம்மலை நீண்ட மூங்கில் மரங்கள் நிறைந்ததும் எளிதில் ஏறுதற்கு அரிதான சிறப்பு வாய்ந்ததுமாகவிளங்கியமையை,

". . . . . . . . . . மென்தோள்
துகில் அணி அல்குல் துளங்கு இயல் மகளிர்
அகில் உண விரித்த அம்மென் கூந்தலின்
மணிமயில் கலாபம் மஞ்சு இடைப் பரப்பி
துணிமழை தவழும் துயல் கழை நெடுங்கோட்டு
எறிந்து வரும் இறந்த ஏற்று அருஞ் சென்னிக்
குறிஞ்சிக் கோமான், கொய்தளிர்க் கண்ணி
செல் இசை நிலைஇய பண்பின்
நல்லியக்கோடனை . . . . . ." (சிறு: 262-270)

என்ற வரிகள் சுட்டுகின்றன. மேலும் பசுவின் கன்று, யானைக்கன்று, கரடிக்குட்டி, வருடை, கீரி, புலி, மயில், கோழி ஆகிய விலங்குகளும் பறவைகளும் பலாப்பழம், மாம்பழம், ஆசினி, சந்தனம், நாறைக் கொடி, கற்பூரம் ஆகிய மணப் பொருள்களும் மாணிக்கம், தந்தங்கள் என மலைபடு பொருள்களும் காந்தள், புன்னை, திலகம் எனும் மலர்களும் மிளகு, தேன்,

தயிர், கள்ளின் தெளிவு போன்ற பண்டங்களும் நன்னனுக்குத் திறைப்பொருளாக வழங்கப்பட்டுள்ளன இதனை, (மலை:500-526) மலைபடுகடாம் வரிகளால் குறிப்பிடுகின்றன. இதையே, "ஆமானின் குழவி, இளைய யானைக்கன்று. வாய்திறவாத கரடிக்குட்டி, மலையாட்டுக்கிடாய், கீரிப்பிள்ளை, மரையானின் குழவி, ஆண் உடும்பு, தோகை மயில், காட்டுக் கோழியின் சேவல், முழவைப் போன்ற பெரிய பாலப்பழம், சாறு முற்றின இனிய மாம்பழங்கள், மணக்கும் நறைக்கொடி, நுறைக்கிழங்கு, மரத்திலிருந்து சிதறியுதிர்ந்த பளிங்கு போன்ற கருப்பூரம், விலை மதிப்புடைய மாணிக்கக் கற்கள், யானைக் கொம்புகள், காந்தள் மலர்கள், புன்னைப் பூக்கள், திலகப் பூக்கள், சந்தனக் கட்டைகள், மிளகு மூங்கிற் குழையில் முற்றவிட்ட கள்ளின் தெளிவு மூங்கிற் குழையிலே தோய்த்த தயிர், தேனிறால்கள் ஆசினிப்பலா ஆகியவை நன்னனுடைய அரண்மனை முற்றத்தில் மலை வாணரால் கொண்டு வந்து வைக்கப்பட்டன"[22] எனும் இராசமாணிக்கனார் கருத்தும் மேற்கூறியவற்றை உறுதிப்படுத்தும். சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவன் மலைவளம் காணச் சென்ற போது மலைவாழ் மக்கள் அரசனைக் காணத் திறையாக எடுத்து வந்த பொருட்களை ஏந்திக் கொண்டு வந்து அரசன் முன்பு வைத்து விட்டு ஏழு பிறப்பிலும் நாங்கள் உமக்குத் தொண்டு செய்யும் அடிமைகள் எனக் கூறி நின்றதை,

"திறை சுமந்து நிற்கும் தெவ்வர் போல
யானை வெண்கோடும் அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும் சித்துரக் கட்டியும்
……….. ……………………….
………. ……….. ………….. ….
மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டு ஆங்கு
ஏழ்பிறப்பும் அடியேம் வாழ்க நின் கொற்றம்" (சிலம்பு 36-57)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

கானவர் வேட்டைக்குச் செல்லும் போது முள்ளம் பன்றி தன்னுடைய கூர்மையான முள்ளால் தாக்க அதனால் ஏற்பட்ட வலி தாங்கமாட்டாது கானவர் அழுத ஓசையும், புலி தமது மார்பில் பாய்ந்ததால் புண் ஏற்பட அதனை ஆற்றுவதற்குக் கானவர்களின் கொடிச்சியர் பாடுகின்ற பாட்டின் ஓசையும் மலைகளின் ஓசைகளோடு ஒன்றாகக் கேட்டதை மலைபடுகடாம் (300-304) வரிகள் குறிப்பிடுகின்றன.

மேற்சுட்டிய பாடலின் வழி மலைவாழ் மக்கள் பொருளாதார வசதிக்கு ஏற்ப உயர்ந்தவராகவும் தாழ்ந்தவராகவும் எண்ணப்பட்டு வந்துள்ளமை தெளிவு. குறவர்கள் வேட்டைக்குச் செல்லும்போது கொடிய விலங்குகளால் வேட்டையாடப்பட்டு விடுகின்றனர். பிற தொழில்களில் இல்லாத மரண அச்சம் இவர்களின் வாழ்வில் மிகுதியாகக் காணப்படுவதும் மறுக்க இயலாது. குறிஞ்சி நிலத்தார் உடல் உழைப்பினையே வாழ்வின் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். தாங்கள் உழைப்பால் உண்டாக்கிய பொருட்கள் அனைத்தையும் உடல் உழைப்பின்றி ஆட்சி அதிகாரத்தில் இருந்தவர்களுக்கும் பொருளாதாரத்தில் மேம்பட்டு வாழ்ந்தவர்களுக்கும் காணிக்கையாகக் கொடுத்து வாழ வேண்டிய அவல நிலையில் இருந்துள்ளனர்.

பத்துப்பாட்டு நூல்களில் நல்லியக்கோடன், நன்னன் மற்றும் தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்து செரு வென்ற பாண்டியன் ஆகியோர் மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலப்பகுதியை ஆட்சி செய்தவர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர்.

## 2.3 முல்லை நிலம்

காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலம் என அழைக்கப்படுகின்றது. முல்லை நிலம் மேய்ச்சல் நில பகுதி ஆகும். மா.இராசமாணிக்கனார் தமது நூலில் "இங்குக் காடு என்பது குறிஞ்சி நிலக்காடு போன்ற மரச்செறிவுடைய காடன்று. இளங்காடு என்று சொல்லத்தகும் முறையில் அமைந்த நிலப்பகுதியாகும். இங்கு ஆடுமாடுகளின் மேய்ச்சலுக்குரிய புல்வெளிகள் நிறைந்திருந்தன"[23] என குறிப்பிடுகின்றார். "இப்பகுதியில் செம்மண் பரந்திருத்தலின் இந்நிலத்தைச் செம்புலம் எனவும் கார்பருவத்தில் வளம் பெற்று விளங்குவதாகவும்"[24] முல்லை மலர் பற்றிய செய்திகள் பல காணப்படுவதாகவும் சசிவல்லி குறிப்பிட்டுள்ளார். பொதுவாக ஒரு நிலத்தின் பெயர் அந்நிலத்தின் முதன்மையாக விளங்கக்கூடிய பூவின் பெயராலேயே குறிக்கப்படுவது இயல்பாகக் காணப்படுகிறது. அந்த வகையில் முல்லைத் திணையும் முல்லைப் பூவினால் குறிக்கப்படுகிறது. காடு சார்ந்த பகுதிகளில் பூத்த பூக்களில் முல்லைப் பூ சிறப்பானதாகும். ஆதலால் அப்பெயர்கொண்டு அந்நிலம் அழைக்கப்படுகிறது எனலாம். இதனை, "முல்லை என்பது

அழகான வெண்ணிற மலரைக் குறிக்கும் பெயராகும். இச்சொல் இம்மலர் மிகுதியாகக் காணப்படும் காட்டை அல்லது நிலத்தையும் குறிக்கும். அது மலரும் பருவம், பொழுது ஆகியவற்றின் தொடர்பால் அடிக்கடிக் குறிக்கப்பெறும் இச்சொல் இந்நிலத்தின் பாடல்களையும் குறிக்கும்”[25] என்று தமிழண்ணல் குறிப்பிடுகிறார். காடும் காடு சார்ந்த பகுதியாகிய முல்லை நிலத்தில் பெரிதும் முல்லைப் பூ பரவலாகக் காணப்பட்டுள்ளது. ஆதலின் பூவை முதன்மையாகக் கொண்டு நிலத்திற்கு முல்லை நிலம் எனப் பெயரிட்டு இருப்பதனை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 2.3.1 முல்லை நில மக்கள்

முல்லை நில மக்கள் ஆயர், கோவலர், இடையர், பொதுவர் என அழைக்கப்பட்டனர். முல்லை நிலத் தலைவன் அண்ணல், தோன்றல் குறும்பொறை நாடன் எனப் பெயர் பெற்றான். அவர்தம் பெண்டிர்கள் ஆய்ச்சியர், கோவிச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர் என அழைக்கப்பட்டனர். இதனை, “முல்லை நிலப்பகுதி மேய்ச்சல் நிலங்களைக் கொண்டிருந்தமையால் ஆடுமாடு வளர்த்தலை முக்கியத் தொழிலாகக் கொண்ட மக்கள் இப்பகுதியில் வாழ்ந்துள்ளனர். மேலும் இவர்களைக் கோவலர், ஆயர், அண்டர், இடையர் என்னும் பெயர்களால் அழைத்ததை”[26] மு.சண்முகம் பிள்ளையும் “முல்லை நிலத்து வாழ்வார் இடையர் என வழங்கப் பெறுவர். இந்நிலத்து ஆநிரைகள் மிகுதியாய் உள்ளமையால், அவற்றைப் பசுமை நிலங்களில் மேய்த்துக் காப்பாற்றும் தொழில் அவர்களுக்கு உரியதாயிற்று. ஆவினை மேய்ப்பர். ஆயர் என வழங்கப் பெற்றனர்”[27] என்று வெள்ளைவாரணனும் குறிப்பிடுகின்றனா். முல்லை நிலம் காடும் காடு சூழ்ந்த இடமாகத் திகழ்வதால் இந்நிலத்து மக்கள் காடுகளிலேயே வாழ்ந்துள்ளனர். ஆடுமாடு வளர்ப்பதையே தமது முக்கியத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தவா்களை ஆயர், கோவலர், இடையர், பொதுவர், அண்டர் எனப் பெயரிட்டு அழைத்துள்ளமையை அறிய முடிகின்றது.

### 2.3.4 முல்லை நில மக்களின் குடியிருப்பு

மலையில் வாழ்ந்த குறிஞ்சி நில மக்களின் வாழிடத்தைத் தொடர்ந்து, மலைச் சாரலை ஒட்டிய நீர் வசதியற்ற காட்டு நிலத்தில் முல்லை நிலத்தாரின் குடியிருப்பு அமைக்கப்பட்டுள்ளது. மலை

அடிவாரங்களில் குடிசைகள் அமைத்து வாழ்ந்து வந்த குறிஞ்சி நில மக்களின் குடியிருப்பைப் போன்று இவர்களும் சிறு குடிசைகளையே வாழிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்துள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை (148-154) வரிகள் குறிப்பிடுகின்றன. "இவர்கள் வாழ்ந்த குடிசைகள் குறுகிய கால்களையுடையனவாயிருந்தன. அந்தக் கால்களில் ஆட்டு மறிகள் தின்னுவதற்குரிய தழைகளைக் கட்டி வைத்திருப்பர். அதன் வாயில் சிறு தூறுகளைக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கும் கழிகளினால் கட்டப்பெற்ற கதவுகளையே அக்குடிசைகள் பெற்றிருந்தன. வரகுத்தாள்களினாலான இருக்கையும் ஆட்டுக்கிடாயின் தோலால் படுக்கையும் அமைத்திருந்தனர். அக்குடிசை வீடுகளின் முற்றங்கள் மாடுகளைக் கட்டி வைப்பதற்குரிய தாம்புகள் கட்டப்பெற்ற சிறிய முளைகளைக் கொண்டிருந்தன. வெள்ளாடும் செம்மறியாடும் அடைவதற்குரியனவாகக் கட்டு முள்ளாலாகிய வேலி சூழ்ந்த கிடைகளும் அங்கு உண்டு. ஆடுமாடுகளின் மிகுதியினால் அங்காங்கே எருக்களும் கும்பல் கும்பலாகக் கிடந்தன"[28] என முல்லை நிலத்தவரின் குடியிருப்பையும் அதன் இயல்பையும் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் சுட்டிக்காட்டியிருப்பதும் உற்றுநோக்கத்தக்கது. இதுமட்டுமல்லாது வரகு வைக்கோலால் வேயப்பட்ட குடிசைகளையே வாழிடமாகக் கொண்டு வாழ்ந்துள்ளதை "வரகுக்கற்றை முதலியவற்றால் வேயப்பெற்ற குடிசை, குரம்பை எனப்பட்டது. அக்குரம்பையின் உள் நுழையச் சிறிய வாயில் இருந்தது. அவ்வாயிலில் கழிகளாற் கட்டப்பட்ட கதவு இருந்தது. குடிசையின் கூரையைத் தாங்கி நின்றவை குறிய கால்கள். அக்கால்களின் ஆட்டு மறிகள் நின்று தின்னத்தக்கபடி தழைகள் கட்டப்பட்டிருந்தன. ஆட்டுக்கிடாயின் தோல்களைப் பாயலாகக் கொண்டு அக்குரம்பைக்குக் காவலனான வீட்டு முதியவன் படுத்திருந்தான். குரம்பைக்கு எதிரில் முற்றம் இருந்தது. அதில் தாம்புகள் கட்டின குறிய முளைகள் இருந்தன. அம்முனைகளில் ஆடுமாடுகள் கட்டப்பட்டன. இத்தகைய சில குரம்பைகளையுடையதே முல்லை நிலச் சிற்றூராகும்"[29] என மா.இராசமாணிக்கனார் முல்லை நிலத்தவர்களின் வாழிட அமைப்பினை விவரித்துள்ளமை கவனிக்கத்தக்கது. எனவே முல்லை நில மக்களின் குடியிருப்புகள் வரகுக் கற்றைக் கொண்டு அமைக்கப்பட்ட எளிய குடில்கள் அதாவது குடிசைகளே என்பதும் அவர்கள் வசித்த குடில் போன்ற அமைப்பினையுடைய இருப்பிடத்திற்குக் குரம்பை எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டுள்ளது என்பதும் தெரியவருகின்றது.

### 2.3.5 முல்லை நில மக்களின் உணவு

பத்துப்பாட்டு நூல்கள் நிலத்திற்கேற்ப உணவுமுறை வேறுபட்டிருந்ததைப் பதிவு செய்துள்ளன. தொண்டை நாட்டில் உள்ள முல்லை நிலத்தார் பாலையும் தினையரிசிச் சோற்றையும் உண்டுள்ளதை,

“இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெருகுவீர்” (பெரும்: 167-168)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. “இவர்கள் முல்லை நிலத்தில் விளைந்த தினையரிசிச் சோற்றை உண்டனர்”[30] என்று தட்சிணாமூர்த்தியும் குறிப்பிட்டுள்ளமையும் கவனிக்கத்தக்கது. முல்லை நிலச் சிற்றூர்களில் வாழ்ந்தவர்கள் வரகரிசிச் சோறும் அவரைப் பருப்பும் கலந்து செய்த ‘கும்மாயம்’ எனப் பெயர் பெற்ற உணவை உட்கொண்டுள்ளனர்.

“நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன
குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றி
புகர் இணர் வேங்கை வீகண்டன்ன
ஆவரை வான்புழுக்கு அட்டி, பயில்வுற்று
இன்சுவை மூரல்” (பெரும்: 192-196)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் நெடுங்கொத்தையுடைய பூளைப் பூப் போன்ற வரகுப் பருக்கைச் சோற்றை வேங்கைப் பூவை ஒத்த அவரை விதையின் பருப்பைப் போட்டுத் துழாவிய இனிய சுவையுடைய கலவையை மூரல் எனக் குறிப்பிடுகின்றன. “கும்மாயமும் என்பதற்குப் பருப்புச் சோறும் என்ப”[31] எனும் நச்சினார்க்கினியர் கூற்றை உரையாசிரியர் இரா.மோகன் குறிப்பிடுகின்றார். இங்கு மூரல் என்பதற்குப் பருப்புச்சோறு என்றே உரையாசிரியர்கள் விளக்கம் தந்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. நன்னனது மலைநாட்டில் உள்ள முல்லை நிலத்தார் சிவந்த அவரை விதைகளையும் மூங்கில் அரிசியையும் மேட்டு நிலத்தில் விளைந்த நெல்லின் அரிசியையும் புளி கரைக்கப்பட்ட உலையில் போட்டுக் குழைத்து புளியங்கூழாக்கி உட்கொண்டுள்ளதை,

“செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன
வேய்கொள் அரிசி, மிதவை சொரிந்த
சுவல் விளை நெல்லின், அவரை அம்புளிங்கூழ்” (மலை : 434-436)

என்ற மலைபடுகடாம் வரிகள் குறிப்பிடுகின்றன. “இவ்வாயர்களின் உணவு தினைச் சோறு, வரகுச் சோறு முதலியனவும் கூழ், பால், இறைச்சி முதலியனவும் ஆம். பாற் கூழே இவர் உண்ணும் முக்கிய உணவு. இதனால் இவரைக் கூழ் ஆர் இடையன் என்பர். என்றும் இவர் தமது

உணவுடன் அவரைப் புழுக்கினையும் கொள்வர்"[32] என மு.சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பதும் உற்றுநோக்கத்தக்கது. நன்னனது நாட்டில் பொன்னை நறுக்கினாற் போன்ற நுண்ணிய ஒரே அளவுடைய அரிசியை வெள்ளாட்டு இறைச்சியுடன் கூட்டி ஆக்கிய சோற்றையும் தினைமாவையும் முல்லை நில மக்கள் உணவாக உட்கொண்டுள்ளமையை, மலைப்படுகடாம் (440-445) வரிகள் குறிப்பிடுகின்றன. முல்லை நில மக்கள் தங்களுக்குக் கிடைக்கும் பால், பாற்சோறு மற்றும் தம்மால் விளைவிக்க முடிந்த வரகு, தினை, நெல் ஆகியவற்றை உணவாக உட்கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. தொண்டைநாட்டுச் சிற்றூர்களில் வாழ்ந்த முல்லை நிலத்தவர்கள் பாலையும் வரகு அரிசிச் சோற்றையும் உண்டுள்ளனர். இவர்களுக்கு மேல் ஒரு படி உயர்ந்து நன்னனது மலைநாட்டில் வாழ்ந்த முல்லை நிலத்தவர்கள் மூங்கிலரிசி, நெல் அரிசி இவற்றைப் புளிக் கரைசலில் இட்டுக் கூழாக்கி அவர்களிலும் சற்று உயர்வான முறையில் உணவைச் சமைத்து உண்டு வந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. ஒரே நிலத்தைச் சார்ந்த மக்களாக இருந்தாலும் அவர்கள் வாழும் இடத்தின் வசதிக்கு ஏற்ப உணவின் தரம் அவற்றின் முறை வேறுபட்டுள்ளதைக் காணமுடிகின்றது. மேலும் வளர்ப்பு விலங்குகளான ஆடு, மாடுகளில் ஆடுகளை இறைச்சிக்காகவும் ஆனினங்களைப் பால் பொருள் பயன்களுக்கும் பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

### 2.3.6 முல்லை நில மக்களின் தொழில்

முல்லை நில மக்களின் தொழில்களாக வரகு, சாமை முதலிய தானியங்களை விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர், மோர், வெண்ணெய் இவற்றை விற்றல் போன்ற தொழில்களைக் குறிப்பிடுவர். பத்துப்பாட்டு ஆராய்ச்சியில் "முல்லை நில மக்கள் சாமை விதைத்தல், வரகு விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் இவற்றை விற்றல் முதலிய தொழில்களில் ஈடுபட்டார்கள்"[33] என இராசமாணிக்கனார் கூறியிருப்பதும் இவர்கள் செய்துள்ள தொழில்களை உறுதிப்படுத்துகிறது. முல்லை நிலத்தாரின் முதன்மையான தொழிலாக விளங்குவது கால்நடைகளை மேய்ப்பதும் பாதுகாப்பதுமே ஆகும். இவற்றை,

“சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
நடுங்கு சுவல் அசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின் நின்று உய்த்தர” (முல்லை:12-15)

என்ற முல்லைப்பாட்டு வரிகளில் சிறிய கயிற்றால் கட்டப்பட்ட பச்சிளங் கன்றுகள் பாலுண்ணாது வருந்துவதைப் பார்த்த இடையர் பெண் அவற்றை அணைத்துக் கோவலர் பின் நின்று செலுத்த உன் தாயார் மேய்ச்சலை முடித்துக் கொண்டு இப்பொழுதே வந்து விடுவர் என இளங்கன்றுகளுக்கு ஆறுதல் கூறுவதாக அமைந்துள்ளது. இதுகாலம் நேரம் பார்க்காது மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்டிருந்ததைக் குறிப்பிடுகின்றது. பெரும்பாணாற்றுப்படை (169-175) செருப்பு விடாமல் அணிந்திருந்ததால் வடு அழுந்திய கால்கள் உறுதியான கோலை ஊன்றிய கோடரித் தழும்பு இருந்த வலிய கைகள், தலைகளிலே உறிகள் கொண்டு சென்றதால் ஏற்பட்ட தழும்பு மிக்க தோள்கள், பாலைத்தடவின மயிர், கழுத்தில் பலவகையான காட்டு மலர்களைக் கலந்து தொடுத்த மாலை, இடையில் ஒற்றை ஆடை என இடையனின் தோற்றத்தைக் குறிப்பிடுகின்றது. இடையர்கள், காடு மேடுகளில் திரிய வேண்டியிருந்ததால் எப்பொழுதும் தொடுதோல் உடையவராய் இருப்பர். எனவே தோல் அழுந்திய தழும்பு கால்களில் படிந்திருக்கும். பசுக்களுக்கு இலைபறித்துத் தருவதற்காகவும் அவற்றை அடித்து ஓட்டிச் செல்வதற்காகவும் கையிலே கோலை ஊன்றி வைத்திருப்பதால் கோல் வடு கைகளில் இருக்கும். பால் சோற்றை மூட்டையாகக் கட்டிக் கோலில் முடிந்து அதனைத் தோளில் காவடி போல் சாத்திக் கொண்டு செல்வதால் அக்கோல் அழுத்திய வடு தோள்களில் பதிந்திருக்கும் என்றும் ஒரே ஆடை மட்டும் அணிபவர் இவர் என்றும் உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். “இவ்வாயர் எப்பொழுதும் காலில் செருப்பு அணிந்திருப்பர். இச்செருப்பின் தழும்பு அவர்கள் பாதங்களிலே பதிந்து கிடக்கும். ஆநிரைகளை ஓட்டுவதற்குரிய தடியைக் கையினால் ஊன்றிக் கொண்டிருப்பர். தழைகளை இழுத்துப் பறிப்பதற்கு ஏற்ற கவரான கோலும் கொண்டிருப்பர். தவிர மரங்களை வெட்டியெறிந்து கொடுப்பதற்கு ஏற்ற கருவியான கோடரியைத் தாங்கியதால் அவர் தம் கை, தழும்புடன் வலியன வாயிருந்தன என்றும் இவர்களின் கால். கைகளில் தழும்பு பட்டிருப்பது போலவே தோள்கட்டும் உறிக்காவினால் தழும்புடன் காணப்பெற்றது. இரண்டு தலைகளிலும் உறியினைக் கொண்ட காந்தண்டினால் பொருள்களைச் சுமந்து செல்வர். பசுவைக் கறந்த

பார்க்கையால் தடவியதனால் இவர்தம் தலைமயிர் பால் மணத்துடன் உள்ளது. அடு மாடுகளை ஓட்டுங்காலத்துச் சீழ்க்கையொலி செய்வாராதலின் இவர் தம் வாய் மடிந்து காணப்படும்"[34] என மு.சண்முகம்பிள்ளை இடையனின் தோற்றம் மற்றும் இயல்பைத் தம் நூலில் சுட்டிக்காட்டியிருப்பதும் கவனிக்கத்தக்கது.

இடையர்கள் தங்கள் பசு, ஆடு, எருமை முதலிய விலங்குகளை வருத்தும் கோலினை எப்பொழுதும் கைககளில் வைத்திருப்பர். தங்கள் மேய்ச்சல் தொழிலுக்கு இடையூறாக இருக்கும் பெருவெள்ளத்தை வெறுத்துள்ளனர். அவ்வெள்ளத்திலிருந்து தங்கள் விலங்குகளைக் காக்க விரும்பிய அவர்கள் மேட்டுநிலங்களுக்கு ஓட்டிச் சென்று காப்பாற்றியுள்ளனர். பழகிய நிலப்பகுதியை விட்டு வேற்று நிலங்களுக்கு வந்து தனிமைத் துயரத்தில் வாழ்ந்துள்ளனர். தங்கள் சூடியுள்ள மலர் மாலைகளில் பட்டு மழைநீர் உடம்பில் பட குளிர்ச்சி தாங்காது நெருப்பு அருகில் கைகளைக் காட்டிக் கன்னத்தில்வைத்துள்ளனர். பற்கள் குளிரில் பறையடிப்பது போல் படபடக்கவும் செய்துள்ளன. இத்தகைய சூழ்நிலையிலும் கால்நடைகளை காப்பதில் கவனம் செலுத்தியுள்ளனர். என இடையர்களின் இயல்பைக் நெடுநல்வாடை (1-8) வரிகளும் குறிப்பிடுகின்றன. "ஆநிரைகளை இந்நிலத்துப் பொதுமக்கள் தெய்வமாக வணங்கினர். மழை அதிகமாகப் பெய்கின்ற போது அவ்வானிரைகளுக்கு நோய் ஏற்படாமல் இருக்க மேட்டு நிலம் நோக்கி ஓட்டிச் சென்றனர்"[35] என்பதைக் கு.இராசரத்தினம் தம் நூலில் சுட்டிக்காட்டியுள்ளார். பிறத் தொழில் அறியாதவர்களாய் அழுக்கேறிய ஒற்றை ஆடையை அணிந்த எளிமை வாழ்வுக்குரியவர்கள், முல்லை நிலத்தவர்கள் என்பதை நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், இவர்களது வாழ்க்கை வட்டம் ஆநிரைகளை ஒட்டியே அமைந்திருந்ததையும் அறிய முடிகின்றது.

முல்லை நில மக்கள் குறுகிய கால்களையுடைய குடிலின் வாயிலில் வரகுக் கற்றையால் வேயப்பட்ட கழிகளைத் தலைக்கு வைத்து ஆடுகளின் தோல்களைப் பாயக்கி விரித்து, அதல் கண் உறங்கிக் கொண்டே இரவில் தங்களது கால்நடைகளை, விலங்குகள் நெருங்காத வண்ணம் பாதுகாத்து வந்துள்ளனர். இதனை, பெரும்பாணாற்றுப்படை (150-151), (176-177) மலைப்படுகடாம் (418-420) பாடல் வரிகளின் மூலம் நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது. இவ்வாறு இடையர்களது வாழ்வு, கால்நடைகளை மேய்ப்பது,

பாதுகாப்பது என்று ஆநிரைகளுடனே இரண்டறக் கலந்திருப்பதைக் காணமுடிகின்றது. முல்லை நிலத்தில் ஆண்கள் மட்டுமல்லாது பெண்களும் உழைத்துள்ளனர். இதனை, பெரும்பாணாற்றுப்படை (155-165) வரிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடலில், அதிகாலைப் பொழுதில் பறவைகள் எழுவதற்கு முன்பு எழுந்து, மத்தினால் தயிரைக் கடைந்து வெண்ணெயை எடுத்துவிட்டு, மோரைப் பானையில் ஊற்றி, மோர் பானையைத் தலையில் வைத்துப் புதிய மோரை விற்கும் இடையர் மகள் மோர் விற்றதால் கிடைத்த நெல் கொண்டு சுற்றத்தாருக்கு உணவு சமைத்துக் கொடுத்துள்ளாள். நெய் விற்ற விலைக்குக் கட்டிப் பசும் பொன்னையும் விரும்பாது எருமையும் நல்ல பசுக்களையும் கன்றுகளோடு வாங்கிக்கொண்டு வந்ததைப் பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. “இடையர் குலப் பெண்கள் ஆய்ச்சியர் எனப்படுவர். ஆய்ச்சியர் தயிரைக் கலக்கி மோரக்கிப் பூஞ்சுமட்டில் வைத்து ஊரில் விற்று வருவர். வெண்ணெய் விற்ற பொருள் கொண்டு பொன் வாங்காது நல்ல ஆன் கன்றுகளை வாங்குவர் மற்றும் வைகறைப் போதில் எழுந்து விடுவது அவர்கள் வழக்கமாகும்”[36] என்ற தட்சிணாமூர்த்தி அவர்களின் கூற்றும் இடையர் குலப் பெண்கள் உழைப்பில் ஈடுபட்டதை உறுதிப்படுத்துகின்றது.

முல்லை நிலப் பெண்கள் அதிகாலையிலே எழுந்து உழைப்பவராக இருந்துள்ளனர். மோர் விற்ற விலைக்கு நெல்லையும் நெய் விற்ற விலைக்கு எருமை, பசு மற்றும் கன்றுகளையும் அதற்கு ஈடாகப் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. இதன்வழி இடையர்கள் பொன்னை விட ஆநிரைகளைப் பெரிதாக மதித்துள்ளமையை அறிய முடிகின்றது. மேலும், முல்லை நிலத்தில் பெண்களுக்கும் பெருளீட்டும் பொறுப்பு இருந்துள்ளமையை மேற்கண்டபாடல்கள் புலப்படுத்துகின்றன. முல்லை நிலத்து மக்கள் ஆனிரைகளை மேய்ப்பது மட்டுமல்லாது உழவுத் தொழிலையும் மேற்கொண்டு வாழ்ந்துள்ளமையை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இந்நிலத்து உழவுத் தொழில் வளர்ச்சியை ஆராய்ந்த கா.சிவத்தம்பி அவர்கள், “வித்தையர், முதையல் என்ற சொற்களின் ஆட்சியால் ஆயர் ஆடு மாடுகளை மட்டும் மேய்த்தலோடு உழவுத் தொழிலிலும் முன்னேற்றம் கண்டனர் என்பதைப் புலப்படுத்தும் என்றும், உழவின் நிறைவு நிலை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களில் அமைகின்றன”[37] எனும் கருத்தை கு.இராசரத்தினம் சுட்டிக்காட்டியிருப்பதும்

இங்குக் கவனிக்கத்தக்கது. முல்லை நிலத்தில் பயிரிடும் தொழில் செய்து வாழ்ந்துள்ளமையைப் பெரும்பாணாற்றுப்படை (186-189) வரிகள் குறிப்பிடுகின்றன. பெண் யானைக்கூட்டம் போன்று நெற்கூடுகள் நிற்பதையும் முற்றத்தை ஒட்டிவரகுத் திரிக்கின்ற திரிகை நடப்பட்டிருந்ததையும் குறிப்பிடுகின்றது. வண்டிகளோடு கலப்பையும் சார்த்தி வைப்பதால் சுவர் தேய்ந்து காணப்பட்டது என்றும் குறிப்பிடுகின்றது. “உழவுக்குத் தேவையான கொட்டிலுள்ள சகடம், உருளை, கலப்பை இவற்றையெல்லாம் சார்த்தி வைக்கப்பட்டிருந்த நிலையும் அந்நீண்ட சுவர்புகை படிந்து காணப்பட்டதையும் கொண்டு இம்முல்லை நிலத்துப் பொது மக்களே உழவுத் தொழிலுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர்”[38] என கு.இராசரெத்தினம் கருத்தும் நோக்கத்தக்கது.

முல்லைப்பாட்டு, முல்லை நிலத்தில் பருவத்தில் மழை பெய்ததால் வரகுநன்கு விளைந்துள்ளதாகக் குறிப்பிடுகின்றது. இதனை, “வானம் வாய்த்த வாங்கு கதிர் வரகின்” (முல்லை.98) என்ற வரி உணர்த்துகின்றது. அவரையும் சிறப்பாகப் பயிர் செய்யப்பட்டுள்ளது. இதனை, “பைந்நனை அவரைப்பவம் கோப்பவும்” (சிறு.164) என்ற சிறுபாணாற்றுப்படை வரியின் மூலம் அறிய முடிகின்றது. பாண்டி நாட்டு முல்லை நிலத்தில் சிறிய தினை, எள் முதலியன நன்கு விளைந்துள்ளன. மேலும், கிழங்கு அகழ்ந்த ஆழமான குழிகளில் அழகிய மணிகள் கிடந்து ஒளி வீசின. இதனை,

“சிறுதினை கொய்ய கவ்வை கறுப்ப
கருங்கால் வரகின் இருங்குரல் புலர
ஆழ்ந்த குழும்பில் திருமணி கிளர” (மதுரை: 271-273)

எனும் மதுரைக்காஞ்சி வரிகள் தெளிவுபடுத்துகின்றன. மேலும் “பாண்டிநாட்டு முல்லை நிலத்தில் சிறிய தினை அறுவடை செய்யப்பட்டது. எள்ளிளங்காய் முற்றியது. கரிய தாளையுடைய வரகினது கதிர் முற்றியது. ஆழ்ந்த குழிகளில் விலையுயர்ந்த மணிகள் கிடந்து விளங்கின”[39] எனும் இராசமாணிக்கனார் கூற்றும் உறுதிபடுத்துகின்றது. இதன் மூலம் சிற்றூர்களிலும் வளம் பொருந்திய இடங்களிலும் உள்ள முல்லை நிலத்தவர்கள் உழவுத் தொழில் மேற்கொண்டு வாழ்ந்துள்ளமையை நன்கு அறிய முடிகின்றது. முல்லை நிலத்தவர்களின் முதன்மையான தொழில்களாகக் கால்நடைகளை மேய்ப்பது, பாதுகாப்பது மற்றும் அவற்றிலிருந்து கிடைக்கக்கூடிய பாற்பொருள்களை விற்பது, வரகு, சாமை

விளைவிப்பது ஆகியவற்றையே குறிப்பிடுவர். முல்லை நிலத்தவர்கள் வரகு தவிர்த்து நெல், எள், அவரை, தினை, கிழங்கு போன்ற பலவும் பயிர் செய்து வாழ்ந்துள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது. அவர்களுள் தனித்தப் பிரிவினராக பொருளாதார அளவில் உயர்ந்தவரே பிற பொருட்களைச் சேர்த்து விதைத்திருப்பர் எனலாம். இரவு பகல் பாராது கால்நடைகளை வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டு வாழ்ந்த இவர்களுள் மற்றவர் உழவுத் தொழில் செய்து வந்ததாகக் குறிப்பிட்டிருப்பது இவர்களுக்குள்ளே இரண்டு பிரிவுகள் இருந்ததை காட்டுகிறது. இத்தகைய நிலைப்பாடுடைய காடும் காடு சார்ந்த பகுதியாகிய முல்லை நிலத்தை நல்லியக்கோடன், தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன், நன்னன், பாண்டியன் நெடுஞ்செழியன் போன்றவர்கள் ஆட்சி செய்து வந்துள்ளனமயை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. எனவே வளம் பொருந்திய நாட்டினை ஆண்டு வந்த தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் ஆகிய இருவரது நாட்டிலும் குறிப்பிடப்பட்டுள்ள முல்லை நிலத்தார் மற்ற முல்லை நில மக்களை விட உணவுமுறையிலும் தொழிலடிப்படையிலும் மேல்நிலையில் இருந்தமை கவனிக்கத்தக்கது.

### 2.4 மருத நிலம்

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் என அழைக்கப்பட்டது. இதனை,"வயலும் வயலைச் சார்ந்த இடமும் மருதம் எனப்படும். ஆற்றுப் பாய்ச்சல், ஏரிப் பாய்ச்சல் உள்ள நிலப்பகுதியே மருத நிலமாகும். இந்நிலத்தில் மருத மரங்கள் மிகுதியாதலின் இது மருதம் எனப் பெயர் பெற்றது"[40] என்கிறார் மா.இராசமாணிக்கனார்.

மருதம் என்பது ஒரு மரத்தின் பெயராகும். இது பெரும்பாலும் ஆற்றங்கரையோரங்களில் வளர்ந்து நிழல் தரும் என்பதனை "மருதம் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் குறிக்கும் பெயராகும். இது பெரும்பாலும் ஆற்றங்கரையோரங்களில் வளர்ந்து அடர்ந்த தண்ணிய நிழலை ஆற்றின் துறைக்கு அளிக்கின்றது. பிற்காலத்தில் மருதம் என்னும் இச்சொல் ஆற்றங்கரையில் அமைந்த வளமான நெல் வயல்கள் நிறைந்த உழவு நிலங்களைக் குறிப்பதாயிற்று. மேலும் இச்சொல் இந்நில மக்களின் வாழ்க்கையையும் அவர்களின் வாழ்வு குறித்தத் திணைப் பாடல்களையும் குறிக்கிறது"[41] என்று தமிழண்ணல் குறிப்பிடுகிறார். எனவே மருத நிலம் என்ற

பெயர் அந்நிலத்தில் வளர்ந்த மருத மரத்தால் வந்தது என்பது புலனாகிறது. அதுமட்டுமல்லாது உலகத்தில் புகழ் பெற்ற பழைய நாகரிகங்கள் அனைத்தும் ஆற்று நீர் நிறைந்த மருத நிலத்திலேதான் தோன்றின என்பது வரலாறு கூறும் உண்மையெனக் குறிப்பிடுகின்றார் இராசமாணிக்கனார். இதற்கு வயல் வளம் மிக்க மருத நில இயற்கைச் சூழலும் ஒரு காரணமாகும். இக்கருத்தை மெய்ப்பிக்கும் விதமாக, "உலகத்து எல்லாத் தேசங்களிலும் மக்கள் நாகரிகம் பெற்ற இடம் ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரைகளிலும் தான் என்று வரலாறு கூறுகிறது. இது உண்மையே தமிழ் நாட்டிலும் மக்கள் நாகரிகம் பெற்று வந்த இடம் ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரைகளிலுமே ஆகவே மருத நிலத்தில் தான் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் வளம் பெற்று வளர்ந்தன"[42] என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி. மேலும் "மருத நிலம் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணை"[43] என்றும் இந்நிலத்தின் பெருமையை அறிஞர் குறிப்பிட்டிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

### 2.4.1 மருத நில மக்கள்

இத்தகு சிறப்பிற்குரிய இந்நிலத்தின் தலைமகன் மகிழ்நன் ஊரன் எனப்பட்டான். தலைமகள் மனைவி எனப்பட்டாள். குடிமக்களுள் ஆடவர்கள், உழவர், களமர், கடையர் என்று அழைக்கப்பட்டனர். அவர்தம் பெண்டிர் உழத்தியர், கடைசியர் என்று அழைக்கப்பட்டனர். உழவுத் தொழில் செய்யக்கூடிய உழவனை 'வேளாளன்' என்ற பெயரிலும் அழைத்துள்ளனர். வேளாளன் என்னும் சொல் 'வெள்ளத்ததை ஆள்பவன்' அதாவது உழுது பயிரிடுவோன் என்பதைக் காட்டுகிறது.

'வேளாளர்' என்று அழைக்கப்படும் உழவர்களுள் உழுதுண்போர் உழுவித்துண்போர் என்று இரு பிரிவுகள் இருந்ததாகவும் குறிப்பிடுகின்றனர். இவர்களை நச்சினார்க்கினியர் மேனிலை வேளாளர் கீழ்நிலை வேளாளர் என்று குறிப்பிடுவார். உயர்நிலை வேளாளர் நிலக்கிழார் உழவுத் தொழிலைக் கண்காணித்தனர். அரசகுலங்களோடு மணவுரிமையுண்டு. சிற்றரசர்களாக இருந்தனர். இழிநிலை வேளாளர் நிலத்தை உழுதவர்கள். அவர்கள் உழுது, நட்டு, கதிரறுத்து, நிலத்தில் ஊழியம் செய்தவர்கள். சாதிச் செங்குத்து அமைப்பில் ஊழியம் செய்த வேளாளர்களே மிகத் தாழ்ந்தவர்கள் எனப்பட்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிலவுடைமை

உரிமையில் பல சீர்த்திருத்தங்கள் செய்யப்பட்டன. உழைப்பவருக்கே உடைமை உரிமை அளிக்கும் ரயத்வாரி முறையைச் சென்னை, பம்பாய் மாநிலங்களில் அமுலாக்கப்பட்டது. ஆனால் நடைமுறையில் உடைமை உரிமை என்பது நிலத்தில் பாடுபட்ட குத்தகைதாரர்களுக்கோ கூலி அடிமைகளுக்கோ வழங்கப்படவில்லை. மாறாக அவர்களின் பழைய பண்ணையார்களாகிய உயர் சாதியினருக்கே வழங்கப்பட்டது. உயர் வேளாளர்கள் உயரிய நிலைகளையே வகித்தனர். அவர்கள் மண்டலத் தலைவர், பிராந்தியத் தலைவர் மற்றும் தண்டத் தலைவர் ஆவர்”[44] என ந.சுப்பிரமணியன் குறிப்பிடுவார்.

நச்சினார்க்கினியர் உழுதுண்பார் உழுதுவித்துண்பார் என்று இரு வகையாகப் பிரித்துக் கூறுவதன் மூலம் தாமே உடலுழைப்பில்ஈடுபடுகின்ற சிறு நில உடைமையாளர்களாகவும் உழைப்பை விலைக்கு வாங்குகின்ற பெரு நில உடைமையாளர்களாகவும் வேளாளர் இருந்துள்ளமைத் தெளிவாகிறது. இத்தகைய உழுதுண்ணும் வேளாண் மக்களையும் உழுவித்துண்ணும் வேளாண் மக்களையும் சங்கப்பாடல்களில் காண முடிகின்றது. “இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் நிலமற்ற உழவர்கள் இருந்தனர். நிலமற்ற வகுப்பினர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எனக் கருதப்பட்டனர். நிலமுள்ள உழவர்கள் வேளாளர்கள் என்றும் உயர்ந்த வகுப்பினர்களாகக் கருதப்பட்டனர். இவ்விரு வகுப்பினரும் ஒழுக்கத்திலும் நாகரிகத்திலும் பழக்கவழக்கங்களிலும் மாறுபட்டிருந்தனர்”[45] எனச் சாமி சிதம்பரனார் இந்த வேறுபாட்டை எடுத்துக் காட்டியுள்ளார். இவ்வாறு உழவுத் தொழில் செய்யக்கூடிய மருத நில மக்கள் பலப் பெயர்களால் அழைக்கப்பட்டு, பலப் பிரிவுகளாக இருந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 2.4.2 மருத நிலத்தாரின் குடியிருப்பு

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதமாகும். மருதம், நீரும் பசுமையான வயல்களும் தோட்டங்களும் தோப்புகளும் சோலைகளும் நிறைந்துள்ள இடம்,ஆதலால் உழவர் வயல்வரப்பில் தங்கிப் பயிர்களைக் காவல் காக்கப் புதிய வைக்கோலால் வேய்ந்த கவிந்த குடிலை அமைத்துக் கொண்டுஅதன் முற்றத்தில் உழத்தியர் அவல் இடித்துள்ளனமயை,

“…………………… வரம்பில்
புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்” (பெரும்: 224-225)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. "வயல்களில் வேலை செய்யும் உழவர்கள் தம் குடில்களை மருத நிலத்து வயல் வரம்புகளிலே புதிய வைக்கோலால் வேய்ந்து அமைத்து வாழ்ந்தனர்"[46] என்று சசிவல்லி குறிப்பிடுகின்றார். இவ்வாறு உழைக்கும் மக்கள் எளிய வாழ்வையே காலம் காலமாக வாழ்ந்து வந்திருப்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. வளமுடைய ஊர்களைக் கொண்ட உழவர்களின் வீட்டு முற்றத்தில கன்றுகளைக் கட்ட நெடிய தாம்புகளைக் கொண்ட முளைகள் நடப்பட்டிருந்தன. நீண்ட ஏணிக்கு எட்டாத நீண்ட குதிர்கள் இருந்தன. பிள்ளைகள் அந்த முற்றத்தில் சிறுதேர் உருட்டி விளையாடியுள்ளனர. அந்த வருத்தம் நீங்கச் செவிலித்தாயாரைத் தழுவிப் பாலை உண்டு, தமது படுக்கையில் நன்கு துயில் கொண்டு பசி, வறுமை என்பதையே அறியாது வாழ்ந்துள்ளனர். என்பதை,

"ஏணி எய்தா நீள் நெடு மார்பின்
முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்
குமரி மூத்த கூடு ஓங்கு நல் இல்
தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊராநல்தேர் உருட்டிய புதல்வர்
தளர் நடை வருத்தம் வீட, அலர்முலைச்
செவிலி அம் பெண்டிர்த் தழீஇ பால் ஆர்ந்து
அமளித் துஞ்சும் அழகுடை நல்இல்" (பெரும் : 245-252)

என்ற வரிகளின் மூலம் அறியமுடிகிறது.

இங்கு, பசி, வறுமை என்பதை அறியாதக் குடியினராகவும் அவ்வீட்டுக் குழந்தைகள் நடைப்பழகும் தேர்ச்சக்கர வண்டியின் அழகுத் தச்சரினப் பிள்ளைகளே ஆசை கொள்ளும் அளவிற்கு வேலைப்பாடுடையதாகவும் அமைந்திருந்தது. மேலும், குடியிருப்பில் நெற்குவியல் முற்றம் வரை குவித்து வைக்கப்பட்டிருந்தமை மருத நிலத்தவரின் செழிப்பான வாழ்க்கைக்குச் சான்றாகும். உழுதுண்ணும் இயல்புடைய உழவனின் குடியிருப்பு வைக்கோலால் வேயப்பட்டிருந்தது. உழுவித்துண்ணுபவனது குடியிருப்பு இல்லங்கள் என்று அழைக்கப்பட்டுள்ளன. தென்னந்தோப்புகளுக்கு இடையில் மருத நிலச் சீறூர்கள் அமைந்திருந்தன. மஞ்சள் முற்றம் மணம் கமழ்கின்ற பூந்தோட்டங்கள் சூழத் தோப்புக்கள் தோறும் தனித்தனியாக தோப்பு உழவர் மனைகள் அமைந்திருந்ததைப் பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இதனை,

"....................கறை அடிக்
குன்று உறழ்யானை மருங்குல் ஏய்க்கும்
வண்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த
மஞ்சள் முன்றில் மணம் நாறு படப்பை
தண்டலை உழவர் தனிமனை" (பெரும்: 352-355)

என்ற அடிகளால் அறியலாம். தென்னந் தோப்புகளை உழுது பண்படுத்தும் தொழில் உடையவர் ஆதலால் இவர்கள் மனைத் தெருவாக இல்லாமல் தோப்புக்கள் தோறும் தனித்தனியாக அமைக்கப்பட்டு தென்னங்கீற்றினால் வேயப்பட்டுள்ளது. "தனிமனை என்றதற்கு நச்சினார்க்கினியர் ஒப்பில்லாத மனை என்று பொருள் கூறுகின்றார். இவர்கள் தென்னந் தோப்புகளை உழுது பண்படுத்தும் தொழிலுடையர் ஆதல் பற்றி மருத நில மக்களாகிய உழவரல்லர் எனத் தெரிந்த தோதுவர் தண்டலை உழவர் என்கிறார்."[47] இன்றும் தோப்புக்களில் மனை அமைத்து வாழுபவர்களைக் காணலாம். இவ்வாறு மருத நில மக்கள் தாங்கள் செய்யும் தொழிலாலும் பொருளாதார அடிப்படையிலும் வேறுபட்டிருந்ததை அவர்கள் வாழ்ந்த இருப்பிடங்களைக் கொண்டு ஊகித்தறிய முடிகின்றது. மேலும், உழவர்களில் உழுதுண்போர் இருப்பிடம் குடில் என்றும் உழுவித்துண்போர் இருப்பிடம் இல்லம் என்றும், தோப்பு உழவர் தம் இருப்பிடம் மனை என்றும் அழைக்கப்படுவதைக் காண முடிகின்றது. வயல்களில் வேலை செய்யும் மருத நில உழவர்கள் போல் அல்லாது தனித்து வேலை செய்யும் தோப்பு உழவராக இவர்களைக் குறிப்பிட்டிருப்பது இவா்கள் உழுதுண்ணும் வேளாளரினும் கீழ் நிலையில் இருந்திருக்கக் கூடும். ஏனெனில் இவர்கள் வளம் பொருந்திய மருத நில ஊர்கள் மற்றும் சிற்றூர்களில் வாழாது தனியாகத் தோப்புகளில், எளிய முறையில் தென்னங் கீற்றால் வேயப்பட்ட மனையில் வசித்து வந்துள்ளமையே இதற்குச் சான்றாகும். இதன்வழி வளமை நிரம்பிய மருத நிலங்களிலே பலப் பிரிவுகளாக மக்கள் வாழ்ந்துள்ளமை புலப்படுகின்றது.

### 2.4.3 மருத நிலத்தாரின் உணவு

நீர் வளத்தால் சிறப்புப் பெற்றது மருத நிலம். ஆகையால் தான் 'சோழநாடு சோற்று வளம் மிகுந்தது' என்று கூறுமளவிற்கு நெல் விளைச்சல் அமோகமாக விளைந்து செழுமையுடன் காணப்பட்டுள்ளது. இன்றும் சோழநாடு தமிழகத்தின் நெற்களஞ்சியம் என்று கூறப்பட்டு வருவதற்கு அங்குள்ள வளமையே காரணம் எனலாம். அவ்வகையில் சோழநாட்டார் நல்ல அரிசிச் சோற்றையும் காய்கறிகளையும் நிறைவாக உண்டு

வாழ்ந்துள்ளனர். மருதநிலத்தார் கரும்பும் அவலும் குறிஞ்சி நிலத்தார்க்கும் கொடுத்து மான் தசையையும் கள்ளையும் பெற்று உண்டுள்ளனர். என்பதை

"தீங்கரும் போடு அவல் வகுத்தோர்
மான் குறையொடு மது மறுகவும் (பொரு: 216-217)

என பொருநராற்றுப்படை குறிப்பிடுகின்றது. ஓய்மா நாட்டைச் சேர்ந்த மருத நிலத்தார் வெண் சோற்றையும் நண்டின் கலவையும் சேரத்து உண்டுள்ளனர். இதனை,

"இருங்காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த
அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு
கவைத்தாள் அலவன் கலவை" (சிறு.193-195)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது. சோழநாடு மற்றும் ஒய்மா நாட்டைச் சேர்ந்த மருத நிலத்தார் நல்ல அரிசிச்சோறு, இறைச்சி முதலிய உணவுகளைஉண்டு செழிப்புடன் வாழ்ந்துள்ளனர். அதற்கு மாறாக தொண்டை நாட்டைச் சேர்ந்த மருத நிலத்தில் வாழ்ந்த உழுதுண்ணும் உழவர்கள் பழைய சோற்றையும் அவலையும் உணவாக உண்டு வாழ்ந்துள்ளனர். இதனை,

"இரும்பு வடித்தன்ன மடியா மென்தோல்
கருங்கை வினைஞர் காதல் அம் சிறாஅர்
பழஞ் சோற்று அமலை முனைஇ
அவல் எறி உலக்கைப் பாடுவிறந்து அயல" (பெரும்:222-224,226)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. மேலும், உழைத்து உழைத்து இறுகிப் போன தோலினையுடையவர்களாகக் குறிப்பிட்டிருப்பது இவர்கள் கடும் உழைப்பினை மேற்கொண்டு வந்துள்ளமையைக் குறிக்கிறது. இத்தகைய உடல் உழைப்பாளிகளின் உணவு இவர்களின் இருப்பிடம் போன்று எளிய முறையில் இருந்ததைக் காணமுடிகின்றது. உழுதுண்ணும் உழவர்களின் நிலை இவ்வாறாக அமைய, இவர்களின் உழைப்பால் வாழும் உழுவித்துண்ணும் உழவர்களின் நிலை சிறந்திருந்ததை அவர்களின் உணவின் தரம் கொண்டே அறிந்து கொள்ள முடிகின்றது. தொண்டை நாட்டில் உள்ள உழுவித்துண்பாருடைய இல்லங்களில் ஏணிக்கும் எட்டாத உயரத்தில் நெற்கூடுகள் நிறைந்திருப்பதால் அவர்கள் வெண்ணிறமுடைய நெற்சோற்றைப் பெட்டைக் கோழிப் பொறியலோடு சேர்த்து உண்டுள்ளனர். இதனை,

"வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
முனைவாழ் அளகின் வாட்டொடு" (பெரும்: 225-256)

என்ற வரிகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வாறு உழைப்பவருடைய உணவு ஒரு விதமாகவும் பிறர் உழைப்பில் வாழ்பவரது உணவு மற்றொன்று விதமாகவும் குறிப்பிடப்பட்டிருப்பது இவர்கள் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுடன் வாழ்ந்துள்ளனர் என்பதனை சுட்டுகின்றது. மேலும், உழுதுண்ணும் உழவரைப் போன்றே எளிமையான வாழ்வை மேற்கொண்ட மற்றொரு பிரிவினரான தோப்பு உழவரின் உணவு முறைப் பற்றியும் பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இவர்களும் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாக வாழ்ந்துள்ளனர் என்பதற்கு இவர்களின் உணவு முறையே தக்க சான்றாக அமைகின்றது. இவர்கள் பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, வள்ளிக்கிழங்கு இவற்றையே உணவாக உட்கொண்டுள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை (356-362) குறிப்பிடுகின்றது. தென்னந் தோப்புகளை உழுதுப் பண்படுத்தும் தொழில் செய்யக்கூடிய இவர்கள் இயற்கையில் கிடைக்கக்கூடிய கிழங்குகள் மற்றும் பழங்களையே உணவாக உட்கொண்டுள்ளனர். நெல் வளம் நிறைந்த மருத நிலத்தில் இவர்கள் தனியே பிரிந்து வாழ்ந்தவர்களாகவும் தனித்தொழில் செய்பவர்களாகவும் குறிப்பிடப்பட்டிருப்பது இவர்கள் பின்தங்கியவரே என்பதை உறுதிப்படுத்துகின்றது. ஏனெனில் இவர்கள் மற்றவரைப் போன்று வயல் நிலம் ஏதுமில்லாது ஊருக்குப் புறத்தே மனை அமைத்து வாழ்ந்துள்ளனர். அங்கே இருக்கும் சூழலுக்கு ஏற்பத் தொழில் செய்து வாழும் நிலையும் ஏற்பட்டுள்ளது எனலாம். சோழநாடு, ஒய்மா நாடு, தொண்டை நாடு எனும் மூன்று நாடுகளிலும் உள்ள மருத நிலத்தாரில் தொண்டை நாட்டில் உள்ள உழுவித்துண்ணும்போரே பசி, வறுமை ஏதும் அறியாத இயல்பினையுடையவராய் உயர்வான வாழ்வை வாழ்ந்துள்ளனர் என்பதை அவர்களின் உணவின் தரம் கொண்டே அறிந்து கொள்ள முடிகின்றது. மேற்கூறியவற்றை நோக்க மருதநில மக்களின் உணவு முறைகளும் வேறுபட்டு இருப்பதை அறியமுடிகின்றது.

### 2.4.4 மருத நில மக்களின் தொழில்

உழவும் வாணிகமும் உயர்ந்தவையாகச் சொல்லத் தகுந்தவை. அவ்விரண்டால் தான் செல்வ வளத்தைத் திரட்டக்கூடும் என்பார் மாங்குடி மருதனார். அவ்வகையில் சிறப்பு வாய்ந்த தொழில்களில் ஒன்றான உழவே இம்மருத நில மக்களின் முக்கியத் தொழிலாகும். “இந்நிலத்துப் பொதுமக்களின் முக்கியத் தொழில் விவசாயம் செய்தலே. இவ்வுழவு முறை

தமிழகத்திற்கு எப்போது வந்தது என்று அறிவது முக்கியமானதொன்றாகும். காரணம் ஒரு சமூகத்தின் வளர்ச்சிக்கு முக்கிய அடித்தளமாக அமைவதே உழவுத்தொழில் தான். மனிதன் கால்நடை நிலம் ஆகியவற்றிற்கு இடையே உள்ள உறவு முறையில் மிக முக்கியத்துவம் பெற்று உழுது பயிரிடும் வேளாண்மைப் பொருளாதாரத்திற்கும் நாகரிகத்திற்கும் அடிகோலுகிறது”[48] என்றும் இவ்வுழவு தமிழகத்திற்கு வந்ததை, “தாமிரபரணி, கொற்கை நகரங்களில் ஆய்வு மேற்கொண்ட அறிஞர் மேலான வங்காளச் சமவெளிப் பகுதியில் இருந்து ஒரிசா, ஆந்திரா வழியாகத் தமிழகத்தில் பயிரிடும் முறை நீர்ப்பாசன வசதி உட்பட கி.மு. முதல் ஐந்து நூற்றாண்டுகளில் வந்திருக்கலாம்”[49] என்று எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியன் கருத்தை கு.ராசரத்தினம் தமது நூலில் சுட்டிக் காட்டியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. நீர்வளமும் நிலவளமும் மிகுந்திருந்த மருத நிலத்தில் நெல் விளைவித்தல், கரும்பு, தென்னை இவற்றை வேளாண்மை செய்தல் போன்றவையே இவர்களின் முக்கியத் தொழிலாக இருந்துள்ளது. இத்தகைய உழவுத் தொழிலை மேற்கொண்ட உழவர்கள் தங்களது நிலத்தை எவ்வாறு உழுது பயிரிட்டுப் பாதுகாத்து அறுவடை செய்துள்ளனர் என்பதைக் காணலாம்.

### 2.4.4.1 உழவு உழுவோர் (களமர்)

களமர் என்ற பெயர்ச்சொல் சங்கப்பாடல்களில் ‘உழவர்’ என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. ஆனால் களமர் என்போர்’மாட்டை ஓட்டுகின்ற உழவர்’ ஆவார் என்று உரையாசியர் இராமசுப்பிரமணியம் விளக்கம் தருகின்றார். இவர்கள் உழும் போது ஏர்மங்கலப்பாட்டு பாடிக்கோண்டே உழுததை மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது. இதனை,

“எருது எறி களமர் ஓதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி அசையினர் கழிமின்” (மலை.469-470)

என்ற வரிகளால் அறியலாம். களமர் இன மக்களைப் பற்றிப் புறப்பொருள் வெண்பாமாலை பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

“களமர் கதிர்மணி காலேகம் செம்பொன்
வளமனை பாழாக வாரிக் - கொளன் மலிந்து
கண்ணார் சிலையார் கவர்ந்தார் கழல் வேந்தன்
நண்ணார் கிளையலற நாடு”[50]

என்று குறிப்பிடுகின்றது. இதில் களமர் என்ற சொல்லுக்கு ‘அடியார்கள்’ என்று உரையாசிரியர் விளக்கம் தந்துள்ளார். ஆகவே இவர்கள் பெருநிலக் கிழார்களுக்கு வேலை செய்பவர்களாக இருந்திருக்கக்கூடும் என்பது தெளிவு.

‘அகல உழுவதை விட ஆழ உழுவதே சிறந்தது’ என்னும் பழமொழிக்கு ஏற்ப பலமுறை நிலத்தை உழும் செஞ்சால் உழவர்கள் உழவுத் தொழிலில் நன்கு நடை பயின்ற பெரிய எருதுகளைப் பிடியானையின் வாயை ஒத்த கலப்பையின் நுகத்தில் பூட்டிக் கொண்டு சென்று, உடும்பு முகம் போன்ற முழுக் கொழு மறையும்படி அமுக்கி வளைய உழுதுள்ளமையைப் பெரும்பாணாற்றுப்படை (196-200) வரிகள் குறிப்பிடுகின்றன.

### 2.4.4.2 நாற்றுநடுவோர்

மருத நில மக்களாகிய உழவா் அமுக்கி ஆழ உழுத நிலத்தைச் சமமாக மிதித்து நாற்றை நட்டுள்ளனர். அதுமட்டுமல்லாது “நிலத்தை உழுதபின்னும் விதைத்த பின்னும் அதனை மட்டம் செய்தலைப் பல்லிலாடுதல் என்று குறித்தனர்”[51] எனத் தட்சிணாமூர்த்தி குறிப்பிடுகின்றார். நாற்று நடும்போது நான்கு புறமும் காற்று ஊடறுத்துச் செல்லுமாறு இடைவெளி விட்டு நட்டுள்ளனர். இவ்வாறு இடைவெளிவிடுவதால் நெற்பயிர் நன்றாக வளரும் என்பதையும் கண்டறிந்துள்ளனர். இதனை,

“கார் ஏறு பொருத கண் அகன் செறுவின்
உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர்
முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்” (பெரு: 210-212)

என்ற பெரும்பாணாற்றப்படை வரிகளாலும்

“பால்வார்பு கெழீஇ பல்கவர் வளி போழ்பு
வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்” (மலை.114-115)

என்ற மலைபடுகடாம் வரிகளாலும் அறியலாம்.

### 2.4.4.5 களைப்பறிப்போர் (களைஞர்)

வயலில் களை பறிப்போர் ‘களைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். உழவர்கள் வயல்களில் வேலை செய்து கொண்டிருக்க. உழவர்களின் பிள்ளைகள், களைப்பறிப்போர் பறித்துப் போட்ட நெய்தல் புதுமலரைச் சூடியுள்ளனர். இதனை,

“முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்
களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்
கள்கமழ் புதுப்பூ முனையின்” (பெரு: 212-214)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது. மேலும் “களைஞர் என்பதற்கு நீக்குவார், களைவார்”[52] என்று சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியமும் பொருள் தருகின்றது. ஆகவே களை பறிப்பவர் சங்க இலக்கியத்தில் ‘களைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளமை தெளிவாகின்றது.

### 2.4.4.6 நெல்லறுப்போர் (அரிநர்)

மருத நிலத்தல் நெல்,கரும்பு விளைந்த கழனிகளிடத்தும் அரிதல் தொழிலுக்கு உரிய நெல் விளைந்த கழனிகளிடத்தும் அறுத்தலும் அரிதலும் ஆகிய தொழில் செய்யும் களமா் ஆகிய உழவருடைய ஆரவார ஓசை சோழநாட்டில் எழுந்துள்ளதைப் பொருநராற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இதனை,

"அறைக்கரும்பின் அரி நெல்லின்
இனக் களமர் இசை பெருக" (பொரு: 193-194)

என்ற வரிகளால் அறியமுடிகின்றது. இங்குக் "களமர் என்று குறிப்பிட்டுள்ள சொல்லுக்கு'உழவர்' எனப் பொருள் விளக்கம் தருகின்றது"[53] சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம். இனக் களமர் என்பதற்கு "ஓரினத்தைச் சேர்ந்த சுற்றத்தாராகிய உழவர்கள்"[54] என உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். பெரிய செந்நெல்லினுடைய உட்கூடு உடைய தாளை அறுப்பவர்கள் என்பதை,

"கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன
பைது அற விளைந்த பெருஞ் செந்நெல்லின்
தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்" (பெரு: 229-231)

என்ற வரிகள் உணர்த்தி நிற்கின்றன. இங்கு நெல்லறுப்பவர்களை வினைஞர் எனக் குறிப்பிடுகிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். வினைஞர் என்ற சொல்லுக்கு "வினைஞர் - உழவர்"[55] எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் பொருள் தருகின்றது. மேலும், இவர்கள் மூப்புக் காரணமாகச் சேற்றில் செல்ல வலிமையில்லாதஎருதுகளின் வருத்தத்தை நீக்கியுள்ளனர் என்பதனை,

"அள்ளல் தங்கிய பகடுஉறு விழுமம்
கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பை" (மது: 259-260)

மதுரைக் காஞ்சி வரிகள் குறிப்பிடுகின்றன. அறுத்த நெல்லை அகன்ற களங்கள் தோறும் நிறையும்படி போராகக் குவித்து வைத்து, பின் கடா அடித்து நெல்லின் கண் உள்ள துகள் அறும்படி வைக்கோல், தூசு முதலியவற்றைப் போக்கி அவை உலர்ந்த பின்னர் கோடைக் காற்றிலே தூற்றிக் குவித்து வைப்பதைப் பெரும்பாணாற்றுப்படை (232-241) குறிப்பிடுகிறது. மேலும்,அரிவாள் கொண்டு முதிர்ந்து விளைந்த நெற்தாளை அரிந்து, சுமையாகக் கட்டிக் கொண்டு போய் மலையாகப் போராக்கி நாள்தோறும் மலையெனக் குவித்துள்ளதைப் பொருநராற்றுப்படை (242-244) வரிகள் குறிப்பிடுகின்றன. உழைக்கும் மக்களால் உருவான நெற்குவியல்

ஏணிக்கு எட்டாத உயரத்தில் பெருநிலக்கிழார்களின் இல்லங்களில் காணப்பட்டதை,

“ஏணி எய்தா நீள் நெடு மார்பின்
முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்
குமரி மூத்த கூடு ஓங் நல் இல்” (பொரு: 245-247)

என்று பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இதுமட்டுமல்லாது நெற்களங்கள் தோறும் சென்று கள் விற்றல் வயலில் களைப்பறித்தல், நாற்றுநடுதல், நெல்லறுத்தல், கடாவிடுதல் போன்ற பணிகளைப் பெண்களே செய்துள்ளனர். இதனை, “களையெடுத்தலும் நாற்று நடுதலும் பெண்களாலேயே செய்யப்பட்டன”[56] என்ற அ.தட்சிணாமூர்த்தி அவர்களின் கூற்றும் உறுதிப்படுத்துகிறது. இவ்வாறு உழுவித்துண்ணும் வேளாளர்கள் என்று அழைக்கப்படும் பெருநிலக்கிழார்களுக்குக் கீழ் உழைத்து வாழும் மக்களாக களமர், களைஞர், அரிநர், வினைஞர் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்ட உழவர்கள் இருந்துள்ளனர் என்பது திண்ணம்.

வளம் பொருந்திய மருத நிலத்தில் உழுதுண்போர், உழுவித்துண்போர் என்ற பாகுபாடு இருந்திருக்கின்றது. இவர்களுக்குள்ளும் உழவர், தோப்பு உழவர், களமர், களைஞர், அரிநர், வினைஞர் எனப் பல படிநிலைகள் இருந்துள்ளன. இதிலும் குறிப்பாக உழுதுண்போர், உழுவித்துண்போர் தோப்பு உழவர் என்று தனித்தனிப்பிரிவுகளாக வாழ்ந்து வந்துள்ளனர். களமர், களைஞர், அரிநர், வினைஞர், என்போர் உழைக்கும் தொழிலாளர்களாக வாழ்ந்துள்ளனர். இதன்மூலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பலப் பிரிவுகளாக மக்கள் பாகுபட்டு வாழ்ந்து வந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. இவ்வாறு பலப் பிரிவினரைக் கொண்டு நீர் வளமும் நிலவளமும் செறிந்த மருத நிலத்தைக் கரிகால் பெருவளத்தான், நல்லியக்கோடன், தொண்டைமான் இளந்திரையன், பாண்டியன் நெடுஞ்செழியன், நன்னன் போன்றோர் பல பகுதிகளில் ஆட்சி செலுத்தி வந்துள்ளனர்.

### 2.5 நெய்தல் நிலம்

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலமாகும். இந்நிலம் நெய்தல் மலர்களையும் அத்திணையின் உரிப்பொருளையும் அடிப்படையாகக் கொண்டு நெய்தல் என்ற பெயரினைப் பெற்றது. “கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப் பெயர் பெறும். இங்கு நெய்தல் மலர்

மிகுதியாதலின், இந்நிலம் இப்பெயர் பெற்றது எனலாம். காதலனைப் பிரிந்த காதலி தன் தனிமையை நினைந்து இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகிய ஒழுக்கம் பற்றி இந்நிலம் நெய்தல் எனப் பெயர் பெற்றது என்று கூறப்படுதலும் உண்டு"[57] என்கிறார் மா.இராசமாணிக்கனார். மற்ற மூன்று நிலங்களைப் போன்று நெய்தல் நிலமும் நெய்தல் மலர்கள் அதிகமாக இருத்தலின் நெய்தல் என அழைக்கப்பட்டுள்ளது. இந்நிலத்தில் உள்ள பெரும்பான்மை மக்கள் தங்கள் வாழ்வாதரத்திற்காகக் கடலைச் சார்ந்து இருக்கின்றனர். கடலுக்குள் சென்றவருக்காக இரங்கி இருத்தல் அந்நிலப் பெண்களின் இயல்பு. அதனால் இந்நிலத்தின் உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் என்றாகிறது. இவ்வாறு நெய்தல் நிலம் என்பது கடல் சார்ந்த பகுதியை முதன்மையாகக் கொண்டு விளங்குவதை அறியலாம்.

### 2.5.1 நெய்தல் நில மக்கள்

நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் பரதவர், நுளையர், அளவர், வலையர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் என்றும் அழைக்கப்பட்டனர். நெய்தல் நிலத்தலைவனாகச் சேர்ப்பன், புலம்பன், துறைவன், கொண்கன் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். "ஆடவர், பரதர், நுளையர், அளவர், வலையர் எனப்பட்டனர் அவரதம் பெண்டிர், பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனப்பட்டனர் மற்றும் தலைவராயினார் சேர்ப்பன், புலம்பன் எனப்பட்டனர்"[58] என மா.இராசமாணிக்கனாரும் குறிப்பிடுகின்றார். "நெய்தல் நிலத்தலைமக்கள் கொண்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பன் என்னும் பெயர்களால் வழங்கப்பட்டனர். நெய்தற்கு மக்கட்பெயர் நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர் எனப்பட்டது"[59] என வி.சசிவல்லியும் கூறுகின்றனர். இவர்களின் கூற்றுப்படி கடல் சார்ந்த பகுதியில் வாழும் நெய்தல் நில மக்கள் மீன்படித்தல், உப்பு விளைவித்தல், சங்கு, முத்துக்குளித்தல் போன்ற தொழில்களை மேற்கொள்வதால் அவர்களுக்கு இத்தகைய பெயர்கள் வழங்கப்பட்டிருக்கலாம்.

### 2.5.2 நெய்தல் நில மக்களின் குடியிருப்பு

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் எனப்படும். எனவே கடற்கரையை அடுத்துள்ள மணற் பகுதியில் குடிசைகள் அமைத்து வாழ்ந்துள்ளனர். போரில் இறந்து பட்ட வீரனுக்கு நடுகல் இட்டு அதைச் சுற்றி வேல்களை வரிசையாக நட்டு வைத்து, அதன் உட்புறமாகக்

கேடயங்களை வரிசையாக வைத்தது போல பரதவர்களின் குடில்கள் இருந்ததைப் பட்டினப்பாலைக் குறிப்பிடுகின்றது. அது குறுகிய நுழைவாயிலைக் கொண்டதாகவும் நீண்ட தூண்டிலின் காம்புகளைக் கூரைகளின் நடுவே கொண்டதாகவும் அமைக்கப்பட்டிருந்ததை அறியலாம். மேலும், பரதவர் இல்லங்களின் முன்னர் உள்ள மணற்பரப்பில் வலைகள் உலத்தப்பட்டிருப்பது நிலவின் நடுவில் அமைந்துள்ள களங்கம் போல காட்சி அளித்துள்ளது. இதனை,

"கிடுகு நிரைத்து எ∴கு ஊன்றி
நடு கல்லின் அரண் போல
நெடுந்தூண்டிலில் காழ் சேர்த்திய
குறுங் கூரைக் குடிநாப்பண்
நிலவு அடைந்த இருள் போல
வலை உணங்கும் மணல் முன்றில்" (பட்: 78-83)

என்ற வரிகள் சுட்டுகின்றன. சோழநாட்டுப் பரதவர்கள் இவ்வாறு குடில்களில் வாழ்ந்துள்ளமையைப் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. மேலும், பரதவர்கள் பட்டினம், பாக்கம் போன்ற இடங்களிலும் பல்வேறு நிலைகளில் வாழ்ந்துள்ளமையைப் பத்துப்பாட்டு நூல்கள் குறிப்பிடுகின்றன.

பால் போன்ற நிறமுடைய குதிரைகளோடு வடநாட்டில் உள்ள நுகர் பொருள்களையும் கொண்டு வந்து தருகின்ற மரக்கலங்கள் சூழ்ந்து கிடக்கும் பெருமையையுடைய கடற்கரையில் உயர்ந்து நிற்கின்ற மாடங்கள் மிக்க தெருக்களில் பரதவர் வாழ்ந்துள்ளதை,

"............................... பாற்கேழ்
வால் உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
மாடம் ஓங்கிய மணல் மலி மறுகின்
பரதர் மலிந்த பல்வேறு தெருவின்" (பெரு: 319-323)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன. நெய்தல் நிலப்பகுதியான நீர்ப்பாயல் என்னும் பட்டினத்தில் வணிகர், பிறத் தொழில் செய்வோர் மட்டுமல்லாது பரதவர்களும் வாழ்ந்துள்ளனர். எனவே தொண்டைநாட்டில் உள்ள நெய்தல் நில மக்கள் சிறப்புற்று வாழ்ந்துள்ளனா். இதனை "தொண்டைநாட்டு நெய்தல் நிலத்தில் உப்பு விளைக்கப்பட்டது. மீன் பிடிக்கப்பட்டது. கடற்துறைப் பட்டினம் கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கியது அங்கு வாணிகத்திற் சிறந்த நெய்தல் நிலமக்கள் வாழ்ந்தார்கள்"[60] என மா.இராசமாணிக்கனார் கூற்றும் இதனை உறுதிப்படுத்தும். ஒய்மா நாட்டில் உள்ள எயிற்பட்டினத்திலும் பரதவர்கள்

வாழ்ந்துள்ளனர். தாழை அன்னம் போன்றும், பொன் போன்று செருந்தியும் நீல மணி போல கழிமுள்ளியும் நித்திலம் போன்று புன்னையும் மலா்ந்து காட்சிதரும், கடற்கரைப் பகுதியில் உப்பங்கழிகள் சூழ்ந்த ஊர்களையும் எயிலால் சூழப்பட்ட குளிர்மிகு பொய்கைகளையும் உடைய எயிற்பட்டினம் விளங்கியது. அங்குப் பரதவர்கள் வாழ்ந்தமையைச் சிறுபாணாற்றுப்படை (146-153) குறிப்பிடுகின்றது. ஒய்மாநாட்டு நெய்தல் நில மக்கள் பட்டினத்தில் வாழ்ந்துள்ளமை இதனால் பெறப்படும்.

பட்டினம் என்பது அழகிய கடற்கரை நகரம் "கடற்கரையில் உண்டாகும் நகரங்கள் பட்டினம் என்று பெயர் பெரும்"[61] என்று கூறுவார் ரா.பி.சேதுப்பிள்ளை. எனவே நெய்தல் நிலத்தில் உள்ள நகரத்தைச் சிறப்பாகக் குறிக்கப் பட்டினம் என்று வழங்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியது. பரதவர்களில் ஒரு சிலர் சிறு குடில்களில் மட்டுமல்லாது பட்டினம் போன்ற நகரங்களிலும் வாழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது.

குலைமிக்க தெங்கு, குலையுடைய வாழை, கொழுத்த காந்தள் மலர் மற்றும் மலர்ந்த சுரபுன்னையும் துடி போன்று முழங்கும் பேராந்தையும் இருக்கின்ற சேரிகளை உடைய நெய்தல் நிலத்து ஊர்களில் வண்டுகளின் இன்னிசை கேட்டு மணல் மேடுகளில் மயில்கள் தோகை விரித்து ஆடியதைக்

"கோட்தெங்கின் குலை வாழை
கொழுங்காந்தள் மலர் நாகத்து
துடிக்குடிஞை குடிப்பாக்கத்து
யாழ் வண்டின் கொளைக்கு ஏற்ப
கலவம் விரித்த மடமஞ்ஞை
நிலவு எக்கா்ப் பல பெயர" (பொரு: 208-213)

என்ற பொருநராற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன. எனவே நெய்தல் நில மக்கள் பாக்கம் போன்ற ஊர்களிலும் வாழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது. மேலும் "கடற்கரைச் சிற்றூர்கள் பாக்கம் என்று பெயர் பெறும்"[62] என்ற ரா.பி.சேதுப்பிள்ளை கூற்றும் கடற்கரையில் வாழ்ந்த பரதவரே இந்நிலத்துக்குரிய குடிமக்கள் அவர்கள் பட்டினம் என்ற பேரூர்களிலும் பாக்கம் என்ற சிற்றூர்களிலும் வாழ்ந்தார்கள்"[63] என்னும் இராசமாணிக்கனார் கூற்றும் உறுதிப்படுத்தும். பரதவர்கள் பட்டினம் போன்ற நகரங்களிலும் பாக்கம் போன்ற சிற்றூர்களிலும் வாழ்ந்துள்ளனர். கடற்கரையை அடுத்த மணற்பரப்பில் சிறு குடில்கள் அமைத்தும்

வாழ்ந்துள்ளனர். முதிர்ந்து விளங்கும் சிறந்த முத்துக்கள் மற்றும் சங்கினை மூழ்கி எடுப்பவர் உறையும் சேரிகள் குறித்து,

"விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்கு வளை இருஞ்சேரி" (மது: 135-136)

என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இங்கு முத்துக் குளிப்பவர், சங்கு எடுப்பவர் உறையும் இடங்களைச் சேரி என்று குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. இதே கருத்தை "கொற்கை நகரத்தில் முத்தெடுப்பார் சேரி, சங்கு குளிப்பார் சேரி என்னும் பல சேரிகளிருந்தன அங்குச் சிறப்பாக முத்தெடுக்கும் தொழிலும் சங்கெடுக்கும் தொழிலும் நடைபெற்றன"[64] என இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. எனவே மீன்பிடிக்கும் தொழில் உப்பு விளைக்கும் தொழில் செய்வோர், முத்து, சங்கு குளிப்பவர் இருப்பிடம் எனத் தனித்தனியாக இருந்துள்ளமையைக் காண முடிகின்றது. கடலில் சென்று மீன்பிடிக்கும் பரதவர்கள் அல்லாது பொய்கைகளுக்கும் குளங்களுக்கும் சென்று வலை வீசி மீன்பிடிக்கும் வலைஞர் இனத்தவரின் குடியிருப்பு குறித்துப் பெரும்பாணாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இவர்கள் வேழக் கோலை நிரல்பட வைத்து இடையிடையே வெள்ளிய மரக் கொம்புகளைக் கலந்து, தாழை நாராலே, தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட சிறிய குடிலின் முன் புன்னையின் கொம்பை வெட்டிப் பந்தல் அமைத்து இதனை, பெரும்பாணாற்றுப்படை (263 - 267, 274) வரிகள் குறிப்பிடுகின்றன. முல்லை நிலத்தில் வரகு வைக்கோலால் வேயப்பட்ட குடிசை, மருத நிலத்தில் நெல் வைக்கோலால் வேயப்பட்ட குடிசை போல நெய்தல் நிலத்தில் மிகுதியாக வளர்ந்திருந்த தருப்பைப்புல்லால் குடிசை வேயப்பட்டிருந்ததை அறியலாம். இவ்வாறு நெய்தல் நில மக்கள் பட்டினம், பாக்கம் போன்ற பேரூர், சிற்றூர்களில் மட்டுமல்லாது சேரிப்பகுதிகளிலும் வாழ்ந்துள்ளனர். நெய்தல் நில மக்களில் சிலர் குடிசைகளில் வாழ்ந்தவராகவும் மற்றையோர் பட்டினம், பாக்கம் போன்ற துறைமுக நகரங்களில் வளமாக வாழ்ந்ததாகவும் குறிப்பிட்டிருப்பதால் இவர்களுள் பொருளாதார மேம்பாடுடையவர் நகரத்திலும் எளிமையானவர்கள் சேரிப் பகுதிகளிலும் வாழ்ந்திருக்கக்கூடும்.

**2.5.3 நெய்தல் நில மக்களின் உணவு**

சோழநாட்டு நெய்தல் நில மக்கள் தாம் பிடித்து வந்த கடல் இறா, வயல் ஆமை இவ்விரண்டையும் பக்குவம் செய்து உட்கொண்டுள்ளனர் இதனை,

“கடுந்தொழில் கலிமாக்கள்
கடல் இறவின் சூடு தின்றும்
வயல் ஆமைப் புழுக்கு உண்டும்” (பட்.62-64)

என்ற பட்டினப்பாலை வரிகள் குறிப்பிடுகின்றன. இதே கருத்தை, “காவிரிப் பூம்பட்டினத்து மீனவர் கடல் இறா, வயல் ஆமை ஆகிய இரண்டையும் பக்குவம் செய்து உண்டனர்”[65] என இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் இங்கு எண்ணத்தக்கது.

தொண்டை நாட்டு பட்டினத்து வாழ்ந்த நெய்தல் நிலத்தார் நெல்லையிடித்து மாவாக்கி அதனை ஆண் பன்றிக்குக் கொடுத்துள்ளனர். பின்பு பல நாளும் நிறுத்தி வளர்த்த ஆண் பன்றியைக் கொன்று அதன் இறைச்சியைச் சமைத்து உண்டுள்ளனர். களிப்பு மிகுந்த கள்ளையும் பருகியுள்ளனர. இதனைப் பெரும்பாணாற்றுப்படை (342-345) வரிகள் குறிப்பிடுகின்றன.

ஒய்மா நாட்டு நெய்தல் நிலத்தார், நுளைச்சியர் காய்ச்சிய அரித்த தேறலையும் (கள்) உலர்ந்த குழல் மீனின் சூட்டிறைச்சியையும் உட்கொண்டுள்ளனர். இதனை,

“…………….. நுளைமகள் அரித்த
பழம்படு தேறல் பரதவர் மடுப்ப
வறற் குழற் சூட்டின்” (சிறு: 158-159, 163)

என்ற வரிகள் சுட்டுகின்றன. சோழநாட்டு நெய்தல் நிலத்தார் தமக்குக் கிடைத்தப் பொருளை உணவாகச் சமைத்து எளிய உணவையே உண்டுள்ளனர். தொண்டை நாடு மற்றும் ஒய்மா நாட்டில் இருந்த நெய்தல் நிலத்தார் பேரூர்களில் வாழ்ந்தமையால் அவர்களது உணவும் சிறப்பாக அமைந்திருக்கின்றது. அதிலும் குறிப்பாகத் தொண்டை நாட்டில் வாழந்த வலைஞர், குற்றாதக் கொழியல் அரிசியை நல்ல களியாகத் துழாவிக் கூழ் சமைத்து அதில் நெல் முளையை இடித்துப் போட்டு கலந்து. பின்பு அதை இரண்டு நாள் இரவும் பகலும் வைத்திருந்து சாடியில் வைத்து வெந்நீரில் வேகவைத்து அதை நெய்யரியால் வடிகட்டிப் பிழிந்த மதுவோடு சேர்த்து பச்சைமீனையும் சூட்டோடு உண்டுள்ளனர். இதனை, பெரும்பாணாற்றுப்படை (275-282) வரிகள் குறிப்பிடுகின்றன. மேற்கூறியவற்றை நோக்க, அந்தந்த நில இயல்புக்கு ஏற்ப உணவு சமைத்து உண்டுள்ளனர். நெய்தல் நிலத்தவரின் முக்கிய உணவு மீனாகவே இருந்துள்ளது. தரம் வாய்ந்தோர் சுவை மிகுந்த கள்ளோடு பிற இறைச்சிகளையும் சேர்த்து உண்டு

வாழ்ந்துள்ளனா். நிலமக்களின் தகுதிக்கேற்ப உணவும் வேறுபடுவதை அறியமுடிகிறது.

### 2.5.4 நெய்தல் நில மக்களின் தொழில்

கடல் சார்ந்த பகுதி ஆகலின் அதனோடு தொடர்புடைய தொழில்களையே மேற்கொண்டுள்ளனர். நெய்தல் நில மக்களின் முதன்மைத் தொழில்களாக மீன் பிடித்தல், விற்றல், உப்பு விளைவித்தல், விற்றல் போன்றவையாகும். இதனை “நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை, படகு முதலியவற்றை அமைத்தல், மீன் பிடித்தல், உப்பை விளைத்தல், மீன் விற்றல், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்துதல் அவற்றை விற்றல் முதலிய தொழில்களில் முனைந்திருந்தார்கள்”[66] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

நீண்ட கடலிலே சென்று வலைவீசிக் கடலின் கண்ணுள்ள மீன்களை வருத்திப் பிடிக்கும் தொழில் செய்பவர்களைப் பரதவர்கள் என்று குறிப்பிடுகின்றனர். இந்தப் பரதவர்கள் பரவர் என்றும் அழைக்கப்படுகின்றனர். பரவர் என்பதற்கு அபிதான சிந்தாமணி “நெய்தனில மாக்களில் ஒரு வகைச் சாதியார் வலை வீசின திருவிளையாடல் விழா நடத்திவைப்போர் என்றும் கடலோடி வகுப்பினர்”[67] என்றும் கூறுகின்றது. வலை வீசின என்பது மீன் பிடித்தலைத் தொழிலாகக் கொண்டவர்கள் என்பதைக் குறிக்கிறது. மேலும் ஒரு வகை சாதியார்எனக் கூறியிருப்பது நெய்தல் நிலத்தில் பல பிரிவுகளாக மக்கள் வாழ்ந்தமையைச் சுட்டுகின்றது. “கடலுக்குப் பரவை என்றும் பெயர் உண்டு. எனவே கடல் வாழ்நர் பரதவர் எனப்பட்டனா் போலும். பரதவர்கள் மீன் பிடித்தலையும் உப்பு விளைத்தலையும் தொழிலாகக் கொண்டனர்”[68] என அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிடுகின்றார்.

நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனா். மேலும், கடல் சார்ந்த மக்கள் பல பெயர்களில் அழைக்கப்பட்டாலும் பரதவர் என்பதே பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது. இதனை, “நெய்தல் நில மருவிய குலப் பெயரால் பரதவர், நுளையர், திமிலர் என்ற ஆண்களைக் குறிக்கும் பெயர்களில் முதலாவதான பரதவர் என்ற பெயர் மட்டுமே சங்க இலக்கியத்தில் பல்கி வழங்கப்பட்டுள்ளது”[69] என்ற தி.முத்துக்கண்ணப்பன் கூற்றும் இதனை மெய்ப்பிக்கிறது. இவர்கள் நீண்ட தூண்களைக் கொண்ட உயர்ந்த மாடங்களில் ஏற்றப்பட்டிருந்த

விளக்கொளியைக் கொண்டு இரவில் படகுகளில் ஏறிக் கடலுக்குச் சென்று மீன் பிடித்துள்ளனர். இதனை,

"நெடுங்கால் மாடத்து ஒள்ளரி நோக்கி
கொடுந்திமில் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்" (பட்: 111-112)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. பகலில் மட்டுமல்லாது இரவும் சென்று மீன் பிடித்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. பரதவர்கள் உவா நாளில் கடலுக்குச் சென்று மீன் பிடிப்பதில்லை என்பதையும் குறிப்பிடுகின்றது. இதனை, "பாய் இரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது" (பட்:92) என்ற வரி சுட்டுகின்றது. எனவே பரதவர்கள் கடலிலும் கழிகளிலும் சென்று மீன் பிடித்து வாழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது. பரதவர்கள் மீன் பிடித்தல் தொழில் மட்டுமல்லாது கடல் வாணிகத்திலும் ஈடுபட்டிருக்கின்றனர்.

பரதவர்களில் சிலர் மீன் பிடிக்கும் தொழிலிலும் சிலர் முத்துக்குளித்தல், சங்கெடுத்தல் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். "முத்துச் சிப்பிகள் நிறைந்த கடற்கரைப் பகுதியில் வாழந்தவர் முத்துக் குளிக்கும் தொழிலிலும் சங்கெடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டனர்"[70] என்று நெய்தல் நிலத்தார் செய்த மற்றொரு தொழிலைச் சசிவல்லி சுட்டிக் காட்டியிருப்பதும் நோக்கத்தக்கது. அது மட்டுமல்லாது சிலர் செல்வச் செழிப்போடு வாழ்ந்துள்ளமையையும் சுட்டுகிறது. பட்டினம் போன்ற துறைமுக நகரங்களில் வாழ்ந்த பரதவர்கள் கடல் வாணிகத்தில் ஈடுபட்டுள்ளனர். இதனை,

"நீரினின்றும் நிலத்து ஏற்றவும்
நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்
அளந்து அறியாப் பல பண்டம்" (பட்:129-131)

என்ற வரிகள் அளந்து கூற இயலாத அளவற்றப் பொருள்கள் கடலில் செல்லும் மரக்கலங்களில் ஏற்றப்பட்டிருந்ததாகப் பட்டினப்பாலையும்

"முழங்கு கடல் தந்த விளங்கு கதிர் முத்தம்
அரம் போழ்ந்து அறுத்த கண்நேர் இலங்குவளை
பரதர் தந்த பல்வேறு கூலம்" (மது: 314-316)

கூலம் முதலியவற்றை மரக்கலங்களில் ஏற்றியதை மதுரைக்காஞ்சியும் கடல் வாணிகம் செய்யும் பரதவர்கள் இருந்தமையை,

"பாற்கேழ் வால் உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்
நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை
பரதர் மலிந்த பல்வேறு தெருவின்" (பெரு: 319-321, 23)

எனும் பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. இதனையே "பரதர் என்ற சொல் பல்வேறு பண்டங்களையும் கலங்களின் வழி ஏற்றுமதி இறக்குமதி செய்தலாய வாணிகத் தொழிலில் ஈடுபட்டிருந்த பரதவரையே குறிக்கும் எனக்கோடலேதக்கது"[71] என்ற தி.முத்துக்கண்ணப்பன் கூற்றும் இதனை மெய்ப்பிக்கிறது. எனவே பரதவர்கள் மீன் பிடித்தல், முத்துக் குளித்தல், சங்கெடுத்தல் தொழில் மட்டுமல்லாது கடல் வாணிகத்திலும் ஈடுபட்டுள்ளனர் கடல் வாணிகத்தில் ஈடுபட்ட பரதவர்கள் சிறப்பபான வாழ்வை வாழ்ந்துள்ளனர். மீன் பிடித்தல், சங்கு, முத்து எடுத்தல் தொழிலில் ஈடுபட்டவர்கள் தனித்தனிக் குடியிருப்புகளில் எளிமையாகவும் வாழ்ந்துள்ளனா். பட்டினம் போன்ற நகரங்களில் வாழ்ந்தவர் கடல் வாணிகம் செய்யும் உரிமையுடையோராய் வாழ்ந்திருப்பது இவர்களுள் இரு பிரிவினா் இருந்ததைக் குறிக்கிறது. மேலும் பரதவர்களில் செல்வாக்கு பெற்றவர்கள் சிற்றரசர்களாகவும் குறுநில மன்னர்களாகவும் திகழ்ந்துள்ளனர். அவர்களைத் தென்பரதவர் என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"செற்ற தெவ்வர் கலங்கத் தலைச் சென்று
அஞ்சுவரத் தட்கும் அணங்குடைத் துப்பின்
கோழ் ஊஉன் குறைக் கொழுவல்சி
புலவு வில் பொலி கூவை
ஒன்று மொழி ஒலி இருப்பின்
தென் பரதவர் போர் ஏறே" (மது: 139-144)

என்ற வரிகள் உறுதிபடுத்தும். மேலும், பரதவர் என்பதற்குத் "தென்றிசைக்கண் ஆண்ட ஒரு சார் குறுநில மன்னர்"[72] எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் விளக்கம் தந்திருப்பதும் கவனிக்கத்தக்கது.

மேலும், கட்டுமரங்களிலும் படகுகளிலும் கடலுக்குச் சென்று மீன்பிடித்த பரதவர்கள் போல் அல்லாது சிறிய வலைகொண்டு வயல், பொய்கை, மடு போன்ற இடங்களில் மீனைப் பிடித்து விற்பனை செய்த வலைஞர் என்ற மற்றொரு பிரிவினரும் நெய்தல் நிலத்தில் வாழ்ந்துள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை (269-274) வரிகள் சுட்டுகின்றன. இவர்கள் சிறிய வலை மட்டுமே கொண்டு, வயல் மற்றும் குளங்களின் அருகே நெடு நேரம் அமர்ந்து, மீன் பிடித்து வாழும் எளிய வாழ்வினா்.

பொருளாதாரத்தில் பின் தங்கியப் படகில் சென்று மீன் பிடிக்கும் வசதியற்ற இவர்கள் கோடைக்காலமாயினும் பெரிய குளங்களுக்குச் சென்று

உலாவி மீன் பிடித்து வாழ்ந்துள்ளனர். முன்னர் குறிப்பிட்டுள்ள இவர்களது இருப்பிட அமைப்பைக் கொண்டும் இவர்களது நிலையை உய்த்துணர முடிகின்றது. நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தல் தொழில் மட்டுமல்லாது உப்பு விளைவித்தல் தொழிலையும் மேற்கொண்டுள்ளனர். கடற்கரையோரங்களிலும் கழிமுகத்திலும் உள்ள உவர்நிலத்தில் சிறு சிறு பாத்திகள் அமைத்து, கடல் நீரைப் பாய்ச்சி உப்பு விளைவித்துள்ளனர். அவ்வாறு உப்பு விளைவிக்கும் தொழில் செய்யக் கூடியவர்கள் ‘அளவர்’ என்று அழைக்கப்பட்டுள்ளனா். இதனை, “உப்பெடுக்கும் நிலப்பகுதி ‘அளம்’ எனப்படும். அத்தொழிலில் ஈடுபட்டவர் அளவர் எனப்பட்டனர்”[73] என இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். ஆகவே அங்கு உப்பை விளைவிப்பதால் அவர்களுக்கு ‘அளவர்’ என்ற பெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், இவர்கள் உப்பு தயாரிக்கப்பட்ட இடத்திலேயே உப்பு விற்றுள்ளனர். உப்பங்கழியுள்ள இடங்களிலும் இத்தொழில் நன்கு நடைபெற்று வந்துள்ளது. இதனை,

“இருங்கழிச் செறுவின் வெள் உப்பு பகர்நரொடு” (மது:117)
இருங்கழிச் செறுவின் தீம்புளி வெள்உப்பு” (மது:318)

எனும் வரிகள் சுட்டுகின்றன. உப்பளங்களில் விளைந்த உப்பை உப்பளவர்களிடமிருந்துப் பெற்று பல இடங்களுக்குச் சென்று விற்பவர்களும் இருந்துள்ளனர். அவர்களை உமணர்கள் என்று குறிப்பிடுகின்றனர். இதனை, “உணவுப் பொருள்களுள் மிகச் சிறந்தது உப்பு. உப்பு வாணிகர் உப்பளங்களிலிருந்து உப்பை வாங்கி வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊரூராய்ச் சென்று விற்றனர்”[74] என்பதை இராசமாணிக்கார் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

கடலில் கிடைக்கக்கூடிய மீன், உப்பு, சங்கு, முத்து போன்ற இவற்றையெல்லாம் கலங்களில் ஏற்றிக் கலங்களை இயக்கக்கூடியவர்களும் இருந்துள்ளனா். கலங்களை இயக்கும் தொழில் செய்யக்கூடியவா்களை மதுரைக் காஞ்சி ‘மீகாமர்’ என்று குறிப்பிடுகின்றது. இதனை, ‘விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்’ என்ற வரி சுட்டுகின்றது. இதனையே “பரதவர்கள் கடலில் கலம் செலுத்தும் பணியாளர்களாய் இருந்தவர்கள்”[75] என்பதைச் சசிவல்லியும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளமைக் கவனிக்கத்தக்கது. இவ்வாறு நெய்தல் நிலத்தில் பரதவர்கள் தென் பரதவர், வலைஞர், அளவர், மீகாமர் போன்ற பலப் பிரிவினா் இருந்துள்ளனா். நெய்தல் நில ஆண்கள்

மட்டுமல்லாது பெண்களும் மீன், உப்பு விற்றல், கள் தயாரித்து விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

மீன் பிடித்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழும் நெய்தல் நில மக்களில் ஒரு பிரிவினர் எளிமை வாழ்வும் மற்றையோர் செல்வசெழிப்போடும் வாழ்ந்து வந்துள்ளதை இப்பகுதி தெளிவுபடுத்துகிறது. மீன் பிடித்தல் தொழில் செய்பவரிலே கடலுக்குச் சென்று மீன் பிடிப்பவர் பரதவர், திமலர் எனவும் சிறு வலை கொண்டு பொய்கை, குளம், வயல் ஆகியவற்றில் மீன் பிடித்து வாழ்பவர் 'வலைஞர்' எனவும் அழைக்கப்பட்டுள்ளனர். பரதவர்களில் சிலர் செல்வ செழிப்போடு கடல் வாணிகத்தில் ஈடுபட்டுள்ளனர். சிற்றரசர்களாகவும் இருந்துள்ளனர்.

உப்பு விளைவிக்கும் அளவர், கலங்களைச் செலுத்தும் மீகாமர் எனப் பல பிரிவினராக வாழ்ந்துள்ள நெய்தல் நிலத்தை நல்லியக்கோடன், தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன், கரிகால் பெருவளத்தான், நன்னன் போன்றோர் ஆட்சி செலுத்தி வந்துள்ளனர் எனலாம். அதிலும் குறிப்பாகத் தொண்டை நாடு, பாண்டியநாடு, சோழநாடு போன்றவற்றில் வாழ்ந்த நெய்தல் நிலத்தார் பொருளாதாரத்தில் மேம்பட்டவராக வாழ்ந்திருத்தல் குறிப்பிடத்தக்கது.

தலையாலங்கானத்துச் செருவென்ற செழியன் குறுநில மன்னர்களாக விளங்கிய பரதவரை அடிபணியச் செய்துள்ளான். அதற்காக அவர்களோடு போரிட்டுள்ளான். இதனை, மதுரைக்காஞ்சி (139-144) வரிகள் சுட்டிக்காட்டுகின்றன. பரதவர்களின் வன்மை, திண்மை, வலிமையைக் கண்டு ஏற்காது பாண்டிய பேரரசு அவர்களைப் பணியச் செய்துள்ளதாகத் தெரிகிறது. இதனையே மதுரைக் காஞ்சிக்கு உரையெழுதிய பொ.வே.சோமசுந்தரனார் "தென்பரதவர் என்பார் தென்னாட்டின் கண் இருந்து குறும்பு செய்து வந்த குறுநில மன்னர்களாகிய பரதவர் என்றும் இவர்களைச் சோழ மன்னர்களும் பாண்டிய மன்னர்களும் வென்று அடிமைப்படுத்தினர்"[76] என்று விளக்கம் அளித்திருப்பதும் கவனிக்கத்தக்கது. சோழப் பேரரசு பரதவர்களை அடிமைப்படுத்தியதற்குப் புறநானூறு 378ஆவது பாடல் சான்றாக அமைவதைக் காண முடிகின்றது. இவ்வாறு ஒவ்வொரு நிலத்துக்குள்ளும் பலப் பிரிவுகளாகத் திணை சார்ந்த மக்கள் வாழ்ந்துள்ளனர்.

**2.6 பாலை நிலம்**

மணலும் மணல் சார்ந்த பகுதியும் பாலை என அழைக்கப்படுகின்றது. பாலை என்ற தனி நிலம் இல்லை எனவும் முல்லையும் குறிஞ்சியும் தனது இயல்பு நிலையில் இருந்து மாறும் பொழுதே பாலை என்பது உருவாகிறது என்பதையே பலரும் குறிப்பிடுகின்றனர். "பாலை என்பதற்கு நிலம் இன்றேனும் வேனிற் காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறியிட்டார்"[77] என இளம்பூரணார் விளக்கம் கூறுகிறார்.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"[78]

என்ற சிலப்பதிகார அடிகள் நானிலத்தில் பாலை என்பது முல்லை, குறிஞ்சி நிலங்கள் வறட்சியான காலத்தில் கொள்ளும் ஒரு நிலையாகக் குறிப்பிடுவதை "குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் அடுத்தடுத்து இருப்பவை இவை முதுவேனிற் காலத்தில் தமக்குரிய நீர் வளத்திற்குறைந்து மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற மிக்க வெப்பத்தையும் அடையும். அக்காலத்தில் அந்நிலப்பகுதி 'பாலை' எனப் பெயர் பெறும் என்றும் குறிஞ்சி நிலம் மட்டும் தனியே பாலையாகத் திரிதலும் உண்டு இங்ஙனமே முல்லை நிலம் தனியே பாலையாகத் திரிதலும் உண்டு. இங்ஙனம் பாலையாய்த் திரிந்த நிலத்தையும் சேர்த்து நிலம் ஐவகையாகக் கோடலும் உண்டு. எனவே பாலை என்பது குறிஞ்சி நிலத்தை அல்லது முல்லை நிலத்தைச் சார்ந்தது. நன்செய் புன்செய் விளைவு அற்றது. நீர் வளம் மிகக் குறைந்தது. வெப்பம் மிகுந்தது. செம்மையான பாதையற்றது மக்கள் நேர்மையாக வாழ வசதிக் குறையுள்ளது என்பனவற்றை எளிதில் அறியலாம்"[79] என மா.இராசமாணிக்கனாரும் பாலை நிலம் பற்றிய கருத்தினை முன் வைக்கின்றார். "பாலைக்குத் தனி நிலம் இல்லை. முல்லையும் குறிஞ்சியும் தத்தம் இயல்பு குன்றும் பொழுது பாலை எனப் பெறும். இங்கு வாழும் மக்கள் வாழ்க்கை முல்லை நில மக்கள் வாழ்க்கையாகவோ குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கையாகவோ அமையாமல் தனித்த தன்மையுடையதாகும்"[80] என்று சு.இராசாராமும் கருத்துத் தெரிவிக்கின்றனர். எனவே பாலை என்பது தனித்த நிலமாக இல்லை என்பது தெளிவாகிறது. மேலும் அங்குள்ள மக்களும் நிலம் தம் இயல்பு மாறுவது போன்று தாங்களும் இயல்பு

நிலையிலிருந்து மாறி வேறு பெயர்களில் வாழ்ந்திருக்கின்றனர் எனலாம். இதையே கா.சிவத்தம்பி, “கோடை காலத்தில் குன்றுப் பகுதியில் வாழும் மக்களோ அல்லது இவர்களிடையே உள்ள குழுவினரோ பிழைப்பிற்காக வழிப்பறியினை நடத்தியிருப்பது சாத்தியமே”[81] என்று குறிப்பிடுவதை அறியலாம். உரையாசிரியர்களின் கூற்றுப்படி பாலை என்பது தனித்ததாக இல்லாது முல்லை, குறிஞ்சி நிலங்களே அத்தகைய இயல்பினைக் கால மாற்றத்திற்கேற்ப பெற்றுள்ளமையைக் காணலாம்.

### 2.6.1 பாலை நில மக்கள்

இப்பாலை நிலத்தில் எயினர், மறவர், எயிற்றியர் வாழ்ந்தனர். இதையே,“பாலை நிலத்தலைவன் விடலை, காளை, மீளி எனப்பட்டான் தலைவி எயிற்றி எனப்பட்டாள். குடிமக்களுள் ஆடவர், எயினர், மறவர் எனப்பட்டனர். பெண்டிர் எயிற்றியர், மறத்தியர் எனப்பட்டனர்”[82] என்கிறார் மா.இராசமாணிக்கனார். உணவுப் பொருள்களைப் பயிர் செய்ய இயலாத நீர் வளமற்ற நிலமாகத் திகழும் பாலையில் வாழும் மக்கள் விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடுவது அங்கு வருபவர்களின் பொருள்களைக் கவருவது, பிற நிலங்களுக்குச் சென்று கொள்ளையடிப்பதுமே தொழிலாகக் கொண்டு வாழ்பவர்கள் ஆதலால் எயினர், மறவர் போன்ற பெயர்களைப் பெற்றிருந்தனர் எனலாம்.

### 2.6.2 பாலை நிலக் குடியிருப்பு

பாலைநிலத்தார் இல்லங்கள் சிறு குடில்களே. வெப்ப மிகுதியான பகுதி என்பதால் உள்ளிருப்போர் வருந்தும் அளவுக்குரிய குடியிருப்புகளிலே எயினர் வாழ்ந்துள்ளனர். இதனை,

“உறு வெயிற்கு உலைஇய உருப்பு அவிர் குரம்பை” (சிறு: 174)

என்ற வரி சுட்டுகின்றது. வெப்பமான பகுதியில் வாழும் இவர்களது குடில்கள் உள் இருந்தாலும் வெயில் தாங்காத அளவுக்கு இருந்துள்ளது. அது அவர்களது எளிய வாழ்விற்கும் அவல வாழ்விற்கும் எடுத்துக்காட்டாய் அமைகின்றது. இத்தகைய குடில் அணிலும் எலியும் உள் நுழையாதவாறு முள் போன்ற ஈந்தின் இலையால் வேயப்பட்டிருந்ததை,

“நீள் அரை இலவத்து அலங்கு சினை பயந்த
பூளை அம் பசுங்காய் புடை விரிந்தன்ன
வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது
யாற்று ஆறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்

வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்
ஈந்து இலை வேய்ந்த எய்ப்புறக்குரம்பை
மான் தோல் பள்ளி மகவொடு முடங்கி
ஈன்பிணவு ஒழியப்போகி" (பெரு: 83-90)

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இக்குடிசையில் தான் மான் தோலைப் படுக்கையாகக் கொண்டு பிள்ளையைப் பெற்ற எயின மகள் முடங்கிக் கிடந்துள்ளாள் என்பதையும் சுட்டுகின்றது.

பாலை நில எயினர்கள் காவல் தொழில் செய்யக்கூடியவர்களாக இருந்துள்ளனர். குழையால் வேயப்பட்ட குடில்களில் மான் தோலைப் படுக்கையாகக் கொண்டு வாழ்ந்துள்ளதை,

"இலை வேய் குரம்பை உழை அதட் பள்ளி
உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்" (மது: 310-311)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. இதையே இராசமாணிக்கனார், "நாட்டுப் பெருவழிகளைக் காவல் புரிந்த எயினர் வாழ்ந்த இல்லங்களும் குடில்களேயாகும். அவை குழையால் வேயப்பட்டவை அவற்றில் வாழ்ந்தவர் மான் தோலையே படுக்கையாகக் கொண்டனர்"[83] எனக் கூறியிருப்பதும் நோக்கத்தக்கது. பெரும்பாணாற்றுப்படையில் எயினரது வீடுகள் உயர்ந்த மதிலையுடையனவாக, பந்தரில் அம்புகள் தொங்கியிருந்ததாக குறிப்பிடுகின்றது. நாய்களைச் சங்கிலியால் கட்டிய காவல் அமைந்த வீடுகள் எனவும் முள் வேலியால் சூழப்பட்டு கணைய மரத்தாலான கதவினைக் கொண்டு கொடிய வில் நிறைந்த அரண் எனவும் குறிப்பிட்டுள்ளது. எனவே மற்ற எயினரது இருப்பிடத்தைக் காட்டிலும் இவர்களது இருப்பிடம் சற்று உயர்வாக அமைந்திருப்பதைக் காணலாம். மற்றையோரிலிருந்து இவர்கள் சற்று மேம்பட்டு வாழ்ந்துள்ளனர் என்பதை பெரும்பாணாற்றுப்படை (121-129) வரிகளும் புலப்படுத்துகின்றன. எயினர் இல்லங்கள் ஒய்மாநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு ஆகியவற்றில் ஒரே இயல்புடன் இருந்ததை அறியமுடிகிறது. ஆயினும் தொண்டை நாட்டில் உள்ள மற்றொரு எயினர் இல்லமானது சற்று உயர்வாக இருப்பதாகக் குறிப்பிடப்படுகிறது. இவர்களது இல்லத்தில் வில், வேல் அம்புகள் நிறைந்திருந்ததாகக் கூறுகின்றது. இது மற்றையோரிலும் மேம்பட்ட வாழ்வை மேற்கொண்ட எயினராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

### 2.6.3 பாலை நிலத்தார் உணவு

விளைச்சல் எதுவும் செய்ய இயலாத சூழலில் வாழும் இவர்களுக்கு உணவின் தரமும் அவ்வாறே அமைந்திருக்கக்கூடும் எனலாம். ஓய்மா நாட்டு பாலை நில மக்கள் புளிங்கறி இட்ட சோற்றினை ஆமானினது சூட்டிறைச்சியோடு உண்டுள்ளனர். இதனை, சிறுபாணாற்றுப்படை (175-177) வரிகள் குறிப்பிடுகின்றன. தொண்டை நாட்டுப் பாலை நிலத்தார் நிலத்தைக் கிளறி புழுதி நீக்கிய புல்லரிசியினைக் கொண்டு வந்து உரலில் இடித்து, விளிம்பு உடைந்த பானைகளில் சோறு சமைத்துக் கருவாட்டோடு சேர்த்து உண்டுள்ளனர். இதனை, பெரும்பாணாற்றுப்படை (90-93, 95-100) வரிகள் குறிப்பிடுகின்றன. இதனை, “தொண்டை நாட்டு பாலை நில மக்கள் புல்லரிசியைச் சேர்த்து நிலவுரலிற் குற்றிச் சமைத்த உணவை உப்புக் கண்டத்தோடு உண்டார்கள்”[84] என இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. எயினர்கள் புல்லரிசியைச் சேர்த்து அதை விளிம்புடைந்த பானையில் இட்டுச் சமைத்து உண்ணும் வறுமையுடைய அவல வாழ்வை வாழ்ந்துள்ளனா். பாலைநிலத்தாா் எதுவும் விளைவிக்க இயலாத சூழ்நிலையில் அரிதாகக் கிடைக்கக்கூடிய புல்லரிசியே உணவாகக் கொண்டனா். இது ஒன்றே சமுதாயத்தில் அவர்கள் எத்தகைய சூழலில் வாழ்ந்துள்ளனர் என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது. இத்தகைய வறுமை வாழ்வை மேற்கொண்ட எயினர்களது உணவு முறையை மற்றொரு பகுதியிலும் காணலாம். மேட்டு நிலத்தில் விளைந்த ஈந்தின் விதை போன்ற சிவந்த சோற்றை நாய்கள் கடித்துக் கொணர்ந்த உடும்பின் பொறியலோடு சேர்த்து உண்டனர் எனப் பெரும்பாணாற்றுப்படை (131-133) குறிப்பிடுகின்றது.

தொண்டைநாட்டில் உள்ள பாலை நிலத்தார் இருவகையான உணவை உண்டிருப்பதைச் சுட்டுகின்றது. ஒரு சிலர் புல்லரிசிச் சோறு, கருவாடு மற்றையோர் சோறு உடும்புப் பொறியலும் உண்டுள்ளனர். இதனைக் கொண்டு தொண்டைநாட்டில் இரு பிரிவினர் இருந்திருப்பதை அறிய முடிகின்றது. இல்ல அமைப்பும் உணவு முறையுமே இதனை உறுதிப்படுத்தும் விதமாய் அமைகின்றன.

### 2.6.4 பாலை நிலத்தார் தொழில்

வேனில் வெப்பத்தால் நீரும் நிழலும் இல்லாது வளம் குறைந்து இருக்கும் பாலை நில மக்கள் வேட்டையாடுதல் பிற நிலங்களுக்குச் சென்று பொருள்களைக் கொள்ளையிடுதல், ஆநிரை கவர்தல் போன்ற தொழில்களில்

ஈடுபட்டு வாழ்ந்துள்ளனமயை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. இதையே இராசமாணிக்கனார், "பாலை நில மக்கள் பிற நிலங்களிலுள்ள ஆனிரைகளைக் கவர்தல் வழிப்பறி செய்தல் ஆகிய தொழில்களைச் செய்தார்கள்"[85] என்றும் "இவர்கள் தொழில் வழிப்பறி செய்வதும் பகைவருடைய கால்நடைகளைக் கவர்வதும் ஊர்களுக்குச் சென்று கொள்ளையடித்து வருவதுமாகும்"[86] என்று குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

எயினா் நீர் பெறும் பொருட்டுத் தோண்டப்பட்ட பலக் குழிகள் காணப்படுகின்றன. அக்குழிகளைச் சூழக் குழிதோண்டி அதன் உள்ளே மறைந்திருந்து நடு இரவில் பன்றிகள் நீருண்ண வரும் வருகையைப் பார்த்து நின்றுள்ளதை, பெரும்பாணாற்றுப்படை (106-111) குறிப்பிடுகின்றது. மேலும் பன்றி வேட்டையை ஆடாவிட்டால் எஞ்சிய அரை நாளில் வலைக் கட்டி விட்டு புதரிலிருந்து வெளிவரும் நெடிய செவியினையுடைய முயல்களைப் போக விடாது வலையிலே வளைத்துப் பிடித்துள்ளனர். அதனை, அக்கொடிய சுரத்தில் உள்ளோர் கூடித் தின்றுள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை (111-117) குறிப்பிடுகின்றது. எயினர்கள் இரவில் பன்றி வேட்டை, பகலில் முயல் வேட்டை என வேட்டையாடியுள்ளனா். இதனை, "எயினர் என்பார் வேட்டையாடும் வேட்டுவ வகுப்பைச் சார்ந்தவர்கள் போலும் அம்பு எய்யும் செயல் பற்றி அப்பெயரால் அறியப்பட்டிருக்கலாம்"[87] என்பதை அ.தட்சிணாமூர்த்தி சுட்டிக்காட்டியுள்ளார். எனவே எயினர்கள் வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டுள்ளனர் என்பது தெளிவு. மேலும், "எயினர் குட்டைகளை அடுத்துக் குழிகளைத் தோண்டினர். குட்டையில் இருந்த நீரைப் பருக வந்த பன்றியை அம்பெய்து வீழ்த்தத் தாம் தோண்டிய குழிகளில் பதுங்கியிருந்தனர். பன்றி வேட்டை பயன்படாதபொழுது முயல்களைப் பிடிக்கக் குறுங்காட்டில் வேலிகளில் வலைகளை விரித்தனர். வேட்டை நாய்களுடன் சென்று தூறுகளை அடித்து முயல்களை ஓடச் செய்தனர். அவை அஞ்சித் திசையறியாது ஓடி வலையில் அகப்பட்டன. இங்ஙனம் எயினர் பாலை நிலத்தில் வேட்டையாடினர்"[88] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது.

பாலை நிலத்தாா் வழிப்பறி செய்தலையும் மேற்கொண்டுள்ளனர். வழிச்செல்வோரை அலறும்படி தாக்கி அவர்களுடைய கைப்பொருளைக்

கவர்ந்து கொள்ளும் களவினை ஏர்த்தொழில் போன்று வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டுள்ள கொடுமையோர் எனப் பெரும்பாணாற்றுப்படை (39-41) குறிப்பிடுகின்றது. இதையே "வேனில் வெப்பத்தால் நீரும் நிழலுமின்றி வளங் குறைந்து மக்கள் இயங்குதற்கரிய வெம்மை மிக்க சுரத்திலே வாழும் எயினர்கள் வழிப் போக்கர்களைத் துன்புறுத்தி அவர்கள் படும் துயர் கண்டு மகிழும் கொடியவர்களாய் இருந்தார்கள்"[89] என்று வெள்ளைவாரணனும் "பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டை ஆடியும் பயணம் செய்வோர்களின் பொருள்களைக் கொள்ளையிட்டும் வாழ்க்கை நடத்தினர் இம்மக்கள் எயினர் எனப் பெயர் பெற்றனர்"[90] எனப் பாண்டுரங்கனும் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

கொடிய வில்லினையுடைய எயினர் பலர் செருப்பு அணிந்த கால்களையுடையவர்களாய்த் துடியை முழக்கிச் சென்று நெற்கூடுகளைக் கொள்ளையிடுவதையும் நெல் இல்லாத அவ்வெறுங்கூடுகளின் உட்புறத்தில் உள்ள கூகைகள் கூவி அழைப்பதையும் பட்டினப்பாலை (265-268) குறிப்பிடுகின்றது. பாலை நிலமக்கள் வேறு தொழில் செய்ய இயலாதவர்களாய் வழிப்பறி செய்தல், கொள்ளையடித்தல் போன்ற தொழில்களைச் செய்து வாழ்ந்துள்ளனர்.

வேட்டையாடுதல், கொள்ளையிடுதல், வழிப்பறி செய்தல் போன்ற தொழில்களை மட்டுமல்லாது எயினரில் ஒரு சிலர் காவல் புரியும் தொழிலையும் செய்துள்ளனர். தழை விரவித் தொடுத்த கண்ணியையும் கடிய சொல்லினையும் உடைய இளையர் வில் ஏந்திய கையராய்ப் பல வழிகளில் நின்று ஆறலைக் கள்வர் வராமல் காவல் புரிந்துள்ளமையை மதுரைக் காஞ்சி, (310-312) குறிப்பிடுகின்றது. கூப்பிடும் எல்லையைக் கடந்து நிற்கும் எல்லையில் வாழும் கூரிய நல்ல அம்பினையும் கொடிய வில்லினையும் உடைய வேடர் கூட்டம் இருந்தமையை மலைபடுகடாம் (421-422) குறிப்பிடுகின்றது. இவ்வாறு பாலை நில மக்களில் ஒரு சிலர் காவல் புரியும் தொழில் செய்து வந்திருப்பதையும் அறிய முடிகின்றது. இதையே "பாலை நிலத்தில் ஆறலைக் கள்வர் மறைந்து நின்று வழிப் போக்கரைத் துன்புறுத்தலும் கொலை புரிதலும் கொலை கண்டு மகிழ்தலும் வழக்கம். இதனால் தமிழ் மன்னர் எயினருள் தக்கவரைப் போர் வீரராக்கி நாடு காவற் பணியிற் அமர்த்தினர். பாலை நிலவழிகளில் குடிமக்கட்குத் தீங்கு நேராமல்

பார்ப்பதே அவர்தம் தலையாய கடமை"[91] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் எண்ணத்தக்கது.

எயினர்களில் ஒரு சிலர் வேட்டையாடி, வழிப்பறி செய்து பிற நிலங்களுக்குச் சென்று கொள்ளையிடுதல் மட்டுமல்லாது காவல் புரியும் தொழிலையும் செய்துள்ளனர். மேலும், தொண்டை நாட்டில் எயினர் அரண் இருந்துள்ளது. அங்குப் பல வீடுகள் இருந்துள்ளன. அவ்வீடுகளில் வேல், வில், அம்புகள் நிறைய வைக்கப்பட்டுள்ளமையை,

"வைந்நுதி மழுங்கிய புலவுவாய் எஃகம்
வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாண்
சாபம் சார்திய கணை துஞ்சு வியல்நகர்" (பெரு: 119-121)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன. இவர்களை இராசமாணிக்கனார், "இந்த எயினர் அரண் தொண்டைமான் ஆட்சிக்குரியது. எனவே நாட்டைக் காக்கும் நிலப்படைகளுள் ஒன்று பாலை நிலத்தில் வைக்கப்பட்டிருந்தது போலும். இந்த அரணில் இருந்த எயினர், வில்லிலும் வேலிலும் பயிற்சி பெற்றவராவர். இவர் முற்கூறிய முயல் வேட்டையாடிய எளிய எயினரினும் மேம்பட்ட மறவராவர். ஆறலைகள்வரை அடக்கவும் நாட்டு வணிக வழிகளைப் பாலை நிலத்திற் பாதுகாக்கவும் இவர்கள் மன்னனால் அமர்த்தப்பட்டவர்கள் எனக் கருதலாம்"[92] என்கிறார். பாலை நிலத்தில் வாழ்ந்த மற்றொரு பிரிவினரே காவல் புரியும் தொழிலைச் செய்துள்ளனர் என்பது திண்ணம். பாலை நில மக்களிலே ஒரு பிரிவினர் வேட்டையாடுதல், கொள்ளையிடுதல், வழிப்பறி போன்ற தொழில்களும் மற்றொரு பிரிவினர் காவல் புரிதல் போன்ற தொழிலும் செய்து வந்துள்ளனர். மேற்கூறியவற்றை நோக்க, பாலை நிலத்திலும் மற்ற நிலங்களைப் போன்று பிரிவுகள் இருந்துள்ளமை தெளிவாகிறது. தொண்டை நாட்டிலே உணவின் தரம் இரண்டாக வேறுபடுவது கொண்டும் அதனை அறியமுடிகின்றது. தொண்டைநாட்டு எயினர்கள் போலல்லாது, ஒய்மா நாடு, சோழநாடு எயினர்கள் உயர்வான வாழ்வை வாழந்திருப்பதை அறியமுடிகிறது. பாலை நிலத்தைத் தொண்டைமான் நல்லியக் கோடன், நன்னன், நெடுஞ்செழியன், கரிகால் வளவன் போன்றவர்கள் ஆட்சி புரிந்து வந்துள்ளனர். மேற்கண்டவற்றை ஆராயும்போது சங்ககாலத்தில் குறிஞ்சி முதலான ஐந்து நிலங்களிலும் திணை சார்ந்த மக்களே பல பிரிவினராக,

அவர்களுக்குள்ளேயே பல படிநிலைகளாக வாழ்ந்து வந்துள்ளமை தெளிவாகின்றது.

## 2.7 தொழில் சார்ந்த குடிகள்

தமிழ் நாகரிகத்தின் முக்கியமான அடையாளங்களில் ஒன்று அச்சமுதாய மக்கள் மேற்கொண்டிருக்கும் தொழில்கள். அவ்வகையில் திணை அடிப்படையிலான குடிகள் மட்டுமல்லாது தொழில் அடிப்படையிலான குடிகளும் இலக்கியங்களில் இடம்பெறுகின்றன. அவற்றுள் பத்துப்பாட்டு நூல்களில் இடம்பெற்றுள்ள தொழில் சார் குடிகளைப் பின்வருமாறு காணலாம். "உழைப்பு என்பது பெயர்ச்சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக் குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்"[93] என்பர். "உழைப்பு என்பது மூளையையோ உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும்"[94] எனும் மார்சல் கருத்தையும் சசிவல்லி தமது நூலில் குறிப்பிடுகின்றார். உழைப்புக்கும் உழைப்பவர்களுக்கான வரையறையாகவும் இதனைக் கருதலாம். திணை அடிப்படையிலான மக்களின் வாழ்க்கை முறையில் வேறுபாடுகள் இருப்பது போலவே தொழில் அடிப்படையிலான மக்கள் பிரிவுகளிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆகையால் பழந்தமிழர் மேற்கொண்டிருந்த தொழில்களை 1.வாழ்வியல் தொழில், 2. வாணிகத்தொழில், 3.கலையியல் தொழில் என மூன்றாக வகைப்படுத்திக் காணலாம்.

## 2.7. வாழ்வியல் தொழில்

மக்களின் வளமான வாழ்விற்கும் வசதிக்கும் பயன்படும் தொழில்களை வாழ்வியல் தொழில் என்ற பிரிவினுள் அடக்கிக் கூறலாம். அவ்வகையில் வாழ்வாதாரத்திற்காகப் பலவிதமான தொழில்களைச் செய்யும் தொழிற்பிரிவினர் சங்க காலத்தில் இருந்துள்ளனர்.

### 2.7.1 கம்மியர், காருகர் (நெசவாளர்)

ஒரு நாட்டின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் எடுத்துக் காட்டுவன ஆடையாகும்.

"இழை மருங்கு அறியா நுழை நூற் கலிங்கம்" (மலை: 562)

என்ற வரியில் இழை நுழைந்த இடம் தெரியாது நுண்ணிய நூலினால் நெய்யப்பட்ட புடவைகள் குறித்து மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது. இழைபோன வழி ஈது என்று அறிய முடியாத வகையில் நுட்பமாக நெய்யப்பட்டிருந்த, பூத்தொழிலை உடையதாய் பாம்பின் தோலை ஒத்திருந்த புதுப் பட்டாடை நெய்யப்பட்டிருப்பதை,

"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
உரவு உரி அன்ன அறுவை நல்கி" (பொரு: 82-83)

எனும் பொருநராற்றுப்படை வரிகள் குறிப்பிடுகின்றன. நெய்தல் தொழிலில் சிறியோர் முதல் பெரியோர் வரை ஈடுபட்டுள்ளமையை மதுரைக்காஞ்சி (520-521) வரிகள் குறிப்பிடுகின்றன. சங்க காலத்தில் மக்களின் வாழ்க்கைத் தரத்திற்கும் வசதிக்கும் ஏற்ற ஆடைகளை நெய்யும் நெசவாளர்கள் இருந்துள்மையை அறிய முடிகின்றது. இத்தகைய நெசவாளர்களை மதுரைக்காஞ்சி, 'கம்மியர்' என்று குறிப்பிடுகின்றது.

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கையும்" (சிலம்பு:16-17)

பட்டு நூல், எலிமயிர், பருத்தி நூல் இவற்றைக்கொண்டு நுட்பமான முறையில் நெசவுத் தொழில் செய்தவர்களைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. மேலும், இவர்கள் 'காருகர்' என அழைக்கப்பட்டு தனித்தெருவில் வாழ்ந்திருப்பதையும் குறிப்பிடுகின்றது. இதையே, "பருத்தி நூலாலும் பட்டு நூலாலும் எலிமயிராலும் நுண்ணிய ஆடைகளை நெய்பவர்கள் தமிழ்நாட்டுப் பேரூர்களில் ஆங்காங்கே நிலைபெற்றுத் தங்கள் தொழிற்திறத்தைப் பெருக்கினார்கள். இவ்வாறு நெசவுத் தொழிலைச் செய்தவர் 'காருகர்' என்ற பெயரால் அக்காலத்து வழங்கப் பெற்றனர். இக்காருகர் வினைத் தொழில் மிகவும் நுண்ணுணர்வுடன் செய்தற்குரியதாகலின் இதனை, 'நுண்வினை' என இளங்கோவடிகள் சிறப்பித்துள்ளார்"[95] என வெள்ளை வாரணன் தமது நூலில் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. மேலும் "பெரிய நகரங்களில் காருகர் இருக்கைகள் தனியே இருந்தன"[96] என்பதை, தட்சிணாமூர்த்தி சுட்டிக்காட்டியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. இக்கூற்று நெசவுத்தொழில் செய்தோர் காலத்திற்கேற்ப பெயர் மாற்றமடைந்திருப்பதைப் புலப்படுத்துகின்றது.

### 2.7.2 புலைத்தி (வண்ணாத்தி)

ஆடைகள் நெய்பவா் மட்டுமன்றி ஆடைகளை அழகிய நிறம் விளங்கத் துவைக்கும் தொழிலைச் செய்யும் ஒரு பிரிவினரும் இருந்துள்ளனர். அவர்களுக்குப் 'புலைத்தி' எனும் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. 'புலைத்தி' என்பதற்குச் இழிகுலத்துப் பெண், வண்ணாத்தி எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் பொருள் தருகிறது. "ஆடைகள் வெளுக்கும் சலவைத் தொழிலாளர்களை இன்றைக்கு வண்ணான், வண்ணாத்தியர் என்றழைக்கிறோம். ஆனால் சங்க இலக்கியங்களில் 'புலைத்தியர்' என்பவர் 'ஆடையை வெளுப்பவர்' என்ற பொருளில் வழங்கியிருப்பதைக் காணமுடிகின்றது"[97] என்று கு.இராசரத்தினம் தமது நூலில் குறிப்பிடுகிறார். "வண்ணாரப்பெண் புலைத்தி என்று சுட்டப்படுகிறாள்"[98] என அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிட்டுள்ளார். எனவே ஆடை வெளுக்கும் தொழிலைச் செய்பவளான வண்ணாத்திக்குச் சங்க காலத்தில் 'புலைத்தி' என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளமையை அறிய முடிகின்றது. மதுரைக்காஞ்சி, "சோறு அமைவு உற்ற நீருடைக் கலிங்கம்" (மது: 721) என்ற வரியில் சோறு தன்னிடம் பொருந்திய நீரோடு கூடியக் கஞ்சியூட்டிய துகில் என்பதைச் சுட்டுகின்றது. சங்ககாலத்தில் ஆடையினை நன்றாக ஒலித்துக் கஞ்சி பூசி மடித்துக் கொடுக்கும் தொழிலை அக்காலத்து வண்ணார மகளிர் செய்து வந்துள்ளனர்"[99] என்பதை வெள்ளைவாரணனும் "பாண்டிமாதேவியின் தந்தக் கட்டிலின் மீது கஞ்சியிட்டுச் சலவை செய்யப்பட்ட துகில் விரிக்கப்பட்டிருந்தது என்பதனால் சலவைத் தொழில் நடைபெற்று வந்தது என்பது நன்கு துணியப்படும்"[100] என மா.இராசமாணிக்கனாரும் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கதாகும். மேற்கூறியவற்றை நோக்க சங்ககாலத்தில் ஆடை நெய்வோர், ஆடையை தூய்மைபடுத்துவோர் எனும் தொழில்களைச் செய்தோர் இருந்துள்ளமை தெளிவாகின்றது.

### 2.7.3 அட்டில் தொழிலாளர் (சமையல் தொழில்)

சங்ககாலத்தில் சமையல் கலையைத் தொழிலாகவும் செய்து வந்துள்ளனர். அகன்ற உணவுச் சாலைகளில் சோற்றை வடிக்கும் கஞ்சி ஆறு போல எங்கும் பரவியோடியதைப் பட்டினப்பாலைக் குறிப்பிடுகின்றது. இதனை,

"புகழ் நிலைஇய மொழி வளர
அறம் நிலைஇய அகன் அட்டில்
சோறு வாக்கிய கொழுங் கஞ்சி
யாறு போலப் பரந்து ஒழுகி
ஏறு பொரச் சேறாகி" (பட்: 42-46)

என்ற வரிகள் உறுதிப்படுத்துகின்றன. இதனை, "உயிர் வாழ்க்கைக்கு ஆக்கந்தரும் சமையற்றொழில் அக்காலத்து அட்டிற்றொழில் எனப்பட்டது. இத்தொழிலில் தமிழர் நிரம்பிய தேர்ச்சியுடையவராய்ச் சுவைக்கினிய அடிசிலை ஆக்கி விருந்தளித்தனர்"[101] என வெள்ளைவாரணன் குறிப்பிடுவதும் இத்தொழில் இருந்துள்ளமையை மெய்பிக்கிறது.

### 2.7.4 **கருமான்** (கொல்லன்)

பத்துப்பாட்டில் இரும்பினால் கருவிகளைச் செய்யும் இரும்புக் கொல்லன் 'கருமான்' என அழைக்கப்படுகிறான். கொல்லன் என்பதற்குக் "கம்மாளன் கருமான்" எனக் கழகத்தமிழ் அகராதி மற்றும் மதுரைத் தமிழ் பேரகராதி பொருள் தருகின்றன. கொல்லன் கருமான் (இரும்பு வேலை செய்பவன்) என லிப்கோ தமிழ் - தமிழ் - ஆங்கிலப் பேரகராதி பொருள் தருகிறது. ஆகவே இரும்பு வேலை செய்யும் கொல்லன் 'கருமான்' என்றே பெரும்பாலும் அழைக்கப்பட்டுள்ளான் எனலாம்.

களிறுகளின் கொம்புகளுக்குப் பூண் அமைப்பது, யானைகளைக் கட்டுவதற்குரிய சங்கிலிகளைச் செய்வது என இவர்களுடைய பணி இருந்துள்ளது.

"பெருங்கை யானைக் கொடுந்தொடி படுக்கும்
கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த
கூடத்திண் இசை வெரீஇ மாடத்து
இறை உறை புறவின் செங்காற்சேவல்" (பெரு: 436-439)

என்ற வரிகளில் கொல்லன் கூடத்தில் அடிக்கும் ஓசையில் பறவைகள் உறக்கம் கலைந்ததை அறியமுடிகிறது.

"மென்பிணி வன்தொடர் பேணாது காழ்சாய்த்து
கந்து நீத்து வழிதரும் கடாஅ யானையும்" (மது: 382-383)

என்ற வரிகள் யானையைக் கட்டியிருந்த சங்கிலியைக் குறிப்பிடுகின்றது. மேலும் இரும்பு விளக்குகளும் செய்துள்ளனர்.

"இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ" (நெடு: 42)

எனும் வரிகள் இரும்பினால் செய்யப்பட்ட விளக்கில் நெய் தோய்ந்த திரியைக் கொளுத்தியுள்ளதைக் குறிப்பிடுகின்றது. இவற்றை நோக்க, இரும்பினால் கருவிகள் செய்யும் கொல்லன் இருந்துள்ளதை அறியமுடிகின்றது. மேலும் வைகறையிலே எழுந்து வேலை செய்யத் தொடங்கி விடும் இவர்களின் கடும் உழைப்பினையும் அறிய முடிகின்றது.

**2.7.5 கன்னான்** (கம்மியர்)

செம்பினால் பொருள்களைச் செய்யும் கம்மியர் இருந்துள்ளனர். இவர்களைக் 'கன்னான்' என்று பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனை, உறுதிப்படுத்தும் விதமாக மதுரைக்காஞ்சியின்,

"செம்புநிறை கொண்மரும்" (மது: 514)

என்ற வரி அமைகின்றது. வெள்ளைவாரணன் இவர்களைச் "செம்பினால் கலம் செய்வார் செம்பு கொட்டிகள் எனப்படுவார்"[102] என்று குறிப்பிடுகிறார். இவர்கள் "செம்பை நிறுத்து வாங்கி பானை முதலிய கலங்களைச் செய்வதற்கு மண்ணால் உரு செய்து செம்பை உருக்கி வார்த்து அமைப்பர்"[103] என்று மு.சண்முகம்பிள்ளை தமது நூலில் குறிப்பிடுகின்றார். இவர்கள் மர வேலை செய்யும் தச்சன், இரும்பு வேலை செய்யும் கொல்லன், பொன் வேலை செய்யும் தட்டான், செம்பு வேலை செய்யும் கம்மியர் (கன்னான்) எனப் பலர் இருந்துள்ளனர். கொல்லர்கள் எனப் பொதுவாக அழைத்து இவர்களைத் தொழில் அடிப்படையில் பிரித்துப் பெயரிட்டுள்ளனர். தேவநேயப் பாவாணர், இவர்கள் "ஐங்கொல்லர் (ஐங்கம்மாளர்) என்று அழைக்கப்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.

மரக்கொல்லன் - தச்சன்
கற்கொல்லன் - கல்தச்சன், கம்மியன்
பொற்கொல்லன் - தட்டான், கம்மாளன்
செப்புக் கொல்லன் - கன்னான்
இரும்புக் கொல்லன் - கருமான் (கருமகன்) கொல்லன்"[104]

மேலும் "முதன் முதல் தோன்றியவன் மரக் கொல்லனே ஓரறிவுயிருள்ள மரத்தை வெட்டிக் கொல்வதால், அவன் கொல்லன் எனப்பட்டான். அவன் தொழில் கொல் எனப்பட்டது. முதற்காலமாகிய கற்காலத்தில் மரத்தினாலுங் கல்லாலுமே வீடு கட்டப்பட்டது. அதன் பின்னரே பொன்னும் செம்பும் உறையும் இரும்பும் கண்டுபிடிக்கப்பட்டன என்றும் வெண்கலக் கன்னாரும் செப்புக் கன்னாருள் அடங்குவர்"[105] எனக்

குறிப்பிடுவதைக் காணலாம். இவ்வாறு தொழில் அடிப்படையிலான பல பிரிவுகள் சங்க சமூகத்தில் இடம்பெற்றுள்ளன.

### 2.7.6 குயினர்

அழகிய மணிகளைத் துளையிடுபவர்களைக் 'குயினர்' எனப்பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனை மதுரைக்காஞ்சி, "திருமணி குயினரும்" (மது.511) எனக் குறிப்பிடுகிறது. இதையே "முத்தையும் மணியையும் மூடியிருக்கும் மாசினைப் போக்கி ஒளி பெறச் செய்து அவற்றிற்குத் துளை முதலியன இடும் பணி செய்வாரும் ஒருவகைக் கம்மியர்"[106] என்று சண்முகம் பிள்ளை கூறியுள்ளமையும் கவனிக்கத்தக்கது. மேலும், கம்மியர் என்பது தொழிலாளரைக் குறிக்கச் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு சொல்லாகவும் காணப்படுகிறது.

### 2.7.7 ஓவியர்

ஓவியர் பலவகையான நுட்பமாக உள்ள தொழில்களை ஒப்புமைக் காட்டித் தம் கூரிய அறிவுத் திறத்தால் ஓவியமாகத் தீட்டும் இயல்புடையவராக இருந்துள்ளனர். இதனை,

"எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கின்
கண்ணுள் வினைஞரும்" (மது: 516-518)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது. இவர்களை, 'கண்ணுள் வினைஞர்' என்று மதுரைக்காஞ்சிக் குறிப்பிடுகின்றது. இதையே "எவ்வகைப்பட்ட செய்திகளையும் காட்சிகளையும் ஒப்பக்காட்டி வரைந்தளிப்பவர் துகிலிகையைக் கொண்டு அரக்கு முதலிய வண்ணங்களைத் தோய்த்துச் சித்திரம் வரைந்தனர். நோக்கினார் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்துதல் பற்றிக் "கண்ணுள் வினைஞர்"[107] என்று அழைப்பர் என்னும் சண்முகம்பிள்ளைகருத்தும் நோக்கத்தக்கது. கண்ணால் காணும் காட்சிகளை மனதில் நிறுத்தி கையால் ஓவியமாகத் தீட்டும் பணி செய்வோர் 'கண்ணுள் வினைஞர்' என அழைக்கப்பட்டிருப்பது தெளிவு.

### 2.7.8 அறிவர்

மூன்று காலங்களையும் உணர்ந்து சொல்லக்கூடிய இயல்பினையுடையவர்கள் 'அறிவர்' எனப்பட்டனர். இவர்கள் இயல்பினை,

"சென்ற காலமும் வருஉம் அமயமும்
இன்று இவண் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து

வானமும் நிலனும் தாம் முழுது உணரும்
சான்ற கொள்கை சாயா யாக்கை
ஆன்று அடங்கு அறிஞர் செறிந்தனர்” (மது: 477-481)

என்ற மதுரைக்காஞ்சி வரிகள் குறிப்பிடுகின்றன. சென்ற காலத்தையும் வருகின்ற காலத்தையும் இன்று இவ்வுலகில் தோன்றி நடக்கின்ற ஒழுக்கத்தோடு உணர்ந்து அவற்றை உலகத்தார்க்கு உரைப்பவர்கள் என்றும் தேவர் உலகத்தையும் நில உலகத்தையும் அறிவதற்குரியவர்கள் இவர்கள் எனவும் கல்வியால் நிறைந்த அறிவினையுடையவர்கள் எனவும் குறிப்பிடுகின்றது. “பகலும் இரவும் இடைவிடாது வானத்தை நோக்கியிருந்து அங்கு நிகழும் வானவில்லும் மின்னலும் விண்மீன் வீழ்வும், கோள் நிலையும் பார்த்து மழை, பனி, வெயில் என்ற மூவகைக் காலத்தின் இயல்புகளையும் விளங்க அறிவுறுத்தும் வான நூற்புலவன் அறிவனாவான்”[108] என வெள்ளை வாரணன் கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது. இக்கூற்றின் வழி மூன்று காலங்களையும் அளந்து கூறுமளவிற்கு அறிவுடைய சான்றோர் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளமை புலனாகின்றது.

### 2.7.9 துன்னர்

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டைத் தமிழர் தோலின் பயனறிந்து, வாழ்க்கைக்குத் தேவையான பயன்படு பொருளாகத் தோலைப் பயன்படுத்திய முறைகளைச் சங்கப்பாடல்களில் காணமுடிகின்றது. போர்க்கருவிகளான பறை, முரசு பயன்பாட்டுப் பொருட்கள் அனைத்தையும் தோலினால் செய்யும் தொழிலர் இருந்துள்ளனர். இவர்கள் ‘துன்னர்’ என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளனர். இதனை, வெள்ளை வாரணன் தமது நூலில் “தோலினாலே செருப்புத்தைத்தலும் கட்டில் முதலியன பின்னுதலும் ஆகிய தொழிலைச் செய்தவர் ‘தோலின் துன்னர்’ என்றபெயரால் வழங்கப்பட்டனர்”[109] என்று கூறுவதைக் கொண்டு இவர்களுக்குத் ‘துன்னர்’ என்ற பெயர் வழக்கிலிருந்துள்ளதை அறிய முடிகின்றது. தோல் தொழில் இருந்தமையை,

“தொடுதோல் அடியர்” (மது: 636)
“தொடுதோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி” (பெரு: 169)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. தோற்கருவிகளும் செய்துள்ளனர் என்பதற்கு,

“மான் தோல் சிறுபறை கறங்க” (மலை: 312)

மான் தோலைப் பயன்படுத்தி, ஒலி எழுப்பும் கருவிகளைச் செய்திருப்பதை அறிய முடிகின்றது. மேலும் கொல்லன் பயன்படுத்திய உலைக்கருவி தோலால் செய்யப்பட்டுள்ளது.

இதனை,

"…………மென்தோல்
மிதி உலைக்…………" (பெரு: 206-207)

என்ற வரிகளால் அறியலாம். இவ்வாறு தோலைப் பதப்படுத்தி அதன் மூலம் பொருள்களைச் செய்து வாழ்ந்த தோல் தொழில் செய்வோர் (துன்னர்) இருந்துள்ளமை தெளிவாகிறது.

### 2.7.10 கைவல் கம்மியன்

இயற்கைப் பொருள்களைக் கொண்டு தனது கைகளால் அழகாகப் பொருள்களை உருவாக்கும் கைவினைத் தொழிலாளர்களும் இருந்துள்ளனர். இவர்களை நெடுநல்வாடை 'கைவல் கம்மியன்' என்று குறிப்பிடுகின்றது. பொருள்களில் உருவங்களைப் பதிக்கும் கலை நுட்பம் வாய்ந்தவன். தன் கைகளால் அழகாக உருவாக்கிய சிவந்த நிறத்தைக் கொண்ட ஆலவட்டம் உறையில் இடப்பட்டு முளைக்கோலில் தொங்கியதாக நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இதனை,

"கைவல் கம்மியன் கவின் பெறப் புனைந்த
செங்கேழ் வட்டம் சுருக்கி கொடுந்தறி" (நெடு: 57-58)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது. "ஆலவட்டம் என்பது விசிறியைக் குறிப்பிடுகின்றது. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ஆலவட்டம் என்பதற்கு (பழங்காலத்தில்) கோயில் உற்சவத்தில் அல்லது அரச ஊர்வலத்தில் முன்னால் எடுத்து வரும் துணி, நறுமண வேர் அல்லது பனையோலை ஆகியவற்றால் ஆன வட்டவடிவப் பெரிய விசிறி"[110] எனப் பொருள் தருகிறது. "செல்வர் வாழும் வளமனைகளிலும் அரண்மனைகளிலும் பயன்படுத்தப்பட்ட விசிறி, ஆலவட்டம் எனப்பட்டது. அதனைத் தயாரித்தவன், 'கைவல் கம்மியன்' எனப்பட்டான்"[111] என மா.இராசமாணிக்கனார் கூறுவதும் உற்றுநோக்கத்தக்கது. சங்ககாலத்தில் கைத்தொழில் செய்துவந்தோர் பலவகையான அழகுப் பொருட்களைச் செய்து விற்கும் தொழிலையும் செய்துள்ளமை தெளிவு.

### 2.7.10.1 நூல் தொழில்

கைவல் கம்மியர்கள் நூலால் ஏணி, பந்து, பாவை போன்றவற்றைச் செய்து தந்த தொழிலாளர்களாவர். சங்க காலத்தில் நூல் தொழில் இருந்துள்ளமையை இது குறிக்கின்றது. இதனை,

"வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" (திரு.68)

என்ற வரிக்கு நூலால் வரிந்து புனையப்பட்ட பந்து என்று இரா.மோகன் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. இதனோடு நூலால் செய்த ஏணியைத் தம் இடையில் பலவாய் மாட்சிமைப்படக் கள்வர்கள் சுற்றியிருந்தமையை மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது. இதனை, "மென் நூல் ஏணிப் பல்மாண் சுற்றினர்" (மது.) எனும் வரியால் நூல் தொழில் இருந்துள்ளமையை அறியமுடிகின்றது. மேலும் "பெரிய நகரங்களில் நூலால் வரிந்து பந்தும் பாவையும் செய்யும் தொழிலும் நூலேணி முதலியன செய்யும் தொழிலும் நடைபெற்றன இவை நூல் தொழில் எனப்படும்"[112] என இராசமாணிக்கனார் கூறுவதையும் அறியமுடிகின்றது. சங்ககால மக்கள் தங்களது வாழ்க்கைக்குத் தேவையானப் பொருட்களைத் தாமே செய்து பயன்படுத்தியதோடு பிறருக்கு விற்று பொருள் செய்பவராகவும் இருந்துள்ளனர்.

### 2.7.10.2 சாயப்பாக்குத் தயாரிக்கும் தொழில்

உடம்பிற்கு அழகைத்தரும் இனிய கருங்காலியைச் சீவிக் காய்ச்சிய களிக் கலந்த இனிய நீரினையுடைய பசிய பாக்கு தயாரிக்கும் தொழிலும் இருந்துள்ளது. இதனை, "தகை செய் தீம் சேற்று இன் நீர்ப் பசுங்காய்" (மது. 400) என்ற வரியால் அறியமுடிகின்றது. இத்தொழில் இருந்தமைக்குச் சான்றாக "உடலுக்கு அழகைக் கொடுக்கும் கருங்காலியைச் சீவிக் காய்ச்சி அதனைப் பசிய பாக்குடன் கலந்து சாயப் பாக்கைத் தயாரிக்கும் தொழில் நடைபெற்றது"[113] என இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. இயற்கையில் கிடைக்கும் பெருட்களைக் கொண்டு பொருள் செய்து விற்கும் தொழில் பிரிவினர் பலரை இனங்காணமுடிகிறது.

### 2.7.10.3 சுண்ணம் தயாரிக்கும் தொழில்

கைத்தொழில் பிரிவினர் சந்தனம், கற்பூரம் முதலியனவற்றைப் புழுகிலும் பனி நீரிலும் நனைய வைத்து இடித்துள்ளனர். பலர் துணையோடு தயாரிக்கப்படும் சுண்ணம் ஒரே இயல்போடு விளங்கியுள்ளது. இத்தொழிலைச்

செய்வோரை மதுரைக்காஞ்சி, ‘சுண்ணத்தார்’ என்று குறிப்பிடுகின்றது. இதனை,

“பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்” (மது: 399)

என்ற வரியால் அறியலாம். இத்தகைய சுண்ணம் தாது போன்று இருந்துள்ளது. மேலும், சுண்ணம் தயாரிக்கும் தொழில் இருந்துள்ளமையை, “நறுமணச் சுண்ணங்களை அமைக்க வல்லவர்களும்”[114] சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றார்கள் என்பதை வெள்ளை வாரணன் தமது நூலில் குறிப்பிடுவதும் கவனிக்கத் தக்கது.

### 2.7.11 வேளாப் பார்ப்பார்

வேள்விகள் செய்யாத பார்ப்பார் வகுப்பு ஒன்று இருந்துள்ளது. அவர்கள் வேள்விகள் செய்யாது கடலில் கிடைக்கும் சங்கை எடுத்து, அறுத்து, வளையல் செய்யும் பணியை மேற்கொண்டுள்ளனர். இவர்களைச் சங்கறுக்கும் பார்ப்பார் என்றும் வேளாப்பார்ப்பார் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

“அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்கு வளை” (மது: 316)

என்ற வரியில் வாளரத்தால் கீறி அறுத்துச் செய்யப்பட்ட வளை என சங்கு அறுத்து வளையல் செய்தமையைச் சுட்டுகின்றது.

“கோடு போழ் கடைநரும்” (மது: 511)
“வெள்ளா வள்ளி வீங்கு இறைப் பணைத்தோள்”
“வலம்புரி வளையொடு” (நெடு: 142)

போன்ற வரிகளால், சங்கினால் வளையல் செய்யப்பட்டிருப்பதை அறிய முடிகின்றது. இதனை, “தமது புரோகித குல ஆசாரத்தைக் கடைப்பிடிக்காத பிராமணர்கள் இருந்தனர். சிலர் புதுமை நெறிகளில் புகுந்து உலகியல், வாணிபத் தொழில்களை மேற்கொண்டனர். வேத வேள்விகளை இயற்றாமையால் ‘வேளாப் பார்ப்பர்’ எனப்பட்டனர்”[115] என்கிறார் ந.சுப்பிரமணியன். “சங்குகளை அறுத்து வளையல்கள் செய்யும் தொழிலில் பார்ப்பனரில் ஒரு பிரிவினர் ஈடுபட்டிருந்தனர்”[116] எனஅ.பாண்டுரங்கன் குறிப்பிடுவதன் மூலம் பார்ப்பனரில் ஒரு பிரிவினர் சங்கறுத்து வளையல் செய்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 2.7.12 குற்றேவல் இளைஞர்

சங்ககாலத்தில் தமக்குக் கிடைத்த அல்லது கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தொழில் செய்த பிரிவினர் அல்லாது பிறரது ஏவல்

பணியைச் செய்பவரும் இலக்கியங்களில் குறிப்பிடப்பெறுகின்றனர். ஏவலர்கள் செல்வர் மனைகளிலும் அரண்மனைகளிலும் அவர்கள் ஏவும் தொழிலைச் செய்யக்கூடியவராக இருந்துள்ளனர். ஏவல் தொழிலை இருபாலரும் செய்துள்ளனர்.

காவலையுடைய அகன்ற வீடுகளில் சிறிய குற்றேவல் இளைஞர் பணி புரிந்தனர். அவர்கள் கருங்கொள்ளின் நிறத்தைக் கொண்ட சாந்து அரைக்கும் அம்மியில் கத்தூரி முதலிய மணப் பொருட்களைச் சேர்த்து சாந்து அரைக்கும் பணியைச் செய்துள்ளனர். இதனை,

"கடியுடை வியல்நகர்ச் சிறுகுறுந் தொழுவர்
கோள் உறழ் நறுங்கல் பலகூட்டு மறுக" (நெடு: 49-50)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. இவர்களை நெடுநல்வாடை 'வினைஞர்' என்று குறிப்பிடுகின்றது. இவற்றை நோக்க தொழில் செய்வோர் எனும் பொருளில் இப்பெயர் வழங்கப்பட்டிருக்கலாம்.

**2.7.13 குற்றேவல் மகளிர்**

அரண்மனைப் பணிகளைச் செய்யக்கூடிய மகளிரும் இருந்துள்ளனர். இவர்கள் அங்குள்ள விளக்குகள் அணையாதவாறு நெய் ஊற்றிச் சுடர்களைத் தூண்டி விடும் பணியை மேற்கொண்டுள்ளதை, நெடுநல்வாடை (101-105) குறிப்பிடுகின்றது. பாவைகளின் கையில் ஏந்தியுள்ள அகல் நிறையுமாறு நெய் ஊற்றப்பட்டு, அவ்விளக்குகளில் பருத்த திரிகள் இட்டுக் கொளுத்தப்பட்டுள்ளது. திரிகளின் சுடர் மேல் நோக்கி நிமிர்ந்து எரியும். அவ்விளக்குகளில் நெய் வற்றுங்காலத்தில் நெய்யை ஊற்றிச் சுடர்கள் தூண்டிவிடப்பட்டுள்ளன. இத்தகைய பணியைச் குற்றேவல் மகளிர் செய்துள்ளதை அறியமுடிகிறது.

மேலும், அரசியரின் பாதங்களை வருடி உறக்கம் வரச் செய்யும் பணியையும் ஏவல் மகளிர் செய்துள்ளனர். இதனை,

"புனையா ஓவியம் கடுப்ப புனைவு இல்
மெல் இயல் மகளிர் நல் அடி வருட" (நெடு: 147,151)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது.

அரசன் பாசறையில் தங்கியிருக்கும் பொழுது அங்குள்ள பாவை விளக்கில் திரியை இட்டு, நெய் வார்க்கும் குழாயில் நெய் வார்த்து விளக்கேற்றுகின்ற பணியை வாளினைக் கச்சோடு சேர்த்துக்கட்டிய மகளிர் பாசறையில் செய்துள்ளனர். இதனை முல்லைப்பாட்டு (45-48) வரிகள்

விவரிக்கின்றன. அரசன், அரசியருக்குப் வேண்டிய பணிகளைச் செய்யும் பணியாளர்களும் சங்க காலத்தில் இருந்துள்ளமை புலப்படுகிறது.

### 2.7.14 காவலர்கள்

#### 2.7.14.1 ஊர்க்காவலர்

நகரம் மற்றும் அரண்மனைகளில் காவல் தொழில் செய்யக்கூடிய காவலர்கள் பலர் இருந்துள்ளனர். அவர்கள் அரசனைக் காப்பது, நாட்டு மக்களைக் காப்பது, வாணிகப் பொருள்களைக் காப்பது என காவல் தொழிலைச் செய்து வாழ்ந்துள்ளனர். இவர்களில் ஒரு பிரிவினர் ஊர்க்காவல் பணியை மேற்கொண்டுள்ளனர். இவர்கள் கள்வர்கள் இருக்கும் இடத்தைப் பிறர் அறியாத வகையில் யானையைப் பார்க்கும் புலிப் போல பதுங்கி ஆராய்ந்து துயில் கொள்ளாத கண்ணையுடையவராக எதற்கும் அஞ்சாதவராக, ஊர்க்காவலில் சிறந்து விளங்கியுள்ளனர். இவர்கள் இரவு பகல் பாராது தம் காவல் பணியைச் செய்துள்ளனர். இதனை மதுரைக்காஞ்சி (642-653) வரிகள் உறுதிப்படுத்துகின்றன.

மேலும், எத்தகைய இடையூறு நேரினும் தம் கடமையில் இருந்து தவறாதவர்களாக நகரக் காவலர் இருந்துள்ளதை விளக்கும் விதமாக, “நகரத்தையும் நாட்டையும் காக்கும் காவற்பணியில் ஈடுபட்ட மாந்தரும் பலராவர். நகரக் காவலர்களிற்றின் இருப்பிடத்தையறியும் புலியைப் போல, கள்வர் ஒதுங்கியிருக்கும் இடத்தைப் பிறரறியாதபடி தெரிந்து கொள்ளும் திறமையர். இவர் துயிலாத கண்ணையுடையவர். எதற்கும் அஞ்சாத ஆண்மையுடையர்”[117] என சண்முகம் பிள்ளை குறிப்பிடுவதன் மூலம் நகரத்தைக் காவல் புரிபவர் இருந்திருப்பது தெளிவு.

#### 2.7.14.2.மெய்க்காவலர்

பழந்தமிழர் சமுதாயத்தில் மன்னனையும் மக்களையும் பாதுகாக்க வேண்டிய சூழல் இருந்துள்ளது. அத்தகைய நிலையில் மக்களை மட்டுமல்லாது மன்னனையும் இரவு வேளையில் எவ்விதத் தீங்கும் நேராத வகையில் காக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர். இவர்களை மெய்க்காப்பாளர் என முல்லைப்பாட்டு குறிப்பிடுகின்றது. இதனை,

“நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்
துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்கு நடைப்
பெருமூதாளர் ஏமம் சூழ”　　　　(முல்: 50, 53-54)

என்ற வரிகள் சுட்டுகின்றன. இவர்கள் மணியின் ஒலி குறைந்து அடங்கிய நள்ளிரவில், நல்லொழுக்கமுடையவரான, வயது முதிர்ந்த மெய்க்காப்பாளர்கள் துயில் மயக்கத்துடன் ஆடி அசைந்து கொண்டே மன்னனைச் சூழ்ந்து காவலாக நின்றுள்ளனர் என்பதை விளக்குகின்றன. இதற்கு உரையாசிரியர் இரா.மோகன் "மன்னனுக்கு மெய்காப்பாளராக இருப்பவர்கள் அவன் நம்பிக்கைக்கு உரியவராய் நல்லொழுக்கம் உடையவராய் விளங்க வேண்டும். எனவே நீண்ட நாள் தம்மிடம் பணியாற்றியவரையே மெய்க்காப்பாளராக நியமிப்பது அரசர் தம் வழக்கம். அதனால் தான் அவர்கள் முதிர்ந்த வயதினராய் விளங்கினர்"[118] எனக் காவலில் ஈடுபட்ட மெய்க்காவலர் குறித்து குறிப்பிட்டுள்ளதும் ஏற்கத்தக்கதே. மன்னனைக் காக்கும் மெய்க்காப்பாளர் இருந்துள்ளமையை உறுதிப்படுத்தும் விதமாக "நாடு காக்கும் மன்னனுக்கு எந்த நேரத்திலும் எந்தவிதமான தீங்கும் நேரிடாதவாறு உறுதுணையாய் உடனிருந்து காக்கும் மெய்க்காப்பாளரும் இருந்தனர்"[119] என சசிவல்லி குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கது.

முல்லைப்பாட்டில் பள்ளி அறையில் இருக்கும் அரசனுக்குப் பாதுகாவலாக, வாய் பேசமுடியாத ஊமை மிலேச்சர்கள் பாதுகாவலுக்காக இருந்ததையும் குறிப்பிடுகின்றது. இவர்கள் சட்டை அணிந்த, உடல் வலிமை உடையவராகக் காணப்பட்டுள்ளனர். அவர்களின் தோற்றம் காண்பதற்கு அச்சம் தரும் வகையில் அமைந்திருந்ததையும் அவர்கள் பாசறையில் உள்ள மணி விளக்கை எரிய வைத்துக் கொண்டிருந்ததை முல்லைப்பாட்டு (63-67) வரிகள் குறிப்பிடுகின்றன. இதன் மூலம் சங்ககாலத்தில் பிற நாட்டினரையும் நம் மன்னர்கள் தங்களது வேலைகளுக்குப் பயன்படுத்தியுள்ளமை தெளிவு. "பண்டைத் தமிழ் மன்னர்கள் யவனர், மிலேச்சர் முதலிய பிற நாட்டினரையும் தம் அரண்மனையில் அகப் பணி செய்வதற்கு வைத்துக் கொள்வர். அரண்மனையின் உள்ளறையாகிய பள்ளியறையில் சட்டையணியந்த ஊமையராகிய மிலேச்சர் காவலராகப் பணியாற்றினார்"[120] என்பதைச் சசிவல்லியும் குறிப்பிடுவார். இது மன்னர்களின் அகப்பணிகளைச் செய்வதற்கென ஏவலாளர்கள் இருந்துள்ளமையைப் புலப்படுகிறது.

### 2.7.14.3 கடைக்காப்பாளர்

மக்களையும் மன்னனையும் பாதுகாப்பதோடு வணிகம் செய்யும் பொருட்களைப் பாதுகாக்கும் பணியையும் மேற்கொண்டுள்ளனர். அளந்து கூற இயலாத அளவற்ற பொருள்களைத் தெருவில் குவித்து வைத்துள்ளனர். கடலில் செல்லும் மரக்கலங்களில் ஏற்றப்படுவதற்காகப் பண்டகச் சாலையில் வந்து குவிக்கப்பட்டிருந்தப் பொருள்களைப் பாதுகாத்துள்ளமையைக் குறிஞ்சிப்பாட்டு (126-131) வரிகளால் அறிய முடிகின்றது. பண்டங்களை விலைக் கூறி விற்ற கடைகளிலும் வட்டக் காலை நீக்கி, அடைத்து அங்கேயே உறங்கிப் பாதுகாத்துள்ளனர். இதனை,

> "பணிலம் கலி அவிந்து அடங்க, காழ் சாய்த்து
> நொடை நவில் நெடுங்கடை அடைத்து மடமதர்
> ஒள் இழை மகளிர் பள்ளி அயர" (மது: 621-623)

என்ற மதுரைக் காஞ்சி வரிகளாலும்

> "பரதர் மலிந்த பல்வேறு தெருவின்
> சிலதர் காக்கும் சேண்உயர் வரைப்பின்" (பெரு: 324-325)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகளாலும் பொருள்களைக் காக்கும் காவலர் இருந்துள்ளமையை அறியமுடிகிறது. இதனை, "நகரிலுள்ள கடைகளைக் காப்பதற்கும் தனிக்காவலர் இருந்தனர். கடைகளுக்கு மிகக் காப்பான வாயில்கள் அமைத்து இருந்தனவாகத் தெரியவில்லை. சட்டக்காலை வாங்கி நெடிய கடையை அடைத்து உறங்கினர் என்பதால் கடை வாயிலை மறைப்பதற்குத் திரை போன்ற ஓரமைப்பு இருந்தது என்றும் திறக்கும் போது சட்டக்கால்களில் அவற்றைத் தூக்கி நிறுத்தி விடுவர் என்றும் கொள்ளலாம். வணிகர் நிறைந்த தெருக்களில் அவர்தம் ஏவலரும் இவ்வகைக் காவல் பணிகளைப் புரிந்து வந்தனர்"[121] எனும் கூற்றும் வணிகரின் பொருய்களைக் காவல் காக்கும் பணியைச் செய்த தொழிலினா் இருந்துள்ளமையைக் புலப்படுத்துகின்றது.

### 2.7.15 வரி வாங்குவோர்

வணிகப் பொருள்களைக் காவல் புரிவதோடு மட்டுமல்லாமல் அவற்றிற்கு வரி வாங்கும் செயலைச் செய்யக்கூடிய பணியாளரும் இருந்துள்ளனர். இவர்கள் அரசனின் பொருள்களைப் பிறர் கைக்கொள்ளாமல் காக்கின்ற தொழிலைச் சுங்கம் கொள்பவர் மேற்கொண்டுள்ளனர். அவர்கள் கதிரவனின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகளைப் போல, ஒரு பொழுதும் மடிந்திராமலும் இளைப்பில்லாமலும் நாள்தோறும் சுங்கம் பெற்றுள்ளதை,

“நல் இறைவன் பொருள் காக்கும்
தொல் இசைத் தொழில் மாக்கள்
காய் சினத்த கதிர்ச் செல்வன்
தேர்ப் பூண்ட மாஅ போல
வைகல் தொறும் அசைவு இன்றி
உல்கு செயக் குறைபடாது” (குறி: 119-125)

என்ற வரிகள் உறுதிப்படுத்துகின்றன. “வணிகப் பொருள்களுக்கு வரி வாங்குபவர்களும் இருந்தனர். இவர்கள் உள்நாட்டில் கவர்த்த வழிகளிலும் துறைமுகங்களிலும் காணப்பட்டனர். சுங்கத்தால் வரும் பொருள் வருவாயை ‘உல்கு’ என்பர்”[122] என்னும் சண்முகம்பிள்ளையின் கூற்றும் வரி வாங்கும் தொழிலைச் செய்தோர் இருந்துள்ளமைக்குச் சான்றாகும்.மேற்கூறிய தொழிற்பிரிவினர் அனைவரும் தம்மால் இயன்ற தங்களின் வாழ்வாதாரத்திற்கேற்ற தொழில்களைச் செய்து வாழ்ந்தவர்கள் எனலாம்.

### 2.7.16 வாணிகத் தொழில்

வாணிகம் செய்து பிழைக்கும் தொழில் சார் குடிகளை வாணிகத் தொழில் செய்வோர் என்ற பிரிவினுள் அடக்கிக் கூறலாம். வாணிகம் செய்து பிழைக்கும் இக்குடிகள் பொருள்களைப் பிறரிடமிருந்து பெற்று அவற்றைப் பிற நிலங்களுக்கும் வெளிநாடுகளுக்கும் சென்று விற்று பிழைத்துள்ளனர். இவர்கள் தாமாகப் பொருளை உற்பத்தி செய்வதையும், பிறர் செய்த பொருள்களை வாங்கிப் பிறருக்கு விற்பதையும் தொழிலாகக் கொண்டவர்கள்.

### 2.7.17 வணிகர்கள்

பொருள்களை வாங்கி விற்போர் வணிகர் எனப் பெயர் பெற்றனர். இவர்கள் பொருள்களை வாங்கி விற்பது உற்பத்தி செய்து விற்பது என இரு நிலைகளில் தொழில் செய்துள்ளனர். வணிகம் செய்யும் போது தம்முடைய பண்டங்களையும் பிறருடைய பண்டங்களையும் வேறுபடுத்தி பார்க்காமல் நடுநிலையில் நின்று வாணிபம் செய்துள்ளனர். அதுமட்டுமல்லாது தங்களுக்கு வரக்கூடிய இலாபத்தையும் வெளிப்படையாகக் கூறி அறநெறியில் செயல்பட்டமையால் வாணிகத்திலும் செல்வத்திலும் சிறந்து விளங்கியுள்ளதைப் பட்டினப்பாலை (204,207-212) வரிகள் மெய்ப்பிக்கின்றன. இவர்கள் பலவிதமான பண்டங்கள் பல உணவுகள், மற்றும் நிலத்திலும் நீரிலும் கிடக்கும் பொருள்கள், மணிகள்,

முத்துக்கள், பொன் ஆகியவற்றைப் பெற்றுக் கொண்டு விற்பனை செய்து வந்துள்ளனர். இதனை,

"பல்வேறு பண்டமோடு ஊண்மலிந்து கவனி
மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்
பல்வேறு திருமணி முத்தமொடு பொன் கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்" (மது: 503-506)

என்ற மதுரைக்காஞ்சி வரிகளாலும் பட்டினப்பாலை (185-195) வரிகளாலும் அறியலாம். பல்வேறுப்பட்ட பொருள்கள் அனைத்தையும் பெற்றுக்கொண்டு விற்பனை செய்து வாழும் வணிகர்களை இலக்கியங்களில் காணமுடிகின்றது. மேலும் "தங்கள் வினைத்திறத்தால் நாடெங்கும் சென்று வாணிகம் புரிந்து பெரும்பொருள் தொகுத்த வணிகர்கள் பெருஞ்செல்வத்தால் அரசரோடு ஒப்பவைத்து மதிக்கும் பெருஞ் சிறப்பனைப் பெற்று விளங்கினார்கள்"[123] என வெள்ளைவாரணன் கூற்றும் வணிகர்கள் பொருளாதார அளவில் மேம்பட்டு வாழ்ந்துள்ளமைக்குச் சான்றாகும்.

### 2.7.18 மிளகு வணிகர்

வணிகர்கள்எருதுகளைப் பூட்டி, உப்பு ஏற்றிக் கொண்டு சென்று விற்றதைப் போன்று கழுதைகளில் மிளகு ஏற்றிச் சென்று விற்பனை செய்துள்ள மிளகு வணிகரைப் பெரும்பாணாற்றுப்படை (78-80) குறிப்பிடுகின்றது. பலா மரத்தின் அடியில், இருபக்கமும் சுளைகள் கொண்டு தொங்கும் பெரிய பழங்களைப் போன்று, மிளகுப்பொதிந்த சுமைகளை ஒத்த எடையுடையனவாகக் கட்டி, கழுதையின் முதுகில் தொங்கவிட்டுச் சென்று விற்றுள்ளமையை இப்பாடல் வரிகள் உறுதிப்படுத்துகின்றன. இதனை, "மிளகு சேரநாட்டில் விளைந்தது. அது பிற நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டது. மிளகுப் பொதிகளைக் கழுதைகளின் மீது ஏற்றி ஊரூராய்ச் சென்று விற்றனர்"[124] எனும் இராசமாணிக்கனார் கூற்றும் இதனை உறுதிப்படுத்தும்.

### 2.7.19 அப்ப வணிகர் (கூவியர்)

பொருள்களை வாங்கி விற்கும் வணிகர்கள் போல் அல்லாது தாமே பொருள்களைத் தயாரித்து விற்பனை செய்யும் தொழில் வணிகர்களும் இருந்துள்ளனர். அவர்கள் 'கூவியர்' என்று அழைக்கப்படுபவர். அப்பம் செய்து விற்பவர் அப்ப வணிகராவார். இவர்கள் தேனிறாலைப் போன்ற மெல்லிய அடையினைப் பருப்பு, தேங்காயை உள்ளே வைத்து,

சர்க்கரையோடு சேர்த்துப் பிடித்த அப்பங்களையும் இனிய பாகோடு சேர்த்துக் கரைத்த மாவில் செய்த அப்பங்களையும் விற்றதை,

"நல்வரி இறாஅல் புரையும் மெல் அடை
அயிர் உருப்பு உற்ற ஆடு அமை விசயம்
கவவொடு பிடித்த வகை அமை மோதகம்
தீஞ்சேற்றுக் கூவியர்" (மது: 624-627)
"கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த" (பெரு: 377)

ஆகிய பகுதிகள் தெளிவுபடுத்துகின்றன. இதனை, "கூவியர் (அப்ப வாணிகர்) கரிய சட்டியில் பாகுடனே வேண்டுவன கூட்டி நூல் போல அமைத்த வட்டம் (இக்கால இடியாப்பம் போன்றது) ஒருவகைச் சிற்றுண்டி"[125] என இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். இவரது கூற்றின் வழி இனிய பாகோடு சேர்த்து, பல வகையான தின்பண்டங்களைச் செய்து விற்றுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. மேலும், "கூவியர் என்போர் அப்பம் முதலிய பலகாரப் பொருள்களைத் திரிந்து விற்ற வணிகராவர்"[126] எனச் சண்முகம்பிள்ளை கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. இவர்களின் கூற்றுப்படி அப்பம் விற்கும் தொழிற் பிரிவினர் இருந்துள்ளமை உறுதியாகிறது.

### 2.7.20 உணவு பண்டங்கள் விற்கும் வணிகர்

சங்க காலத்தில் உணவுப் பண்டங்களைச் செய்து விற்கும் வணிகர்களும் இருந்துள்ளனர். இவர்கள் தமது பலவாய் வேறுபட்ட கடைகளை விடியற்காலையில் மெழுகியுள்ளமையை, மதுரைக்காஞ்சி கூறுகின்றது. இதனை,

"பல்வேறு பண்ணியக்கடை மெழுக்கு உறுப்ப" (மது:661)

என்ற வரி சுட்டுகின்றது. "இன்சுவைப் பண்ணியம் (பலகாரங்) செய்து விற்கும் பெண்டிர்களும் இருந்துள்ளனர்"[127] என வெள்ளைவாரணன் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது. இவற்றை நோக்க வணிகர்களுள் பல வகையான உணவுப் பண்டங்களைச் செய்து விற்கும் வணிகர்களும் இருந்துள்ளனர்.

### 2.7.21 மீன், இறைச்சி விற்போர்

மீன், இறைச்சி ஆகியவற்றை விற்கும் வணிகர்களும் இருந்துள்ளனர். இவர்கள் விற்பனை செய்யும் இடத்தில் மணலை மிகுதியாகப் பரப்பி, செம்பூக்களைச் சிதறிவிட்டு மீனை வெட்டி, இறைச்சியை அறுத்துப் பொரித்து அவற்றை விற்றுள்ளனர். இதனை,

"மீன் தடித்து, விடக்கு அறுத்து
ஊன் பொரிக்கும் ஒலிமுன்றில்
மணற்குவைஇ மலர் சிதறி" (பட்: 176-178)

என்ற வரிகளின் மூலம் அறியமுடிகிறது. மேலும், இவர்கள் 'பாசவர்' என அழைக்கப்பட்டுள்ளனர். சிலப்பதிகாரமும் இத்தகைய இறைச்சி விற்கும் 'பாசவர்' மருவூர்ப்பாக்கத்தில் வசித்துள்ளதாகக் குறிப்பிடுகிறது."பாசவர் - பச்சையிறைச்சி சூட்டிறைச்சி விற்போர் ஆவர்"[128] என அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகிறார். இறைச்சி விற்போர் புலால் மணத்தைப் போக்க அவ்விடத்தில் பூக்களைத் தூவிவிட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**2.7.22 கள் விற்பவர்** (கள்ளோர், பழையர்)

பண்டைக்காலத்தில் அரசன் முதல் அனைவரும் கள்ளைப் பருகியுள்ளனர். அது பழங்கால மக்களின் உணவு வகைகளில் முக்கிய பங்கினை வகித்த ஒன்றாகும். இத்தகைய சிறப்புமிக்க கள்ளினை விற்பவரும் சங்க காலத்தில் இருந்துள்ளனர். இக்களிப்பினைத் தரும் கள்ளை விலைக்கூறி விற்றுள்ளதை,

"கள்ளோர் களி நொடை நுவல" (மது: 662)

என்ற வரியும்,

"பலர்புகு மனைப் பலிப் புதவின்
நறவு தொடைக் கொடியோடு" (பட்: 179-180)

என்ற பட்டினப்பாலை வரிகளாலும் அறியமுடிகின்றது. கள் விற்கும் இடத்தில் பசிய கொடிகள் அசைய, மலர்கள் தூவப்பட்ட முற்றமும் விளங்கியுள்ளது. அங்கு, கள் சமைக்கின்ற மகளிர் வட்டிலைக் கழுவியதால் வழிந்த நீர் சேறாக மாறியதையும் அங்குப் பன்றிகள் குட்டிகளுடன் திரிவதையும் குறிப்பிடுகின்றது. கள்விற்கும் தொழில் நடைபெற்றமையை "கள் முதலிய போதைப் பொருள்களை விற்ற கடைகளும் இருந்தன. இவர்களைக் கள்ளோர், பழையர் என்று அழைத்தனர்"[129] எனச் சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. பழங்காலத்தில் கள் பருகுவது குற்றமாகக் கருதப்படவில்லை. அதைப் பக்குவமாககத் தயாரித்து முறையாக விற்றுள்ளமையை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**2.7.23 புடவைகள் விற்பவர்** (கம்மியர்)

சங்க காலத்தில் நுட்பமான பூ வேலைப்பாடுகளோடு பல விதமான வண்ணங்களில் ஆடைகளை நெய்து அவற்றைத் தெருவில் கொண்டு

சென்று விற்று வந்துள்ளனர். இவர்களை மதுரைக்காஞ்சி ‘கம்மியர்’ எனக் குறிப்பிடுகின்றது. இதனை,

“தெண் திரை அவர் அறல் கடுப்ப ஒண்பல்
குறியவும் நெடியவும் மடி தரூஉ விரித்து
சிறியரும் பெரியரும் கம்மியர் குழீஇ
நால்வேறு தெருவினும் கால் உற நிற்றர” (மது: 519-522)

என்ற வரிகள் உறுதிப்படுத்துகின்றன. இவர்கள் அலைகளில் விளங்கும் அறலைப் போல, ஒள்ளிய பலவாகிய சிறிய, பெரிய அளவுள்ள மடித்த புடவைகளைக் கொண்டு வந்து, நான்கு தெருக்களிலும் விரித்து வாணிபம் செய்து வந்துள்ளனர். ஆடைகள் விற்கும் வணிக வீதியைச் சிலப்பதிகாரம் ‘அறுவை வீதி’ என்று குறிப்பிடுகின்றது.

### 2.7.24 வெற்றிலை, சுண்ணாம்பு, பாக்கு விற்பவர்

சங்ககாலத்தில் மக்கள் பெரிதும் பயன்படுத்தும் பொருட்களைச் சிறந்த முறையில்செய்து விற்பனை செய்யும் வணிகா் பலா் இருந்துள்ளனா். இனிய கருங்காலியைச் சீவிக் காய்ச்சி, களிக் கலந்த இனிய நீரினையுடைய பசிய பாக்குடன், வளர்ந்த கொடியீன்ற வெற்றிலையை, சங்கினைச் சுட்டு உண்டாக்கிய சுண்ணாம்பினைச் சேர்த்து விற்பனை செய்துள்ளனர். இதனை,

“தகை செய் தீம் சேற்று இன் நீர்ப் பசுங்காய்
நீடு கொடி இலையினர், கோடு சுடு நூற்றினர்
பல்வேறு பண்ணியம் தழீஇத்திரி விலைஞர்” (மது: 400-401,405)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. “பசிய பாக்குடனே வெற்றிலை, சுண்ணாம்பு விற்போரும் இருந்தனர். இவர்கள் பொருள்களைத் தம் கைகளில் ஏந்தி விற்கும் தன்மையர்”[130] என்று சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பதும் இதற்குச் சான்றாகும். தொழிற் பிரிவினா் தாம் செய்த பொருட்களைக் கைகளில் தூக்கிச் சென்று விற்கும் சிறுவணிகா்களாகவும் இருந்துள்ளனா்.

### 2.7.25 நறுமணப் பொருட்கள் விற்பவர்

சங்க காலத் தமிழர்கள் நறுமணப் பொருள்களின் மீது மிகுந்த விருப்பம் கொண்டவர்கள் ஆகையால் நறுமணப் பொருள்களை விற்பதும் தொழிலாக நடைபெற்றுள்ளது. இவா்கள் சந்தனம், அகில் முதலிய வாசனைப் பொருள்களை அரைத்துவிற்றுள்ளமையை,

“கொள் உறழ் நறுங்கல், பல கூட்டு மறுக
வடவர் தந்த வான் கேழ் வட்டம்
தென்புல மருங்கில் சாந்தொடு” (நெடு: 50-52)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. “சந்தனம், அகில் முதலிய வாசனைப் பொருள்களைக் குழம்பாக அரைத்து விற்பனை செய்தவர்களும் இருந்தனர் என்றும் இப்பொருள்களை அரைக்கும் கற்கள் வடநாட்டிலிருந்து வந்தவையாகத் தெரிகிறது”[131] என்று சண்முகம்பிள்ளை கூறுவதன் மூலம் நறுமணப் பொருள்கள் விற்பனை செய்யப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

### 2.7.26 பூ, மாலை விற்பவர்

மக்கள் தமது பகுதிகளில் பூக்களைப் பறித்தும், அவற்றை மாலையாகத் தொடுத்தும் வாணிபம் செய்துள்ளனர். இதனை,

“பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்
புலவகை விரித்த எதிர் பூங் கோதையர்” (மது: 97-98)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. மேலும், பூக்களையும் சந்தனத்தையும் நன்றாக ஆராய்ந்து விற்பவரைப் பற்றி மதுரைக்காஞ்சி, “பூவும் புகையும் ஆயும் மாக்களும்” (மது: 515) என்று குறிப்பிடுகின்றது. இதையே சண்முகம்பிள்ளை, “மத்தளத்தின் கண் போன்ற பூந்தட்டிலே பூக்களையும் பலவகையாகக் கட்டப்பட்ட மாலைகளையும் பூந்தாது போன்ற பல்வேறு வாசனைப் பொடிகளையும் விற்றனர்”[132] என்று குறிப்பிடுவதைக் கொண்டு பூ, மாலைகள் விற்பனை செய்யப்பட்டுள்ளது உறுதியாகிறது.

## 2.8 கலையியல் தொழில்

ஆடற்கலை, பாடற்கலை, நடனக்கலை எனக் கலைகள் பல வகைப்படும். அவற்றைத் தொழிலாகச் செய்து வாழக்கூடிய கலைஞர்கள் பலர் சங்ககாலத்தில் வாழ்ந்துள்ளனர்.

### 2.8.1 பாணர்

பாணர் என்பதற்கு “பண் என்னும் சொல்லை முதனிலையாகப் பெற்று முதல் நீண்டது பாண் என்பதாகும். பாண் என்பது அர் என்னும் பலர்பால் ஈறுபெற்றுப் பாணர் என்றாயிற்று”[133] என்பதாகக் காந்திதாசன் தமது நூலில் குறிப்பிடுகின்றார். பாணன் என்பதற்குத் தமிழ்ப்பேரகராதி “பாடவல்ல ஒரு சாதி”[134] என்று விளக்கம் தருகின்றது.

“பாணர் என்பவர், இசைத்தமிழில் வல்லவர், குழல், யாழ் முதலிய இசைக்கருவிகளோடு பாடுபவர்”[135] என இராசமாணிக்கனார் விளக்கம் தருகின்றார். மேற்கூறியவற்றை நோக்கப் பாணர் என்பவர் யாழ் முதலிய

இசைக்கருவிகளை இசைத்துப் பாடல் பாடுவதில் வல்லவராக இருந்திருப்பதை அறிய முடிகின்றது. இப்பாணர்கள் மூன்று வகையினராக இருந்ததையும், இராசமாணிக்கனார், "பாண் - பாட்டு, பாலை – பாடுவோர். இவர், இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் எனப் பலராவர். இசைப்பாணர், மிடற்றுப் பாடல் வல்லவர், யாழ்ப்பாணர், யாழ் வாசித்துப் பாடுவோர், மண்டைப்பாணர், மண்டை என்னும் பெயர் கொண்ட உண்கலத்தை வைத்திருப்பவர்"[136] எனக் குறிப்பிடுகின்றார். குறிப்பாக யாழ்ப்பாணர்கள் இரு பிரிவினராக இருந்துள்ளனர்.

"பொன்வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின்
இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ
ஐவளம் பழுநிய நயம் தெரிபாலை
ஐகவல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க" (சிறு: 34-37)

என்ற சிறுபாணாற்றுப்படை வரிகளாலும் "இடனுடைப் பேரியாழ் முறையுளிக்கழிப்பி" (பெரு: 462) என்ற பெரும்பாணாற்றுப்படை வரியாலும் அறியலாம். யாழ் இசைக்கும் பாணர்களில் சிறிய யாழ் கொண்டும். பெரிய யாழ் கொண்டும் வாசிக்கும் இரு பிரிவினர் இருந்துள்ளனர் என்பதைச் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை நூல்களின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

யாழிசைக்கும் பாணர்களைப் பற்றியே பெரும்பாலும் பத்துப்பாட்டு நூல்கள் கூறுகின்றன. இப்பாணர்கள் தனித்து இயங்காமல் தம் சுற்றங்களோடு சேர்ந்து, நாடோடி குழுவினராய்ப் பரிசில் தரும் வள்ளல்களை நாடிச் சென்றுள்ளதைப் பெரும்பாணாற்றுப்படை (19-21) வரிகள் உறுதிப்படுத்துன்றன. பரற்கற்கள் கால்களைக் கிழித்து வருத்தும் வேனில் காலத்தில் காட்டு வழியே சென்றுள்ளனர். மேலும்,பழுத்த மரத்தை நாடித் திரியும் பறவைப் போன்று, அழுது புலம்பும் சுற்றத்தாருடன், ஓரிடத்தில் நிலைத்து நில்லாது வாழ்ந்துள்ளனா். இவர்கள் ஓரிடத்தில் நிலைத்து வாழும் அளவுக்கு இவர்களின் வாழ்க்கைச் சூழலும் பொருளாதாரமும் அமையவில்லை என்பதை இதன் வழி அறிய முடிகின்றது.

பத்துப்பாட்டு நூல்களில் யாழிசைக்கும் பாணர்களே பெரும்பாலும் இடம்பெற்றிருந்ததை, குறிஞ்சிப்பாட்டு (145-146) மதுரைக்காஞ்சி (657-658) மற்றும் மலைபடுகடாம் (38-40) ஆகியவற்றால் அறிய முடிகின்றது. பாணர்கள் பெரும்பான்மையாக வேந்தர்களையும், குறுநில மன்னர்களைப்

புகழ்ந்து பாடும் தொழிலைச் செய்து பிழைத்துள்ளனர். பாணர்களில் மற்றொரு பிரிவினர் மீன் பிடித்தல் தொழிலை மேற்கொண்டவர்களாக இருந்துள்ளனர். அவர்கள் மீனைத் தப்பாமல் பிடிக்க வல்லவர்களாக இருந்துள்ளனர். பாணர் பச்சை இறைச்சி இட்ட தோற்பையைத் தோளிலே தொங்க விட்டுச் சென்றுள்ளமையைப் பெரும்பாணாற்றுப்படை(283-285) குறிப்பிடுகின்றது.

மீன்பிடித் தொழில்செய்த பாணர்களின் குடியிருப்புகளைச் ‘சேரி’ எனக் குறிப்பிட்டுள்ளனர்.

“குருகு நரல மனை மரத்தான்
மீன் சீவும் பாண்சேரியொடு” (மது: 268-269)

என்ற வரிகள் இதனை மெய்பிக்கின்றது. இதனை “மீன் பிடிப் பாணர் கடற்கரைப் பிரதேசத்துப் பரதவர்கள் போலப் பாணர்களில் ஒரு பிரிவினர் மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் மீன்களைத் தப்பாமல் பிடிப்பதில் வல்லவர்களாயிருந்தனர். என்றும் பாணர் சமூகத்தில் மீன்பிடி பாணர்கள் கீழ்நிலையில் இருந்தார்கள் இன்னும் சில பாணர்கள் வேறு பல தொழில்கள் செய்து வந்ததால் அடித்தளச் சமூகத்தாராக இருந்துள்ளான்”[137] எனப் பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

### 2.8.2 பொருநர்

பொருநர் என்போர் பொருந்த வேடமிட்டு ஆடக் கூடியவர் அதாவது வேடமிட்டு ஆடுபவர்களே பொருநர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் கயிற்றால் கட்டப்பட்டத் தோலிசைக் கருவிகளைத் தோளில் கட்டிக் கொண்டு ஆடியுள்ளனர். கிணை, தடாரி போன்ற இசைக்கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். பொருநர் மூவகையாகக் குறிப்பிடப்படுகின்றனர். அவர்கள் ஏர்க்களம்பாடுவோர் போர்களம் பாடுவோர், பரணி பாடுவோர் ஆவர்.

பொருநர் என்பதற்குத் “தடாரிப் பறை வாசிப்போர்”[138] என சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம்பொருள் கூறுகிறது. “பொருநர் என்பவர் ஏர்க்களத்தேனும் போர்க்களத்தேனும் சென்று பாடும் கூத்தர். அவர்கள் இசைக்கருவிகளை இசைத்துப் பாடினார்கள்”[139] எனக் கூறுகிறார் பி.சேதுராமன். மேற்கூறியவற்றை நோக்க பொருநர் என்போர் இசைக்கருவிகளை இசைத்துப் பாடி, ஆடி நடிக்கும் இயல்பினையுடையவரே என்பது தெளிவாகிறது. இவர்கள் வாசிக்கும் தடாரி, கிணை போன்ற இசைக்கருவிகள் குறித்துப் பக்தவத்சலபாரதி, “கிணை என்பது அளவில்

பெரிய ஒரு முகப் பறையாகும். தடாரி என்பது சிறிய அளவிலான இருமுகப் பறை (உடுக்கை) ஆகும்"[140] எனத் தமது நூலில் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

இவர்கள் விழா நடக்கும் இடங்களுக்குச் சென்று தங்களது திறமையை வெளிப்படுத்தும் இயல்பினை,

"ஒரு சார் விழவு நிறை வியல் ஆங்கண்
முழவுத் தோள் முரண் பொருநர்க்கு" (மது:98-99)

என்ற மதுரைக்காஞ்சி வரிகள் மற்றும்,

"அறாஅ யாணர் அகன் தலைப் பேர் ஊர்
சாறுகழி வழிநாள், சோறு நசை உறாஅது
வேறுபுலம் முன்னிய விரகு அறி பொருந" (பொரு: 1-3)

என்ற பொருநராற்று வரிகள் குறிப்பிடுகின்றன. பொருநர் விழா நடக்கும் நாட்களில் தங்களது கலைத்திறமையை வெளிப்படுத்துபவராகவும் விழா முடிந்த பின்னும் பிற இடங்களுக்குச் செல்லும் நிலையில்லாத வாழ்வு வாழக்கூடியவர்களாகவும் இருந்துள்ளனர். மதுரைக்காஞ்சியில் போர்க்களத்தில் வெற்றி பெற்ற மன்னனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்ற தன்மையையும் அறிய முடிகின்றது. ஆகவே போர்க்களம் பாடும் பொருநர் இருந்துள்ளமை தெளிவு. இவர்களைக் கிணை கொட்டும் பொருநர் எனவும் குறிப்பிடுகின்றார் உரையாசிரியர் வி.நாகராசன். இவர்கள் இரவு பகல் பாராது தம் தொழிற் திறமையை வெளிப்படுத்தியுள்ளமையை,

"கைக்கசடு இருந்த என் கண் அகன் தடாரி
இருசீர்ப் பாணிக்கு ஏற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள் இருள் விடியல்
ஒன்று யான் பெட்டா அளவை" (பொரு: 70-74)

என்ற பொருநராற்றுப்படை வரிகளால் அறியலாம். இந்நூலில் பொருநர், விடியற்காலத்தே சென்று தடாரிப் பறையை முழக்கி, மன்னனைப் புகழ்ந்து பாடல் பாடியுள்ளமை பதிவாகியுள்ளது. விழா நடைபெறும் காலங்கள் மட்டுமே இவர்கள் பொருள் தேட வாய்ப்பாய் அமையும். பிற நாட்களில் இவர்கள் அலைந்து திரிந்து பிழைப்பு நடத்தியுள்ளனர் என்பதற்கு அவர்களது வறுமை நிலையே சான்றாக அமைவதைப் பொருநராற்றுப்படை (79-81) வரிகள் உறுதிப்படுத்துகின்றன. நெடுநாட்களாக உணவு கூடக் கிடைக்காது பசியால் திரியும் அவல வாழ்வே கலைஞர்களது நிலையாக இருந்துள்ளது.

### 2.8.3 விறலி

உள்ளத்துள் தோன்றும் உணர்வுகளை உடலால் வெளிப்படுத்தும் திறமையுடையவரை விறலி எனவும் இவர்கள் பாடி ஆடும் இயல்பினையுடையவர் எனவும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். விறலி, விறலியர் என்பதற்கு "விறல் படப் பாடியாடும் மகள், மகளிர்"[141] என்றுசங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் பொருள் கூறுகின்றது.

விறலி என்பதற்கு, "நடனக் கலைக்குரியவள்"[142] என இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார். "விறல்பட ஆடுவாள் விறலி, விறல் என்பது சத்துவம் எனப்படும். அதுவே மெய்ப்பாடாகும். ஒன்பது சுவையும் மெய்யின் கண் புலப்பட ஆடுவதே கூத்தின் சிறப்பு"[143] என அ.தட்சிணாமூர்த்தி கூறுகிறார். எனவே பாடல்பாடி ஆடும் இயல்பினையுடையவரை விறலி என்று அழைத்துள்ளனர். இவர்களே பாடினி, ஆடுமகள் எனப் பின்னாளில் அழைக்கப்பட்டுள்ளனர். இதனை,"பாடினி, விறலி, பாட்டி, மதங்கி, பாடல் மகடு, பாண்மகள் எனப் பலவாறு அழைக்கப் பெற்றனர்"[144] என்னும் பக்தவத்சல பாரதி கூற்றின் வழி அறியமுடிகிறது. விறலி ஆடல், பாடல் இவற்றில் சிறந்து விளங்கியுள்ளமையை, பொருநராற்றுப்படை (22-24) (47-48) (109-110) மதுரைக்காஞ்சி (217-218) நெடுநல்வாடை (67-68) குறிஞ்சிப்பாட்டு (191-194) மலைபடுகடாம் (534-536) போன்ற இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. விறலியர் ஆடலோடு, பாடல் இசைப்பதிலும் வல்லவர்களாக இருந்துள்ளமையை அறியமுடிகின்றது. இதனை, பக்தவத்சலபாரதியின் "விறலியர் ஆடுதல், பாடுதல், கிணை கொட்டுதல், தாளமிடல், வேடமிட்டு ஆடுதல், மெய்ப்பாடு தோன்ற நடித்தல், பாட்டியற்றிப் பாடுதல் ஆகியவற்றில் கைதேர்ந்தவர்கள்"[145] என்ற கூற்றும் உறுதிபடுத்தும்.

### 2.8.4 கூத்தர்

கூத்தர் என்பதற்குக் "கூத்தாடுபவர்"[146] எனச் சங்க இலக்கிய செய்திக் களஞ்சியம் பொருள் கூறுகின்றது. "கூத்து ஆடிய கலைஞர் கூத்தர் எனப்பட்டனர்"[147] என்கிறார் பக்தவத்சல பாரதி.. "கூத்தர் என்போர் ஆடவும் பாடவும் இசைக்கருவி இயக்கவும் திறன் வாய்ந்த நிகழ்த்து கலைஞர் ஆவர்"[148] என்கிறார் காந்திதாசன். மேற்கூறிய கூற்றுகளின் வாயிலாக ஆடிப், பாடி கலைகளை நிகழ்த்தியவர்களே கூத்தர் என்று அழைக்கப்பட்டுள்ளனர்.

இவர்களை மலைபடுகடாம் ‘கண்ணுளர்’ எனக் குறிப்பிடுகின்றது. இவர்கள் செல்லும் இடங்களுக்கு இசைக்கருவிகள் பலவற்றையும் எடுத்துக் கொண்டு சென்றமையை மலைபடுகடாம் (2-13) வரிகளால் அறியலாம். மத்தளம், பறை, ஊது கொம்பு, நெடுவங்கியம், தூம்பு, குழல், சல்லிகை எனும் பறை, கரடிகை என்னும் கருவி, கிணை எனப் பலவும் பிறக் கருவிகளும் தூக்கிக் கொண்டு சென்றுள்ளனர். கூத்தர்களைக் கோடியர், வயரியர் என்றும் குறிப்பிடுகின்றனர். இதனை,

“யாணரப் புலவரொடு வயரியர் வருக” (மது:750)
“கொடும் பறைக் கோடியர்” (மது: 523)
“விழவின் ஆடும் வயிரியர்” (மது:628)

என்ற வரிகள் மெய்பிக்கின்றன. இவர்கள் விழாக்காலங்களில் இசைக் கருவிகளை இசைத்துக் கூத்தாடும் இயல்பினையுடையவராக வாழ்ந்துள்ளனர்.

இவர்களைச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் “கோடியர்-கூத்தர், வயரியர்-கூத்தர்”[149] எனக் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. “வளைந்த ஊது கொம்பு போன்ற கருவியாகிய ‘கோடு’ இசைத்து ஆடிய கலைஞர் கோடியர் எனப்பட்டனர். கோடு என்பது யாழ்த்தண்டு, ஊதுகொம்பு எனவும் பொருள்படும்”[150] என்றும் வயிரியர் என்பதற்கு வயிர் என்பது மூங்கில் பிரம்பு வழியே செய்யப்பட்ட ஊது கொம்பு ஆகும். இக்கருவியினை இசைத்தவர்கள் வயிரியர் ஆவர். கோடு போலவே ஊதி இசைக்கும் ஒரு குழல் கருவியே வயிர் எனப்பட்டது”[151] எனவும் பக்தவத்சலபாரதி குறிப்பிடுகின்றார். “கோடியர் என்போர் கூத்துக் குழுவினருள் கோடு என்னும் இசைக் கருவி வாசித்த கலைஞர் ஆவர் என்றும் வயிர் என்னும் மூங்கிலால் ஆன இசைக்கருவியை வாசித்தவர் வயிரியர் ஆயினர்”[152] எனவும் காந்திதாசன் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு இசைக்கருவிகளைக் கொண்டு இசைத்து ஆடும் இயல்பினையுடையவராக வயிரியர், கோடியர் என்ற பெயரில் கூத்தர்கள் இருந்துள்ளனர் என்பதையும் அறியமுடிகின்றது. இவர்களை, “பல்இயக்கோடியர்” (சிறு.125) எனச் சிறுபாணாற்றுப்படைக் குறிப்பிடுகிறது. வயிரியர், கோடியர் பல இசைக்கருவிகளை இசைக்கும் திறன் உடையவர் என்ற பொருளில் அமைந்துள்ளது. ஆகவே கூத்தர்கள் பல இசைக்கருவிகளை இசைத்து ஆடும் இயல்பினர் என்பது தெளிவு. மேலும்,

“பல இசைக்கருவிகளை இசைத்துக் கூத்து ஆடியவர் கூத்தர்:”[153] என இராசமாணிக்கனார் கூறுவதும் இக்கருத்தை உறுதிப்படுத்தும். பத்துப்பாட்டில் சூதர் (அகவர்), மாகதர், வைதாளிகர் போன்ற பிறக் கலைஞர்களும் இருந்துள்ளனர். இதனை மதுரைக்காஞ்சி,

“சூதர் வாழ்ந்த மாகதர் நுவல
வேதாளிகரொடு” (மது: 670)

என்று குறிப்பிடுகின்றது. சூதர், மாகதர், வைதாளிகர் என்போர் வாழ்த்திசைப்பவர் எனக் கூறுகின்றனர். இவர்களை, மா.இராசமாணிக்கனார், “சூதர்- அரசர் முன்பு நின்று ஏத்துவோர், மாகதர் - அரசர் முன்பு இருந்து ஏத்துவோர், வைதாளிகர் - அரசரைப் புகழ்ந்து பாடுவோருள் ஒரு வகையினர்”[154] எனக் குறிப்பிடுகின்றார். இவர்கள் துயில் எழுப்பும் இயல்பினையுடையவராக இருந்ததனை,

“மறம் கலங்கத் தலைச் சென்று
வாள் உழந்து அதன் தாள் வாழ்த்தி
நாள் ஈண்டிய நல் அகவர்க்கு” (மது: 221-223)

என்ற வரிகள் தெளிவுபடுத்துகின்றன. சூதரை அகவர் என்றும் குறிப்பிடுகின்றனர். “அகவர் மன்னர்களின் போர்த்திறம், படைபலம், வீரம், புகழ், ஆட்சித்திறம் முதலானவற்றைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெறுவோர் என்றும் இவர்கள் விடியற்காலையில் அரண்மனை வாயிலில் நின்று துயிலலெழுப்பும் பண்பினர்”[155] எனப் பக்தவத்சலபாரதி குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. இக்கூற்றை ஆராயும்பொழுது அரசனைப்புகழ்ந்து துயில் எழுப்புபவரைப் பலப் பெயர்களால் அழைத்துள்ளனர். அதனோடு, உண்ண உணவும். உடுத்த உடையும் இல்லாது எவ்விதப் பற்றுக்கோடும் இன்றி பசியோடும், கந்தல் ஆடையோடும் அலைந்துத்திரிந்து வாழும் கலைஞர்கள் போலல்லாது, மிகுந்த தூய்மையாடை உடுத்தி, நோயின்றி வாழ்ந்து வந்த கலைஞர்களும் இருந்துள்ளமையைத் திருமுருகாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. இவர்கள் மற்ற கலைஞர்கள் போல் நாடோடி வாழ்க்கை வாழ்பவர்களாகத் தெரியவில்லை. மாறாகச் சிறப்புடன் வாழ்ந்தவர்களாக இருந்துள்ளதைத் திருமுருகாற்றுப்படை (138-147) வரிகள் குறிப்பிடுகின்றன.

வறுமையில் ஓடித்திரியும் யாழிசைக்கும் பாணர்கள் ஒருபுறம் இருந்ததைப் போன்று யாழிசைக்கும் கலைஞர்களாக மற்றொரு பிரிவினர் வேறு விதமாக நன்கு ஆடையுடுத்தி, நோய் இன்றி, அணிகலன்கள் அணிந்து சிறப்புடன் வாழ்ந்துள்ளனர். இவ்வாறு கலைத்தொழில் செய்து

வாழும் கலைஞர்களிலே பலப் படிநிலைகள் இருந்துள்ளமையை உறுதிப்படுத்துகின்றன.

## 2.9 முடிவுரை

- பத்துப்பாட்டு இலக்கியங்களில் குடிகள் எனும் இயலில் சங்ககால மக்கள். நில அடிப்படையிலும் பின்னர் அந்நிலத்தில் அவர்கள் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையிலும் சிறு சிறு பிரிவுகளாகப் பிரிந்துள்ளனர். செய்யும் தொழிலின் அடிப்படையிலேயே அவர்களுக்குப் பலவாறு பெயர்களும் வழங்கப்பட்டன.
- பத்துப்பாட்டு நூல்களில் குறவர், கானவர் என்ற இரு பிரிவினர் மட்டுமே பெரும்பாலும் இடம் பெற்றுள்ளனர். குறிஞ்சி நிலத்தார், பயிரிடுதல், காவல் தொழில் போன்ற பிற தொழில்களிலும் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் அவர்களை விட சிறப்புடன் வாழ்ந்த மன்னர்கள், நிலத்தலைவன், சிற்றரசர்கள் என அதிகாரத்தில் இழந்தவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்து கொடுக்கும் உழைக்கும் மக்களாகவே வாழ வேண்டிய நிலை இருந்துள்ளது. ஒரே நிலத்தைச் சார்ந்த மக்களாக இருந்தாலும் வாழும் இடத்தின் வசதிக்கு ஏற்ப உணவின் தரம், இருப்பிடம், வாழும் முறை ஆகியவற்றில் வேறுபாடு நிலவியது எனலாம்.
- தொண்டைநாட்டு முல்லை நிலத்தார், பால், வரகரிசிச் சோற்றையும், நன்னனது மலைநாட்டில் வாழ்ந்த முல்லை நிலத்தார் மூங்கிலரிசி, நெல்லரிசி, ஆகியவற்றோடு புளிக்கரைசல் இட்டுக் கூழாக்கி அவர்களிலும் சற்று உயர்வான முறையில் உணவுச் சமைத்து உண்டுள்ளனர். பிறத் தொழில் அறியாதவராக ஒற்றை ஆடை அணிந்து வாழும் எளிமை வாழ்வே முல்லை நிலத்தார் வாழ்வாக இருந்துள்ளது.
- முல்லை நிலத்தவர் கால்நடைகளை வளர்ப்பதோடு, உழவுத் தொழில்செய்து வாழ்ந்ததாகக் குறிப்பிட்டிருப்பது இவர்களுக்குள்ளே இரண்டு பிரிவுகள் இருந்ததைக் காட்டுகின்றது.
- காடும் காடுசார்ந்த பகுதியைத் தொண்டைமான் இளந்திரையன். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன், நல்லியக்கோடன், நன்னன், பாண்டியன் நெடுஞ்செழியன் போன்றவர்கள் ஆட்சி செய்துள்ளனர். இவற்றுள் வளம் பொருந்திய நாட்டினை ஆண்ட

தொண்டைமான் இளந்திரையன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் ஆகிய இருவரது நாட்டிலும் குறிப்பிடப்பட்டுள்ள முல்லை நிலத்தார் மற்ற முல்லை நில மக்களை விட செழிப்பாக வாழ்ந்துள்ளனா்.

- உழவர்களில் உழுதுண்போர், உழுவித்துண்போர், தோப்புழவர் எனவும் உழவுத்தொழில் செய்யும் தொழிலாளர்களாகக் களைஞர், அரிநர், களமர், வினைஞர் எனப் மருதநிலத்தில் பல படிநிலைகளாக இருந்துள்ளனா். மருத நிலத்தில் தோப்பு உழவர் என்ற ஒரு பிரிவினரும் தோப்புகளில் தனியே வசித்து பழங்கள், கிழங்குகளை உணவாக உண்டு வந்துள்ளனர். உழுதுண்ணும் வேளாளர் வைக்கோலால் வேய்ந்த குடிசையிலும் பழையசோறு, அவல் எனவும் உழுவித்துண்ணும் வேளாளர் வளம் பொருந்திய வீட்டில் வெண்ணிற நெற்சோறு, கோழிப்பொறியல், உயர்வகை உணவும் என உண்டு வாழ்ந்துள்ளனர். பத்துப்பாட்டில் உழைப்பவருடைய உணவு ஒன்றாகவும் பிறர் உழைப்பில் வாழ்பவரது உணவு மற்றொன்றாகவும் இருந்ததே சமூகத்தில் இவர்கள் ஏற்றத்தாழ்வுடன் இருந்துள்ளமைக்குச் சான்றாக அமைகிறது எனலாம்.
- சோழ நாடு, ஒய்மா நாடு, தொண்டை நாடு என்ற மூன்று நாடுகளிலும் வசித்து வந்த மருத நிலத்தவருள் தொண்டை நாட்டில் வாழ்ந்த உழுதுண்போரே பசி, வறுமை ஏதும் அறியாத உயர்வான வாழ்வு வாழ்ந்துள்ளனர்.
- மீன் பிடித்தல் தொழில் செய்பவரில் கடலுக்குச் சென்று மீன்பிடிப்பவர் பரதவர், திமில் என்னும் சிறுவலை கொண்டு பொய்கை, குளம். வயல் இவற்றில் மீன் பிடித்து வாழ்பவர் வலைஞர் என்று அழைக்கப்படுகின்றனர். பரதவர்களில் சிலர் கடல் வாணிபத்திலும் ஈடுபட்டுள்ளனர். சிற்றரசர்களாகவும் இருந்துள்ளனர். சங்கு, முத்துக் குளிப்போர், உப்பு விளைக்கும் அளவர், கலங்களைச் செலுத்தும் தொழில் செய்யக்கூடிய மீகாமர் என மருத நிலத்து மக்கள் பல பிரிவினராக வாழ்ந்துள்ளனர்.
- முல்லை நிலத்தார் வரகு வைக்கோல் குடிசையிலும் மருத நிலத்தார் நெல் வைக்கோல் குடிசையிலும் நெய்தல் நிலத்தார் தருப்பைப் புல் குடிசையிலும் வசித்துள்ளனா். நெய்தல் நில மக்கள் பட்டினம், பாக்கம், சேரிப்பகுதிகள் என சிலர் குடிசையிலும் சிலர் துறைமுக

நகரங்களிலும் வாழ்ந்தவராகக் குறிப்பிடுவது இவர்களுள் பொருளாதார மேம்பாடுடையோர் நகரத்திலும், எளியோர் சேரிப்பகுதிகளிலும் வாழ்ந்திருப்பதை உறுதிபடுத்துகிறது.

- நெய்தல் நிலத்தவரின் முக்கிய உணவு மீன், தொண்டை நாடு, ஒய்மா நாடு எனப் பேரூர்களில் வாழ்ந்த மக்கள் சுவை மிகுந்த கள், பிற இறைச்சிகள் சேர்த்து உண்டுள்ளனர். இங்கு உணவின் தரம் தகுதிக்கேற்ப வேறுபட்டுள்ளமை புலனாகின்றது.
- தொண்டை நாடு, பாண்டியநாடு, சோழ நாடு ஆகியவற்றில் வாழ்ந்த நெய்தல் நிலத்தார் பொருளாதாரத்தில் மேம்பட்டு வாழ்ந்துள்ளனர். குறுநில மன்னர்களாக விளங்கிய பரதவர்களைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அடிபணியச் செய்துள்ளான். ஒவ்வொரு நிலத்துக்குள்ளும் பல பிரிவுகளாகத் திணை சார்ந்த மக்கள் வாழ்ந்திருப்பதும் தெளிவாகின்றது.
- பாலை நில மக்களும் ஈந்திலையால் வேயப்பட்ட சிறுகுடில்களில் வசித்துள்ளனர். மற்ற நிலத்தார் போலல்லாது இவர்கள் குடில்களின் உள் இருந்தும் வெயில் தாங்காது துன்புற்று வாழ்ந்துள்ளனர். இவர்களுள் காவல் புரியும் தொழில் செய்யக்கூடிய மற்றொரு பிரிவினரும் இருந்துள்ளனர்.
- ஒய்மாநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு ஆகியவற்றில் எயினரது இல்லங்கள் ஒரே அமைப்புடன் இருந்துள்ளன. தொண்டைநாட்டில் வாழ்ந்த எயினரில் ஒரு பிரிவினர் உயர்ந்த மதில்களையுடைய இல்லங்களில் வாழ்ந்துள்ளனர். பத்துப்பாட்டில் குறிஞ்சி முதலான ஐந்து நிலங்களிலும் திணை சார்ந்த மக்களுள் பல பிரிவுகள் பல படிநிலைகள் இருந்துள்ளமை தெளிவாகின்றது.
- திணை அடிப்படையில் மட்டுமல்லாது தொழில் அடிப்படையிலான பிரிவுகளும் இலக்கியங்களில் காணப்படுகின்றன. அவற்றுள் வாழ்வாதாரத்திற்கான தொழில் செய்யக்கூடியவர்களாகக் காருகர், புலைத்தி, அட்டில் தொழிலர், தட்டார், தச்சர், கருமான், கன்னான், குயினர், ஓவியர், நாழிகைக் கணக்கர், அறிவர், துன்னர், கைவல் கம்மியர்களாகச், சாயப்பாக்குத் தொழிலர், நீர்இறைப்போர், சங்கு அறுத்து வளையல் செய்வோர், குற்றேவலர்கள், காவல் தொழில் செய்வோர், ஊர்க்காவலர், மெய்க்காவலர், கடைக்காப்பாளர், வரி

வாங்குவோர், சுண்ணம் தயாரிப்போர் எனப் பல பிரிவினர்கள் வாழ்ந்துள்ளனர்.

- வாணிகம் தொடர்பான தொழில் செய்த வணிகர்கள் செல்வச் செழிப்போடு மாளிகைகளிலும் உயர்ந்த மாடங்களிலும் வசித்துள்ளனர். மிளகு வணிகர், கூவியர், உணவு பண்டங்கள் விற்போர், மீன் இறைச்சி விற்போர், கள் விற்போர், புடவைகள் விற்போர், வெற்றிலை, சுண்ணாம்பு, பாக்கு விற்போர் நறுமணப் பொருட்கள் விற்போர், பூ, மாலை, விற்போர், பொன், செம்பு விற்போர் என குறு வணிகர்களும் வாழ்ந்துள்ளனர்.
- கலைத் தெடர்பான தொழில் செய்யக்கூடிய பாணர்களில் சிறுபாணர் பெரும்பாணர் என இரு பிரிவினரும் பொருநரில் போர்க்களம் பாடுவோர், பாணி பாடுவோர் என இரு பிரிவினரும் கூத்தரில் வயிரியர், கோடியர் என இரு பிரிவினரும் இசைக்கருவிகளை இசைத்து ஆடும் கூத்துக் கலைஞர்களும் பாடிக் கொண்டு ஆடும் விறலியும் எனத் தொழில்முறை பாகுபாடும் இக்கலைஞர்களிலே கந்தலாடையோடும் பசியோடும் வாழ்ந்த ஒரு பிரிவினரும், தூய்மையான ஆடை, அணிகலன்கள் அணிந்து பாடல் இசைப்போரும் என தொழிற்குடிகளுக்கு இடையில் பொருளாதார ஏற்றத்தாழ்வும் நிலவியதை அறியமுடிகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. பன்னிருபாட்டியல். நூற்.266.
2. மேலது, நூற்.267.
3. இரா.மோகன், பத்துப்பாட்டுத் தொகுதி – 1, ப.1.
4. இரா.தண்டாயுதம், சங்க இலக்கியம், ப.1.
5. வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், ப.85.
6. இரா.தண்டாயுதம், முந்நூல், ப.17.
7. தொல்காப்பியம். நூ.எ.88.
8. ந.பிச்சமுத்து, இலக்கியக் கொள்கைகள், பக்.67-68.
9. குறுந்தொகை, பா.3.
10. கு.இராசரத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப.61.
11. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.51.
12. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.435.
13. மேலது, ப.414.
14. கு.இராசரத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப.65.
15. மேலது, ப.56.
16. வி. சசிவல்லி, பண்டைத்தழிழா் தொழில்கள், ப.68.
17. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப.431.
18. கு.இராசரத்தினம், முந்நூல்,ப.58.
19. மேலது, ப.58.
20. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.84.
21. மேலது, பக்.83, 84.
22. மேலது, ப.87.
23. மேலது, ப.88.
24. வி.சி. சசிவல்லி, முந்நூல், ப.21.
25. தமிழண்ணல், சங்க மரபு, ப.239.
26. மு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழர் வாழ்வியல், ப.48.
27. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப.35.
28. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.49.
29. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.89.
30. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.52.
31. இரா.மோகன், முந்நூல், ப.263.
32. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.53.

33. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.414.
34. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.50.
35. கு.இராசரத்தினம், முந்நூல், ப.68.
36. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.52.
37. கு.இராசரத்தினம், முந்நூல், ப.65.
38. மேலது, ப.66.
39. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.91.
40. மேலது, ப.96.
41. தமிழண்ணல், முந்நூல், ப.250.
42. மயிலை சீனி வேங்கடசாமி, பழங்காலத்தமிழர் வாணிபம், ப.10.
43. கு.இராசரத்தினம், மேலது, ப.69.
44. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.108.
45. சாமி.சிதம்பரணார், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், ப.86.
46. சசிவல்லி, முந்நூல், ப.24.
47. இரா. மோகன், முந்நூல், ப.293.
48. கு.இராசரத்தினம், முந்நூல், ப.71.
49. மேலது. ப.71.
50. போ.வே.சோமசுந்தரனார், (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, நூ.எ.54.
51. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.56.
52. த.கோவேந்தன், சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், ப.127.
53. மேலது, ப.126.
54. இரா.மோகன், முந்நூல், ப.125.
55. த.கோவேந்தன், முந்நூல், ப.253.
56. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.57.
57. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.99.
58. மேலது, ப.100.
59. சசிவல்லி, முந்நூல், ப.25.
60. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.113.
61. ரா.பி.சேதுப்பிள்ளை, ஊரும் பேரும், ப.36.
62. மேலது, ப.38.
63. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.100.
64. மேலது. ப.422.

65. மேலது, ப.437.
66. மேலது, ப.414.
67. அபிதான சிந்தாமணி, (பரவர்), ப.1041.
68. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.53.
69. தி.முத்துக்கண்ணப்பன், நெய்தல் நிலம், ப.169.
70. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.28.
71. தி.முத்துக்கண்ணப்பன், முந்நூல், ப.170.
72. த.கோவேந்தன், முந்நூல், ப.197.
73. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.416.
74. மேலது, ப.416.
75. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.29.
76. சோமசுந்தரனார் உரை, பத்துப்பாட்டு, ப.88.
77. இளம்பூரணர் உரை, தொல்காப்பியம். நூற். எண்., ப.5.
78. ஞா.மாணிக்கவாசகன், (உ..ஆ) சிலப்பதிகாரம், ப.186.
79. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.93.
80. சு.ராசாராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப.31.
81. கா.சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச்சமூகம், ப.16.
82. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.93.
83. மேலது, ப.425.
84. மேலது, ப.435.
85. மேலது, ப.414.
86. மேலது, ப.103.
87. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.58.
88. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.94.
89. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.35.
90. அ.பாண்டுரங்கன், சங்க இலக்கியம், ப.148.
91. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.96.
92. மேலது, ப.95.
93. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.36.
94. மேலது, ப.36.
95. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.86.
96. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.46.
97. கு.இராசரத்தினம், முந்நூல், பக்.99,100.

98. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.48.
99. க.வெள்ளை வாரணன், முந்நூல், ப.91.
100. இராசமாணிக்கனார், முந்நூல், ப.416.
101. வெள்ளை வாரணன், முந்நூல், ப.91.
102. மேலது, ப.89.
103. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.103.
104. தேவநேயப்பாவாணர், தமிழர் வரலாறு, ப.326.
105. மேலது, ப.326.
106. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.106.
107. மேலது, ப.109.
108. வெள்ளை வாரணன், முந்நூல், ப.41.
109. மேலது, ப.89.
110. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.115.
111. இராசமாணிக்கனார், முந்நூல், ப.416.
112. மேலது, பக்.416-417.
113. மேலது, ப.418.
114. வெள்ளை வாரணன், முந்நூல், ப.90.
115. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.360.
116. அ.பாண்டுரங்கன், முந்நூல், ப.150.
117. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.59.
118. இரா.மோகன், முந்நூல், ப.343.
119. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.184.
120. மேலது, ப.184.
121. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.110.
122. மேலது, ப.115.
123. வெள்ளை வாரணன், முந்நூல், ப.85.
124. இராசமாணிக்கனார், முந்நூல், ப.420.
125. மேலது, ப.440.
126. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், பக், 113, 114.
127. வெள்ளை வாரணன்,முந்நூல், ப.90.
128. அடியார்க்கு நல்லார் உரை, சிலப்பதிகாரம், ப.108.
129. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.113.
130. மேலது, ப.114.

131. மேலது, ப.114.

132. மேலது, ப.115.

133. காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.49.

134. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.933.

135. இராசமாணிக்கனார், முந்நூல், ப.45.

136. மேலது, ப.50.

137. பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், பக்.49.

138. த.கோவிந்தன், முந்நூல், ப.217.

139. பி.சேதுராமன், ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல், ப.58.

140. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.76.

141. த.கோவிந்தன், முந்நூல், ப.253.

142. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.543.

143. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.356.

144. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.77.

145. மேலது, ப.77.

146. த.கோவிந்தன், முந்நூல், ப.137.

147. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.79.

148. காந்திதாசன், முந்நூல், ப.77.

149. த.கோவிந்தன், முந்நூல், ப.144.

150. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.81.

151. மேலது, ப.83.

152. காந்திதாசன், முந்நூல், ப.79.

153. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.533.

154. மேலது, ப.629.

155. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.87.

# எட்டுத்தொகை இலக்கியங்களில் குடிகள்

## 3.0 முன்னுரை

சங்ககால மக்களின் வாழ்க்கைக்குச் சான்று பகர்வன சங்க கால நூல்கள்.தமிழரின் தொன்மைக்கும் பெருமைக்கும் சான்றுகளாகத் திகழ்வன பத்துப்பாட்டு மற்றும் எட்டுத்தொகை நூல்களாகும். இந்நூல்கள் அனைத்தும் மனித இனத்திற்குத் தேவையான அனைத்துக் கருத்துக்கள் மற்றும் அறிய வேண்டிய பலத் தகவல்களையும் தன்னகத்தே கொண்டு ஒரு அறிவுக் கருவூலமாக விளங்குகின்றன. சங்ககால மக்களின் வாழ்வியலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நில அமைப்பைக் கொண்டு ஐந்து திணையாக வகைப்படுத்தி உள்ளனர். மேலும், அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையினைத் தெளிவாக விளக்குகின்றன. இந்த ஐந்து திணைகளிலும் வாழ்ந்த மக்களின் வாழ்வியலையும் பிறத் தொழில்கள் செய்து வாழும் தொழில் பிரிவினரையும் இந்நூல்களில் காண முடிகிறது. அவ்வகையில் எட்டுத்தொகை நூல்களில் உள்ள குடிகளை ஆராயும் விதமாக இயல் அமைகின்றது. இவ்வியல் குடிகளின் அமைப்பு முறைகள் அவர்களுக்குள் நிலவிய வேறுபாடுகள், படிநிலைகள் ஆகியவற்றை விளக்க முயல்கிறது. திணை சார்ந்த மக்களல்லாத பிற தொழில்கள் செய்து வாழும் குடிகளின் வாழ்க்கை முறை மற்றும் பாகுபாட்டையும் விளக்குவதாகவும் இவ்வியல் அமைகின்றது.

## 3.1 எட்டுத்தொகை – அறிமுகம்

எட்டுத்தொகை என்பது எட்டு நூல்களின் தொகுப்பாகும். இவற்றுள் ஒவ்வொரு நூலும் பல புலவர்களால் பல காலக்கட்டங்களில் எழுதப்பட்டுப் பின்னர் ஒரு சேரத் தொகுக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை நூல்கள் இன்னின்ன என்பதைப் பழம் பாடலொன்று,

> "நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
> ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
> கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறமென்று
> இத்திறத்த எட்டுத்தொகை" [1]

எனக் குறிப்பிடுகின்றது. இதனை, "எண் பெருந்தொகை எனவும் படும்"[2] என மது.ச.விமலானந்தம் குறிப்பிடுவார். எட்டுத்தொகை நூல்களில் முதலில் வைத்து எண்ணப்படுவது நற்றிணையாகும். "நற்றிணை என்பது நல் - சிறந்த திணை,ஒழுக்கம் எனவே சிறந்த ஒழுக்கத்தை எடுத்து இயம்பும் நானூறு

பாக்களைக் கொண்டதோர் இனிய நூல்”[3] என்பார் வேங்கடராமன். “குறுந்தொகை, நெடுந்தொகை இரண்டிற்கும் இடைப்பட்டு அளவான அடிகளை உடைமையினால் இது நற்றிணை என வழங்கப்பட்டது”[4] என்பார் மு.சண்முகம்பிள்ளை.

‘நற்றிணை நானூறு’ எனவும் இந்நூல் வழங்கப்பெறுகிறது. தொகை நூல்களில் ஒன்றான இந்நூல் பலரால் பாடப்பட்ட பாடல்களின் தொகுதியாகும். ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பேரெல்லையும் கொண்ட நானூறு பாடல்களைக் கொண்டதாகும்.பழங்காலத் தமிழரின் ஒழுக்கம் மற்றும் வாழ்வியலைத் தெளிவாக விளக்குவதாக இந்நூல் அமைகிறது.

எட்டுத்தொகையில் உள்ள ஐந்து அகநூல்களில் ஒன்று குறுந்தொகை. “குறுகிய பாடல்களின் தொகுப்பு குறுந்தொகை”[5] என்கிறார் சாமி.சிதம்பரனார் “நீண்ட பாடல்கள் அடங்கிய அகநானூற்றை ‘நெடுந்தொகை என்று குறித்தல் போல அகவற்பாவின் அமைப்பில் சுருங்கிய அடி வரையறையைக் கொண்ட பாடல் தொகுதி குறுந்தொகை என்று பெயர் பெறுவதாயிற்று”[6] என்பார் மு.சண்முகம்பிள்ளை. இந்நூல் குறுந்தொகை நானூறு எனவும் அழைக்கப்பெறும். மேலும், நல்ல குறுந்தொகை என்றும் சிறப்பித்துக் கூறப்படுகின்றது. நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் கொண்டுள்ளது. பெரும்பாலும் உரையாசிரியர்கள் இந்நூலின் பாடல்களையே மிகுதியாக எடுத்துக்காட்டுவதாக ஆசிரியா்கள் குறிப்பிடுகின்றனர். “பண்டைய உரையாசிரியர்கள் தத்தம் உரை நூல்களில் மேற்கோளாக இந்நூற் செய்யுட்களைப் பெரிதும் எடுத்தாண்டுள்ளனர். இந்நூலுள் இப்போது தெரிந்தவரையில் 165 செய்யுட்களே பிற நூலுரைகளில் மேற்கோளாகக் காட்டப் பெறாதவை’ என்று டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் குறித்துள்ளார்”[7] எனும் கருத்தை, சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

எட்டுத்தொகை நூல்களில் மூன்றாவதாக இடம்பெறுவது ஐங்குறுநூறு ஆகும். ஐந்து நூறு பாடல்களைக் கொண்ட நூல் ஐங்குறுநூறு எனலாம். “மருதம் முதலிய ஐந்திணையொழுகலாறுகளை நற்றிணை முதலியவற்றிலுள்ள செய்யுட்களைவிட அடியளவால் குறைந்த நூறு நூறு

பாக்களால் தனித்தனியே விளக்குதலால் இ∴து ஐங்குறுநூறு என்று பெயர் பெற்றது”[8] என்பார் அ.தட்சிணாமூர்த்தி. மேற்கூறியவாறு ஒவ்வொரு திணைக்கும் நூறு நூறு பாடல்களைக் கொண்டு குறைந்த அடிகளால் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றுள்ளது.

மூன்று அடிச்சிறுமையும் ஆறு அடிப் பெருமையும் கொண்டுள்ளது. மேலும்,500 பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு நூறும் பத்துப் பத்தாகப் பிரிக்கப்பட்டுப் பொருள் மற்றும் சொல்லால் பெயரிடப்பட்டுள்ளது. ஐங்குறு நூற்றைத் தொகுத்த புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் “கடைச்சங்கப் புலர்களிலே ஒருவர் கூடலூர் என்னும் ஊரிலே பிறந்தவர். வேளாளர் குடியிலே தோன்றியவர் கிழார் என்பது வேளாளர்க்குரிய குடிப்பெயர் புலத்துறை முற்றிய என்பது இவருடைய திறமையைக் குறிக்கும் சிறப்புப் பெயர். அறிவுத்துறையிலே நிரம்பியவர் என்பதே இதன் பொருள்”[9] என சாமி சிதம்பரனார் விளக்கம் தந்திருப்பது கவனிக்கத்தக்கது. மேலும், “யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை சிறந்த வீரன், கொடை வள்ளல், இந்த இரும்பொறையும் கூடலூர் கிழாரும் நண்பர்கள். இந்த மன்னனுடைய உதவியினால் இந்நூலைத் தொகுத்தார் கூடலூர் கிழார்”[10] என்பர்.

எட்டுத்தொகையுள் அமைந்த புறப்பொருள் நூல் பதிற்றுப்பத்து. இப்பதிற்றுப்பத்து, பத்துப்பாடல்கள் அடங்கிய பத்து நூல்களின் தொகுதியாகும். “பத்துச் சேரமன்னர்களைக் குறித்து ஒவ்வொரு மன்னருக்கும் பத்துப் பாடல்களாகப் பத்துப் புலவர் பெருமக்களால் பாடப்பெற்ற நூறு செய்யுட்கள் அடங்கிய நூலாதலின் பதிற்றுப்பத்து என்னும் பெயர் பெற்றது”[11] என்பார் ஆலிஸ். பத்துச் சேர மன்னர்களைக் குறித்துப் பாடிய பத்துப் பத்துப் பாடல்களின் தொகுதிக்குப் பதிற்றுப்பத்து எனப் பெயர் சூட்டியிருப்பதை அறிய முடிகிறது. இந்நூலில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் துறை, வண்ணம் தூக்கு, பெயர் என்பவை இடம்பெற்றுள்ளன. இந்நூலின் நான்காம் பத்து அந்தாதியாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பத்தின் முடிவிலும் அப்பத்தினைப் பாடினோர் அதன் பாட்டுடைத் தலைவர், அவர் செய்த அரும் செயல்கள், தம்மைப் பாடிய புலவருக்கு அவர் அளித்த பரிசில் முதலிய செய்திகளைக் குறிப்பிடும் பதிகமும் இடம்பெற்று.

இப்பதிகங்கள் ஆசிரியப்பாவில் தொடங்கிக் கட்டுரையாக முடிவு பெறுகின்றன.

எட்டுத்தொகை நூல்களுள் ஐந்தாவதாக அமைந்தது பரிபாடல். ‘ஓங்கு பரிபாடல்’ என்று புகழப்பட்ட சிறப்பு கொண்டது. ‘பரிபாட்டு’ என்றும் இதனைக் குறிப்பிடுவர், “பரிந்து செல்லும் ஓசையையுடைய செய்யுட்களான் அமைந்த ஒருவகைச் செய்யுளாம் பலவகைப் பாக்களும் பலவாய அடிகளும் பரிந்து வரும் பாட்டாகும்”[12] என்று விளக்கம் தருகின்றார் மது.ச.விமலானந்தம்.

“பரிபாட்டுக்களைத் தொகுத்த நூலுக்குப் பரிபாடல் என்று பெயர் எனவும் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா அகிய நால்வகைப் பாடல்களும் கலந்த ஒரு வகைப்பாடலே பரிபாடல்”[13] என்கிறார் சாமி.சிதம்பரனார். இக்கூற்றின்படி பலவகைப்பாடல்கள் கொண்ட நூலாகப் பரிபாடல் திகழ்வதை அறிய முடிகின்றது.

எட்டுத்தொகை நூல்களுள் பாவின் பெயரைப் பெற்ற நூல் கலித்தொகை. இந்நூல் முழுவதும் கலிப்பாவால் ஆனது. தரவு, தாழிசை, சுரிதகம், தனிச்சொல் எனும் அமைப்பைக் கொண்டுள்ளது. இதனை, “கலிப்பா என்பது நால்வகைப் பாடல்களில் ஒன்று. இதையும் பல இசைகளில் பாடலாம். ஒரு செய்தியைத் தொகுத்தும், விரித்தும் சுருக்கியும் கூறுவதற்கேற்ற பகுதிகளைக் கொண்ட பாடல் கலிப்பாடல். இத்தகைய பாடல்களின் தொகுப்பே கலித்தொகை”[14] எனச் சாமி.சிதம்பரனார் விளக்கம் தந்துள்ளாா். இந்நூல் நூற்றைம்பது பாடல்களைக் கொண்டது. ஐங்குறுநூற்றைப் போல ஐந்து பகுதிகளைக் கொண்டு விளங்குகின்றது. ‘கற்றறிந்தார் ஏத்தும் கலி’ எனும் அடைச்சிறப்புப் பெற்றது.

அகப்பொருள் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட நூல் அகநானூறு. இந்நூல் அகம், அகப்பாட்டு எனவும் அழைக்கப்படுகிறது. எட்டுத்தொகை நூல்களுள் நீண்ட அடிகளைக் கொண்டமையால் ‘நெடுந்தொகை’ என்றும் அழைக்கப்படுகிறது. “களிற்றியானை நிரை என்பதற்கு இப்பகுதியின் நடையும் பிறவும் களிறு போன்ற கம்பீரத் தோற்றமுடன் காணப்படுதலான் இங்ஙனம் இயம்பப்படுகிறது. மணியும் பவளமும் கலந்தாற் போன்ற நடையும் நலமும் பொலிவும் கொ்ணடமையால்

மணிமிடைப்பவளம் எனவும் முத்துக் கோர்த்தாற் போல சீரான பொருளும் சரளமான நடையும் கொண்டொளிர்வதால் நித்திலக்கோவை”[15] எனப் பெயர் பெற்றதாகக் கூறுகிறார் மது.ச.விமலானந்தம்.

புறப்பொருள் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட நூல் புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு என்றும் வழங்கப்படுகிறது. பண்டைத் தமிழரின் வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றது. அக்கால மக்களின் அரசியல், சமுதாய நிலை, கல்வி, நாகரிகம், கலை வளர்ச்சி, வீரம், கொடை, பழக்கவழக்கங்கள் என அனைத்தையும் அறிந்து கொள்ள உதவுவது புறநானூறு ஆகும். மேற்கூறப்பட்ட எட்டுத்தொகை நூல்கள் அனைத்தும் பண்டைத்தமிழரின் வாழ்க்கையை அகம், புறம் என்று இரு பாடுகளை வைத்துப் பாடப்பட்டுள்ளன. மேற்கூறப்பட்ட நூல்களில் இடம்பெற்றுள்ள குடிகளை ஆராய்ந்து விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

### 3.2 குறிஞ்சி நிலம்

மலை மற்றும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி என்பர். குறிஞ்சி என்பது அந்நிலத்தில் இருக்கக்கூடிய பூவால் பெயர் பெற்றுள்ளது. “குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடமுமாகும். இப்பகுதியிற் குறிஞ்சி என்னும் பெயர் கொண்ட மலர்களே சிறப்பானவை”[16] என இராசமாணிக்கனாரும் “குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடமுமாகும். மலைப்பகுதியிலே குறிஞ்சி மலர் சிறந்து காணப்படுவதால் அப்பெயர் பெற்றது”[17] எனச் சசிவல்லியும் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. இவர்களின் கூற்றுப்படி, குறிஞ்சி நிலம் என்பது பூவால் பெயர் பெற்றிருப்பது உறுதிப்படுகிறது.

#### 3.2.1 குறிஞ்சி நில மக்கள்

குறிஞ்சி நிலத்தில் வாழக்கூடிய மக்கள் கானவர், குறவர், குன்றவர், புனைவர் எனவும் பெண்கள் குறத்தியர், கொடிச்சியர் எனவும் அழைக்கப்படுகின்றனர். மேலும், அந்நிலத்தில் வாழும் நிலத்தலைவர்களை நாடன், வெற்பன், சிலம்பன் எனப் பெயரிட்டு அழைத்துள்ளமையை,

“கொடுவிற் கானவன்” (நற். 75:6)
“மரம் கொல் கானவன்” (குறு. 214:1)
“குறவர் பாக்கத்து” (குறு.339:3)
“குறவர் முன்றில்” (அக.78:7)
“குறிஞ்சிக் குன்றவர்” (பரி. 9:67)

“புனவன் துடவைப் பொன்போல் சிறுதினை” (குறு.133:1)
“தினை உண் கேழல் இரிய புனவன்” (நற்.119:1)
“பெருந்தோட் கொடிச்சி” (குறு.335:7)
“கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை” (நற்:22:1)

என்னும் பாடல் அடிகளால் அறியமுடிகின்றது. குறவர், கானவன். புனவன். குன்றவர், கொடிச்சி, குறத்தி என அழைக்கப்பட்ட குறிஞ்சி நில மக்களுக்கும் குறிஞ்சி நிலத்துக்கும் தலைவர்கள் இருந்தனர். அவர்கள் நாடன், வெற்பன், சிலம்பன் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

### 3.2.1.1 வெற்பன்

குறிஞ்சி நில மக்கள் தலைமைப்பண்பு வகித்தவனாக ‘வெற்பன்’ திகழ்ந்ததை,

“மந்தியும் அறியா மரம் பயில் ஒரு சிறை
குன்றக வெற்பனொடு” (நற்.194:78)

எனும் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. பெருமைமிக்க யானை, மரம் ஏறும் மந்திகள், ஏற முடியாத மரங்கள் நிறைந்திருக்கும் குன்றுகளில் வெற்பன் இருந்துள்ளான். மேலும், அகிலைத் தீயிட்டுக் கொளுத்திய நறும்புகையானது வானில் தோன்றும் மேகம் போல மறைக்கும் நாட்டினையுடைய தலைவன் வெற்பன் என்பதை,

“……………. சாரல்
அகில் சுடு கானவன் உவல் சுடு கமழ் புகை
ஆடு மழை மங்குலின் மறைக்கும்
நாடு கெழு வெற்பனொடு” (நற்.282:6-9)

என்ற அடிகளால் அறியமுடிகிறது. மேலும், விளைவிப்பார் இன்றி தானே முளைத்து வளர்ந்த மூங்கில் நெற்கதிர்களை வளைத்துத் தின்னும் பெண் யானை, வாழைகள் நிறைந்த இடத்தே புகுந்து சென்றது. அங்கு மானின் குட்டிகள் துயில் கொண்டுள்ளன. அத்தகைய வளம் செறிந்த இருள் சூழ்ந்த சோலைகள் மற்றும் நீரை உடையவன் வெற்பன் எனக் கலித்தொகையின் 50-ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. மேலும், பலாப்பழம் சோற்றுத் திரள் ஆகியவற்றை உண்ணும் கானவர் இயல்பு மற்றும் காற்றினும் விரைந்து செல்லும் தேர், களிறு இவற்றைப் புலவோர்க்கு அருள் செய்யும் பண்புடையவனாகத் தலைவன் இருந்துள்ளதை, கலித்தொகை (50:12-13), (50:15-17) பகுதிகள் குறிப்பிடுகின்றன. இங்கு உழைக்கும் மக்கள் எளிய உணவை உண்டு வாழும் சிறுகுடி மக்களாகவும் தலைவன் செல்வச் செழிப்போடு உண்டு வாழ்ந்துள்ளதையும் அறிய முடிகின்றது.

**3.2.1.2 நாடன்**

நாடன் என்பவனும் குறிஞ்சி நிலத்தலைவனாகச் சுட்டப்படுகின்றான். யானை மூங்கிலை உண்பதற்கு விரும்பி வளைக்கத் தினைப்புனக்காவலர் எழுப்பிய கவண் ஒலிக்கு அஞ்சி, அதைக் கைவிட்டுள்ளது. அது தூண்டில் நிமிர்வது போல நிமிர்ந்துள்ளது. அத்தகைய கானக நாட்டின் தலைவன் என்பதை,

"ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக்
கானயானை கைவிடு பசுங்கழை
மீன் எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு" (குறு.54:2-5)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. பெண் மானும் கலைமானும் நெல்லிக்கனியை உண்டு பக்கத்தில் உள்ள சுனை நீரை, மலர்களை விலக்கி மூச்செறிந்து பருகும் நாட்டின் தலைவன் என்பதனை, குறுந்தொகைப் (317:1-5) பாடல் குறிப்பிடுகின்றது. மலையில், வேங்கை மரத்தடியில் ஆமான் தன் கன்றொடு தங்கித் துயில் கொள்வதைக் கண்ட மந்தித் தன் சுற்றத்தாரைக் குரலெழுப்பாது, ஆமானின் பால் சுரக்கும் மடியைப் பிடித்து பால் கறந்து தனது குட்டிகளுக்குக் கொடுக்கும் மலையை உடைய நாடன் என நற்றிணைக் குறிப்பிடுகிறது. இதனை,

"தடங்கோட்டு ஆமான் மடங்கல் மா நிரைக்
குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தென
வீங்கு சுரை ஞெமுங்க வாங்கி தீம்பால்
கல்லா வன் பறழ்க் கைந்நிறை பிழியும்
மா மலை நாட" (நற்.57:1-7)

என்ற அடிகளால் அறியலாம். மலையிடத்துச் சென்று கோழி தன் சேவலுடன் பழங்கொல்லையைக் கிளறி விட அவ்விடத்து நல்ல பொன் ஒளி வீசித் தோன்றும் மலைக்குரிய நாடன் என்பதை நற்றிணை (389:7-10) பாடல் விளக்குகிறது. குறிஞ்சி மலைக்குரியத் தலைவன் நாடன் என்பதை ஐங்குறுநூற்றின் (202:3-4,205:3) பாடல் அடிகளும் குறிப்பிடுகின்றன. நல்ல மலைக்குரிய தலைவன் நாடன் என்பதை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை என பலத்தொகை நூல்களும் குறிப்பிட்டிருப்பதை அறியமுடிகின்றது. மேலும், குறுந்தொகையில் ஒன்பது பாடல்களிலும் (18, 26,36, 247, 284, 288, 315, 333, 342) நற்றிணையில் இரண்டு பாடல்களிலும் (288, 232) ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களிலும் (217, 228, 263) கலித்தொகையில் இரண்டு பாடல்களிலும் (46, 48) நாடன் பற்றிய பதிவுகள் இடம்பெற்றுள்ளன. குறிஞ்சி நிலத்தலைவனாக வெற்பன்,

நாடன் என்பவர்களோடு சிலம்பன் என்ற பெயரும் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

"மாஅல் அருவித் தண் பெருஞ்சிலம்ப" (ஐங்.238:3)

என்ற அடி சுட்டுகின்றது. மேலும், குறுந்தொகை 362ஆவது பாடலிலும் சிலம்பன் பற்றியக் குறிப்பு உள்ளது. பெரிய அருவியொழுகும் மலை நாட்டிற்குத் தலைவனாக இருப்பவனைச் சிலம்பன் என ஐங்குறுநூறு குறிப்பிடுவதை அறிந்து கொள்ள முடிகின்றது. இதன் மூலம் குன்றுகள் சூழ்ந்த மலைகளுக்குரியவர்களாக,வெற்பன், நாடன், சிலம்பன் என்பவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களுக்குள் கானவர், குறவர். புனவன் என்று அழைக்கப்பட்ட குறிஞ்சி நில மக்கள் வாழ்ந்திருப்பதையும் அறியமுடிகின்றது. தாங்கள் இருக்கும் நிலப்பகுதியை வளமாகப் பயிரிட்டு மாற்றி, வேட்டையாடிப் பொருள் தேடிக் தரும் மக்கள் அந்நிலத்து உழைக்கும் மக்களாகவும் அத்தகைய மலைகளுக்கு உரிமை கொண்டாடும் விதமாக மற்றையோர் குறிப்பிடப்பட்டிருப்பதும் இவர்களுக்குள்ள படிநிலைகளைக் காட்டுகின்றது. இதனை, "குறிஞ்சி நிலத் தலைவன் வெற்பன், பொருப்பன், சிலம்பன் என்னும் திணைப்பெயர் பெற்றான்"[18] என இராசமாணிக்கனாரும் "குறிஞ்சி நிலத் தலைவன் வெற்பன், பொருப்பன், சிலம்பன், நாடன் எனப்பெறுவான்"[19] என சசிவல்லியும் தமது நூல்களில் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது.

### 3.2.2 குறிஞ்சி நிலத்தாரின் இருப்பிடம்

மலைப்பகுதிகளில் வாழக்கூடிய குறிஞ்சி நிலத்து மக்களின் இருப்பிடமானது சிறுகுடி என்றும் பாக்கம் என்றும் அழைக்கப்பெறுகின்றன. இதனை,

"கானவர் பெயர்க்கும் சிறுகுடியானே" (நற்.82:11)
"உறுகழை நிவப்பின் சிறுகுடிப் பெயரும்" (நற்.204:10.11)
"கல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே" (அக.7:22)
"குறவர் பாக்கத்து இழிதரும் நாடன்" (குறு.339:3)

ஆகிய அடிகள் குறிப்பிடுகின்றன. "மலை மீது வளரும் மரம், செடி, கொடிகளிலிருந்து உதிரும் மணமிக்க மலர்களால் மலைச்சாரல் மணம் செய்த மனைபோல மணத்தல் இயல்பு. அச்சாரலில் மலைவாணர் குடியிருப்பு அமைந்திருக்கும் அது 'சிறுகுடி' எனப்படும். அஃதாவது சில வீடுகளைக் கொண்ட குடியிருப்பு என்பது பொருள்"[20] என்கிறார். இராசமாணிக்கனார்

இவர்களின் கூற்றுப்படி சங்க காலத்தில் சில வீடுகளைக் கொண்டுள்ள ஊரினைச் சிறுகுடி என்று அழைத்துள்ளனர். “பல குடிசைகள் கொண்டது ஒரு கிராமம் அவ்வாறு அமைந்த கிராமம் சிறுகுடி அல்லது குறிச்சி எனப்படும்”[21] என விளக்கம் தருகின்றார் சு.வித்தியானந்தன். இவற்றை நோக்க சில வீடுகளைக் கொண்ட கிராமப்புற அமைப்பினைச் சிறுகுடி என அழைத்திருக்கக்கூடும் என்பது தெளிவு. மேலும், குடிசைகள் அமைத்து வாழ்ந்து வந்த குறிஞ்சி நில மக்களின் இல்ல அமைப்பு புல்லால் வேயப்பட்டு குறுகிய அமைப்பினை உடையதாக இருந்துள்ளது. குறிஞ்சி நில மக்கள் குறுகிய கால்களை நட்டு வரகு வைக்கோலால் மேற்புறத்தை வேய்ந்து, புல்லால் குடிசைகள் அமைத்து அங்குப் பல குடும்பங்களாக வாழ்ந்துள்ளனர். இத்தகைய குடியிருப்பை, சங்க இலக்கியங்கள் ‘குரம்பை’ எனக் குறிப்பிடுகின்றன.

### 3.2.3 குறிஞ்சி நிலத்தார் உணவு

இயற்கைச் சூழலில் வாழ்ந்து வந்த குறிஞ்சி நில மக்களது இருப்பிடத்தைப் போன்று அவர்களின் உணவு முறையும் இயற்கையில் கிடைக்கக்கூடிய பழங்கள், கிழங்குகள், தேன், வேட்டையில் கிடைக்கும் இறைச்சி வகைகள் ஆகியவையே குறிஞ்சி நிலத்தார், தினை, பழங்கள், இறைச்சி,கிழங்குகள் ஆகியவற்றை உணவாக உட்கொண்டுள்ளனர். குறிஞ்சி நில மக்களின் உணவு குறித்து “மிருகங்களின் தசையும், தினை முதலிய மலைத்தானியங்களும், கிழங்கு, பழம், தேன் முதலியனவும் ஆகும்”[22] என்று மு.சண்முகம்பிள்ளை குறிப்பிடுகின்றார். குறிஞ்சி நிலத்து மக்கள் நறு நெய்யிலே கடலையை வறுத்து, அதனோடு சோறு சமைத்து உண்டுள்ளனர்.

பழம், கிழங்கு, இறைச்சி, தினைப் போன்ற உணவு வகைகள் போலல்லாது பறம்பு மலைநாட்டினர்நெய்யிலே உணவு சமைத்து உண்ணும் வளமிக்க பகுதியில் வாழ்ந்துள்ளனர்.இவ்வாறு ஒரே நிலமாக இருந்தாலும் அவர்களுக்குள்ளே உணவின் தரம் வேறுபட்டிருந்ததை அறியமுடிகின்றது. இது அவர்கள் வசிக்கும் பகுதியை ஒட்டி அமைவனவாக இருந்தாலும் ஒரு சிலர் பழம், கிழங்குகளை மட்டும் பல நாள் உணவாக வைத்து உண்ண மற்றவர் சிறந்த வகையில் உணவு சமைத்து உண்டுள்ளனர் என்பதும் கவனிக்கத்தக்கது.

### 3.2.4 குறிஞ்சி நிலத்தாரின் தொழில்

குறிஞ்சி நிலம்,மலையும் மலை சார்ந்த பகுதி ஆதலால், அங்கு வசிக்கும் மக்களின் முக்கியத் தொழில் வேட்டையாடுதல். தேனெடுத்தல், கிழங்கெடுத்தல் உழவுத்தொழில் ஆகியவை இவர்களின் துணை தொழில்களாகக் காணப்படுகின்றன. ஆதிகால மனிதனின் முழுமுதற் தொழில் வேட்டைத் தொழில். இத்தகைய பழமையான தொழிலை மேற்கொண்டவர்களே குறிஞ்சி நில மக்கள். இவர்கள் வேட்டைக்குச் செல்லும் போது வில், அம்பு எடுத்துக் கொண்டு மலைப்பக்கம் சென்றுள்ளனா். வேட்டைக்கு நாயைத் தம்முடன் அழைத்துச் செல்லும் வழக்கமும் இருந்துள்ளது. ஆயுதங்களுடனும் நாயுடனும் செல்லும் குறிஞ்சி நில மக்கள் யானை, பன்றி, முயல், உடும்பு,மான் போன்ற விலங்குகளை வேட்டையாடியுள்ளனா். யானை புலியுடன் சேர்ந்து போர் செய்து, புண்பட்டு இருக்க, அதன் தந்தத்தைப் பெற விரும்பிய கானவர்கள் வில்லிருந்து அம்பை எய்தி யானையை வீழ்த்தியுள்ளனர். அம்பு எய்தி முள்ளம் பன்றியை வேட்டையாடி மகிழ்ச்சியுடன் இல்லத்துக்குத் திரும்பியுள்ளனர். குறிஞ்சி நிலத்தாா், யானை, பன்றி இவற்றொடு மானையும் வேட்டையாடிள்ளனர். இதனை,

> "வெட்சிக் கானத்து வேட்டுவர் ஆட்ட
> கட்சி காணாக் கடமா நல் ஏறு
> கடறு மணி கிளர சிதறு பொன் மிளிர
> கடிய கதழும்" (புற. 202:1-4)

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. வேட்டுவர் மானை வேட்டையாட எண்ணுவதைக் கண்டு அது புகலிடம் ஏதுமின்றி விரைந்தோடியுள்ளது. மேலும்,வேட்டைத் தொழில் புரிவதால் குறிஞ்சி நில மக்களை 'வேட்டுவர்' என்றும் குறிப்பிடுகின்றனர். யானை, புலி, மான், பன்றி, உடும்பு என அனைத்தையும் ஒருசேர வேட்டையாடியுள்ளனர். அவா்கள், விலங்குகளை மட்டுமல்லாது பறவைகளையும் வேட்டையாடியுள்ளனர். சில நேரம் வேட்டைக்குச் சென்று எதுவும் கிடைக்காது, வெறுங்கையோடு திரும்பி வந்துள்ளனர். இவ்வாறு குறிஞ்சி நிலத்தார் மேற்கொள்ளும் வேட்டைத் தொழிலில் பயன் அரிதாகவே கிடைத்துள்ளது.

குறிஞ்சி நில மக்கள் இயற்கைப் பின்னணியிலேயே தமது வாழ்வாதாரத்தைத் தேடியுள்ளனர். இக்கருத்தினை உறுதிப்படுத்தும் விதமாக "மலைவாணர் மலையிலுள்ள மரங்களை அழித்து அங்கே ஐவனம்

(மலைநெல்), தினை முதலியவற்றை விதைத்து அருவி நீர் பாய்ச்சி விளைவிப்பார்கள்”[23] என்ற வெள்ளை வாராணர் கூற்றும் கவனிக்கத்தக்கது. பயிர் வகைகளை விதைத்து காவல் காக்கும் தொழிலையும் மேற்கொண்டுள்ளனர். வேட்டைத்தொழில், உழவுத்தொழில், காவல் தொழில் மட்டுமல்லாது தேனெடுத்தல், கிழங்கு எடுத்தல் போன்ற பணிகளிலும் இவர்கள் ஈடுபட்டுள்ளனர். மேலும், “வள்ளிக்கிழங்கு முதலியவற்றை அகழ்ந்தெடுத்தலும் மரத்தின் உச்சியில் தொங்கும் தேனடைகளை அழித்துத் தேனெடுத்தலும் மான் முதலிய விலங்கினங்களை வேட்டையாடுதலும் இம்மலை வாணர்க்குரிய தொழில்களாகும்”[24] எனக் க.வெள்ளைவாரணன் தமது நூலில் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. இவ்வாறு இயற்கையில் கிடைத்த பொருளைக் கொண்டு உண்டு, இருப்பிடம் அமைத்து,தங்களால் இயன்ற தொழில்களில் ஈடுபட்டு எளிய வாழ்வு வாழ்ந்தவர்களாகக் குறிஞ்சி நில மக்கள் இருந்துள்ளமையை அறிய முடிகின்றது. மேலும், எளிய வாழ்வை மேற்கொண்ட குறவர் குறத்தியர், கானவர், கொடிச்சியர், புனவன், குன்றவர் என்று அழைக்கப்பட்ட குறிஞ்சி நில மக்களுள் தலைமைப் பண்பு வகிப்பவர்களாக நாடன், வெற்பன், சிலம்பன் ஆகியோர் காணப்படுகின்றனர்.

### 3.2.5 குறிஞ்சி நிலத் தலைவர்கள்

குறிஞ்சி நிலப் பகுதிகளை ஆட்சி புரிந்தவர்களாகக் கடையெழு வள்ளல்களும் குறுநில மன்னர்களும் குறிப்பிடப்பெற்றுள்ளனர்.

#### 3.2.5.1 பாரி

சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பெறும் கடையெழு வள்ளல்களில் ஒருவர் பாரி. கபிலரை ஆதரித்தவர். இவர் பறம்பு மலையை ஆண்டு வந்துள்ளார். இதனை, “கடையெழு வள்ளல்களிலொருவன் முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்பு மலைக்கும் தலைவன்முல்லைக் கொடிக்குத் தேர்கொடுத்தோன்”[25] என உ.வே.சா பதிப்புரையிலும் “பாரி என்ற வள்ளல் வெள்ளிய அருவி குதிக்கும் பக்கத்தையுடைய பறம்பு மலைக்கு அரசன்”[26] என்பதை இராமாணிக்கனாரும் தமது நூலில் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. பாரி பறம்பு மலைக்குரியவன் என்பதை,

> “கறங்கு வெள் அருவி கல் அலைத்து ஒழுகும்
> பறம்பின் கோமான் பாரி” (புற.158:3-4)

“கலை உணக் கிழிந்த முழவு மருள் பெரும்பழம்
சிலை கெழு குறவர்க்கு அல்கு மிசைவு ஆகும்
மலை கெழு நாட மா வண் பாரி” (புற. 236: 1-3)

என்ற பாடல் அடிகளாலும் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், பாரியின் பறம்பு மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகியவை மலையில் உழாது விளைவதாகப் புறப்பாடலொன்று (புற.109:1,3-9) குறிப்பிடுகின்றது.

### 3.2.5.2 பேகன்

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பேகனும் குறிஞ்சி மலை நாட்டிற்குத் தலைவனாக இருந்துள்ளான். இதனை, “பேகன் பெரிய மலை நாட்டை உடையவன், ஆவியர் குடியிற் பிறந்தவன்”[27] என இராமாணிக்கனார் குறிப்பிடுவதைக் காணலாம். மேலும்

“மலை வான் கொள்க என உயிர் பலி தூஉய்
மாரி ஆன்று மழை மேக்கு உயர்க எனக்
கடவுட் பெணிய குறவர் மாக்கள்
பெயல் கண் மாறிய உவகையர் சாரற்
புனத்தினை அயிலும் நாட சினப் போர்க்
கைவள் ஈகைக் கடுமான் பேக” (புற.143:1-6)

என, பேகன் மலை நாட்டிற்குரியவன் என்பதை இப்பாடல் குறிப்பிடுகின்றது. அதில் குறவர் மாக்கள் மழை வேண்டி பலி தூவி மழையைப் பெய்வித்தலையும் மழை மிகுதியாகப் பெய்தால் அதை நிறுத்தவும் செய்துள்ளனர். இத்தகைய நிகழ்வால் மனமகிழ்ந்த குறவர்கள் தினையை உண்ணுவதற்கு இடனாக அமையும் மலைநாட்டையுடையவன் பேகன் என்பதைப் பாடல் அடிகளில் குறிப்பிடுகின்றன.

### 3.2.5.3 ஓரி

கொல்லி மலைக்குத் தலைவனாகவும் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகவும் இருந்த ஓரி வில்லாற்றலில் வல்லவனாக இருந்துள்ளான். இவன் கொல்லி மலைக்குத் தலைவன் என்பதை

“வல்வில் ஓரி கொல்லிக் குடவரை” (குறு.100:5)
“அடு போர் ஆனா ஆதன் ஓரி
மாரி வண் கொடை” (புற.153:4-5)
“ஆரம் தாழ்ந்த பகட்டு மார்பின்
சாரல் அருவிப் பய மலைக் கிழவன்
ஓரி…………………………” (புற.152: 10-12)

எனும் பாடல் அடிகளும் உறுதிப்படுத்துகின்றன.

### 3.2.5.4 ஆய் அண்டிரன்

அண்டிரன் என்பது இயற்பெயர் என்றும் ஆய் என்பது குடிப்பெயர் என்றும் உரையாசிரியர்கள் கூறுவர். பொதியின் மலைக்குத் தலைவன் ஆய் அண்டிரன் ஆவான். இக்கூற்றை உ.வே.சா “கடையெழு வள்ளல்களில் ஒருவன். சிறந்த வீரன். பொதியின் மலைத்தலைவன் அதனருகேயுள்ள ஆய்குடி என்பது இவனுடைய ஊர். ஆய் அண்டிரனென்றும் அண்டிரனென்றும் இவனுடைய பெயர் வழங்கும்”[28] எனக் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. ஆய் அண்டிரன் குறிஞ்சி நிலத் தலைவன் என்பதை,

‘‘தீம்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅய் அண்டிரன்” (புற.129:4-5)

“மழைக்கணம் சேக்கும் மா மலைக் கிழவன்
வாழைப் பூங் கண்ணி வாய் வாள் அண்டிரன்” (புற.131:1-2)

ஆகிய புறப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

### 3.2.5.5 நள்ளி

நள்ளி என்பவன் தோட்டி மலை அதனைச் சூழ்ந்துள்ள பகுதிகளை ஆண்டவனாகக் குறிப்பிடப்படுகிறான். தோட்டிமலையை ஆண்டுள்ளவன் நள்ளி என்பதை,

“கறங்கு மிசை அருவிய பிறங்கு மலை நள்ளி”
“இரும்பு புனைந்து இயற்றாப் பெரும் பெயர்த்தோட்டி
அம்மலை காக்கும் அணி நெடுங்குன்றின்
பளிங்கு வகுத்தன்ன தீம் நீர்
நளிமலை நாடன் நள்ளி அவன்” (புற.150:25-28)

என்ற பாடலடிகள் குறிப்பிடுவதைக் காணலாம். “இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். தோட்டியென்னும் மலைக்கும் அதனைச் சார்ந்த மலை நாட்டிற்கும் காட்டு நாட்டிற்கும் தலைவன் என்றும் இவன் பெயர் கண்டிற் கோப்பெருநள்ளியெனவும் நள்ளியெனவும் கண்டிற்கோப்பெருநற்கிள்ளி எனவும் பிரதியிற் காணப்படும்”[29] என உ.வே.சா. குறிப்பிடுகின்றார். இதன்மூலம் நள்ளி பல பெயர்களால் அழைக்கப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது.

### 3.2.5.6 நாஞ்சில் வள்ளுவன்

குறிஞ்சிமலையை ஆண்டவன் நாஞ்சில் வள்ளுவன் ஆவான். “இவன் நாஞ்சில் மலையையுடையவன். சேரனிடத்து அன்புற்று அவனுக்குப்

படைத்துணையாய் நின்றோன். பரிசிலர்க்கு வேண்டியவற்றைக் கொடுப்போன்”[30] என உ.வே.சா குறிப்பிடுகின்றார்.

“மணி அன்ன நீர் கடற் படரும்
செவ் வரைப் படப்பை நாஞ்சில் பொருந
சிறு வெள் அருவிப் பெருங்கல் நாடனை” (புற.137:11-13)

எனும் பாடலில் பள்ளத்தில் விதைத்த விதை கரும்பு போலத் தழைத்துள்ளது. கோடைகாலமாயினும் குவளைமலர் பூத்திருக்கிறது. வேங்கை மலரைச் சேர்த்திழுத்து, கடலில் நீர் கலந்துள்ளது. அத்தகைய வளம் பொருந்திய அருவியையுடைய மலைநாடனாக நாஞ்சில் வள்ளுவன் இருந்துள்ளமை புலனாகின்றது.

### 3.2.5.7 ஏறைக்கோன்

“சிலை செல மலர்ந்த மார்பின் கொலை வேல்
கோடற்கண்ணி குறவர் பெருமகன்
…………
இரும்புலிப் புகர்ப் போத்து ஓர்க்கும்
பெருங்கல் நாடன் எம் ஏறைக்குத் தகுமே” (புற.157:6-13)

எனும் பாடலில் குறிஞ்சி நிலத் தலைவராக ஏறைக்கோன் குறிப்பிடப்படுகிறான். கொல்லும் வேலையும் காந்தள் பூக் கண்ணியையும் உடையவன். குறவருக்குத் தலைவன் என்றும் கலைமான் பெண்மானை அழைக்கும் மலைக்குரியவராக ஏறைக்கோன் இருந்துள்ளதையும் இப்பாடல் குறிப்பிடுகின்றது. மேலும், “ஏறைக்கோன் குறவர்கள் தலைவன், காந்தட் பூமாலையை அணிவோன், மலைநாட்டை ஆள்வோன், நற்குண நற்செய்கையை உடையவன்”[31] என ஏறைக்கோன் பற்றி உ.வே.சா குறிப்பிட்டுள்ளார்.

### 3.2.5.8 குமணன்

கடையெழு வள்ளல்களில் காலத்தால் பிற்பட்டவன் குமணன். முதிர மலையை ஆண்டவன். “குமணன் மிக்க கொடையாளி, முதிரமென்னும் மலைக்குத் தலைவன். இவன் காலம் கடையெழு வள்ளல்களின் பிற்காலம்”[32] எனக் குறிப்பிடுகின்றார் உ.வே.சா.

“முட்புற முது கனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்
அதிரா யாணர் முதிரத்துக் கிழவ” (புற.158: 23-25)

வானத்தைப் பொருந்தும்படி மூங்கில் வளர்ந்த மலையில், பலா மரத்தைக் கண்ட ஆண்குரங்கு கையால் குறிசெய்து பெண் குரங்கை அழைக்கும்

அத்தகைய புதுவருவாயுடைய முதிரம் என்னும் மலைக்குத் தலைவன் என்பதை,

"பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்து வேல் குமணன்"(புற.163:8-9)

எனும் பாடல் குறிப்பிடுகிறது.

### 3.2.5.9 பிட்டங்கொற்றன்

வலிய நிலமாகிய மலைநாட்டை ஆண்டுள்ளான். "இவன் குதிரை மலைத்தலைவன் சேரனுடைய சேனாதிபதி, மிக்க கொடையாளிகளுள் ஒருவன். இவன் பெயர் பிட்டனெனவும் வழங்கும்"[33] என உ.வே.சா குறிப்பிட்டுள்ளார்.

''கூதளம் கவினிய குளவி முன்றில்
செழுங்கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்
ஊராக் குதிரைக் கிழவ" (புற.168:6-14)

என்ற பாடலில் உழாது விளைந்த தினையை, மானிறைச்சி சமைத்த புலால் நாறும் பானையிலே மரையாவின் பாலை உலை நீராக வார்த்து, சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்துள்ளனர். அதை மலை மல்லிகை நாறும் முற்றத்தில் வாழை இலையிலே பகுத்து உண்டுள்ளனர். அத்தகைய வளமுடைய உரப்படாத குதிரை என்னும் மலைக்குத் தலைவன். மேலும், கூரிய வேலையும் வேங்கைப் பூ மாலையையும் அம்பையும் உடைய வில் வீரர்களுக்குத் தலைவன் கைவண்மையும் கடிய குதிரையையுடைய கொற்றன் என்பதை புறப்பாடலும் (168:15-18) குறிப்பிடுகின்றது.

### 3.2.5.10 ஆதனுங்கன்

வேங்கடமலைக்குத் தலைவன் ஆதனுங்கன். இதனை,

"கல் இழி அருவி வேங்கடம் கிழவோன்
செல்வுழி எழாஅ நல்ஏர் முதியன்
ஆதனுங்கன் " (புற.389: 9-13)

என்ற பாடலடிகள் குறிப்பிடுவதைக் காணலாம். மேலும் "இவன் கொடையாளிகளுள் ஒருவன். வேங்கடமலையின் தலைவன்"[34] என்பதை உ.வே.சாவும் குறிப்பிட்டுள்ளார்.

### 3.2.5.11 திதியன்

பொதியமலையை ஆண்டவனாகத் திதியன் குறிப்பிடப்படுகின்றான்.

"செல்சமம் கடந்த வில் கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்' (அக.25: 19-20)

என்ற அடிகள் அதனை உறுதிபடுத்தும்.

### 3.2.5.12 புல்லி

புல்லி என்பவன் வேங்கடமலையை ஆண்டவன். இதனை,

‘‘மழபுலம் வணக்கிய மா வண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்” (அக.61:12-13)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. புல்லி வேங்கடமலைக்குரியவன் மேலும் “புல்லி ஓர் உபகாரி வேங்கடமலை இவனுக்கு உரியது”[35] என உ.வே.சா. குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

### 3.2.5.13 தொண்டையர்

தொண்டையருக்கு வேங்கடமலை உரியதாக அகப்பாடல் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

“வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்று அரு நெடுங்கோட்டு
ஓங்குவெள் அருவி வேங்கடத்து உம்பர்” (அக.213:1-3)

என்ற அடிகளால் அறியலாம்.

### 3.2.5.14 ஆவி

வேளிர் குலத்தைச் சார்ந்தவன் ஆவி, இவன் பொதினி மலையை ஆண்டவனாகக் குறிப்பிடப்படுகின்றான். இதனை,

“முழவுஉறழ் தினி தோள் நெடு வேள் ஆவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி” (அக.61:15-16)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

### 3.2.5.15 நன்னன்

இவன் ஏழில் குன்றத்தை ஆண்டவன் இதனை,

“சூழாது சுரக்கும் நன்னன் நல்நாட்டு
ஏழிற் குன்றத்து” (அக.349: 8-9)

என்ற அகப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. சேரமான் வஞ்சன் என்பவன் பாயல் என்னும் மலையை ஆண்டுள்ளதாகப் புறநானூற்றின் 398 ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. குறிஞ்சி நிலத் தலைவனாக வெற்பன், நாடன், சிலம்பன் மட்டுமல்லாது பாரி, பேகன். குமணன், ஓரி, நாஞ்சில் வள்ளுவன், நள்ளி, நன்னன், ஆய் அண்டிரன், தொண்டையர், திதியன், புல்லி, பிட்டங்கொற்றன், ஏறைக்கோன், ஆதனுங்கன் போன்றவர்களும் தலைவர்களாக இருந்து ஆட்சி புரிந்துள்ளமையை அறியமுடிகின்றது.

### 3.3 முல்லை நிலம்

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை எனப்பட்டது. இது மேய்ச்சலுக்குரியப் பகுதியாகக் கூறப்படுகிறது. “காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலம் எனப்படும். இங்குக்காடு என்பது குறிஞ்சி நிலக்காடு போன்ற மரச்செறிவுடைய காடன்று. ‘இளங்காடு’ என்று சொல்லத்தகும் முறையில் அமைந்த நிலப்பகுதியாகும். இங்கு ஆடுமாடுகளின் மேய்ச்சலுக்குரிய புல் வெளிகள் நிறைந்திருந்தன”[36] என்ற இராசமாணிக்கனார் கூற்று. முல்லை நிலம் காடு சார்ந்த பகுதியாகவும் மேய்ச்சலுக்குரியதாகவும் இருந்துள்ளமைக்குச் சான்றாகின்றது.

### 3.6.1 முல்லை நில மக்கள்

முல்லை நிலப்பகுதியில் மேய்ச்சலுக்கான சூழல் இயல்பாகவே அமைந்துள்ளதால் அங்குள்ள மக்கள் ஆடு மாடு வளர்த்தலை முக்கியத் தொழிலாகக் கொண்டுவாழ்ந்துள்ளனர். அவர்களை ஆயர், இடையர், கோவலர், அண்டர், பொதுவர் என்ற பெயர்களால் அழைத்துள்ளனர். இதனை,

“அறவை நெஞ்சத்து ஆயர்” (புற.390:1)
“நல்லினத்து ஆயர்” (கலி.104:6)
“கடிகொள் இருங்காப்பில் புல்லினத்து ஆயர்” (கலி.110:1)
“மறித்துரூஉத் தொகுத்த பறிப் புற இடையன்” (அக.94:4-5)
“தண்டுகால் ஊன்றிய தனிநிலை இடையன்” (அக.274:8)
“பறிப்புறத்து இட்ட பால் நொடை இடையன்” (நற்.142:4)
“ஆடுதலைத் துருவின் தோடு தலைப்பெயர்க்கும்
வன்கை இடையன்” (நற்.169: 6-7)
“மாசு உண் உடுக்கை மடிவாய் இடையன்” (புற.54:11)
“மதர்வை நல் ஆன் மாசு இல் தெண்மணி
கொடுங்கோல் கோவலர் குழலோடு ஒன்றி” (நற்.69: 7-8)
“பல் ஆன் கோவலர்” (குறு.358: 6)
“பல் ஆன் பொதுவர்” (கலி.103:5)
“கல்லாப் பொதுவனை” (கலி.112:3)
“கானத்து அண்டர்
பல் ஆ பயந்த நெய்யின்” (குறு.210:1-2)

என்னும் பாடலடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இத்தகைய காடு சார்ந்த பகுதிகளில் வாழ்ந்து வந்த முல்லை நில மக்கள் எளிய முறையில் குடிசை அமைத்து வாழ்ந்துள்ளனர்.

“குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் நிலைய பாக்கமும் உடைத்தே” (ஐங்.439:2-3)

எனும் பாடல் முல்லைநில மக்களாகிய கோவலர் வாழ்ந்த பகுதி 'பாக்கம்' என அமைக்கப்பட்டதைச் சுட்டுகிறது.

### 3.3.1 முல்லை நிலத்தார் உணவு

தமது நிலத்தில் கிடைத்த பொருள்களையே முக்கிய உணவுப் பொருளாக உண்டு வாழ்ந்துள்ளனர். அவ்வகையில் முல்லை நிலத்து மக்கள் தாம் விளைவித்த வரகு, தினை இவற்றையே பெரிதும் உண்டு வாழ்ந்துள்ளனர். அவற்றையும்அவர்கள் தயாரிக்கும் தயிர், வெண்ணெய் இவற்றோடு கலந்து உண்டுள்ளனா் என்பதைப் புறநானூற்றுப்பாடல் (215:1-4) குறிப்பிடுகின்றது. இவர்கள் வரகு. தினை, வேளைப் பூவைத் தயிரோடு கலந்து புளித்த கூழோடு இறைச்சித் துண்டுகளைச் சேர்த்து உண்டுள்ளனா். வரகை உலக்கையால் குற்றிப்பதமாக்கிச் சுனை நீரால் உலையேற்றி அடுப்பு மூட்டி சமைத்து உண்டுள்ளனா். இதனோடு தயிரை உலை நீராக்கி வரகரிசியோடு, ஈசலையும் அதிலிட்டு வெண்ணெய் ஊற்றிச் சமைத்த புளிப்புடைய உணவை உண்டுள்ளனா் என மூங்கில் குழாயில் அடைத்து வைத்த புளிச் சோற்றையும் உண்டுள்ளனர் என்று அகநானூறு (393:9-17) குறிப்பிடுகின்றது. இவ்வாறு வரகு, தினை, பால், தயிர், வெண்ணெய் சேர்த்த உணவையே பெரும்பாலும் உண்டு வாழ்ந்துள்ளனர். மேலும், மேய்ச்சல் தொழிலுக்குச் செல்லும் பொழுது மூங்கில் குழாயினுள் உணவை அடைத்துக் கொண்டு சென்றுள்ளதையும் அறிய முடிகின்றது. "புனத்தை உழுது விளைவிக்கும் வரகு முதலியன இந்நிலத்தவர்க்குரிய உணவுகளாம்"[37] எனக் க.வெள்ளைவாரணா் குறிப்பிட்டிருப்பது மேற்கூறியவற்றை உறுதிப்படுத்தும். இவற்றைநோக்க, தங்களது நிலச்சூழலுக்கேற்ப தங்களுக்குக் கிடைத்த உணவை முல்லை நிலமக்கள் உண்டு வாழ்ந்துள்ளனா்.

### 3.3.2 முல்லை நிலத்தார் தொழில்

முல்லை நிலப்பகுதி மேய்ச்சல் நிலம் ஆதலால் அங்குள்ள மக்கள் கால்நடை மேய்த்தலில் ஈடுபட்டுள்ளனா். ஆடு, மாடுகளை பசுமை நிலங்களுக்கு ஓட்டிச் சென்று மேய வைத்தல், இரவில் ஆடு மாடுகளை விலங்கினங்கள் எதுவும் அணுகாதவாறு பாதுகாத்தல், மழைக்காலங்களில் பிற நிலங்களுக்கு ஓட்டிச் சென்று பாதுகாத்தல், இலை, தழைகள் கொடுத்து மேயவிடுதல், பின்பு மாலையில் பாதுகாப்பாக வீட்டிற்கு அழைத்து வருதல் என இவர்களின் வாழ்க்கை முழுவதும் ஆடுமாடுகளையே நம்பி

இருந்துள்ளது. அகன்ற மேய்ச்சல் நிலங்களில் ஆடுமாடுகளை மேய்க்கும் முல்லை நிலத்து மக்களை,

“வியன்புலம் படர்ந்த பல்ஆ நெடு ஏறு
மடலை மாண் நிழல் அசைவிட கோவலர்” (புற.339:1-2)

“………………. சிறு செந்நாவின்
ஈர் மணி இன்குரல் ஊர் நணி இயம்ப
புல் ஆ தந்த கல்லாக் கோவலர்” (நற்.364: 7-9)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் கையில் கோல் தாங்கி, வீளை ஒலியெழுப்பி தங்களது ஆநிரைகளை வேறு இடங்களில் திரியாதபடி மேய்த்துள்ளனர். மேலும், கோடைக்காலத்தில் ஆநிரைகளின் பசி போக்க எண்ணிக் கோவலர்கள் வேங்கை மரக் கிளைகளை வெட்டி ஆநிரைகளை வயிறார உண்ணும்படி செய்து மாலை நேரம் ஆனதும் வீட்டிற்குத் திரும்பவும் அழைத்து வந்துள்ளனர். மேலும், இரவில் பிற விலங்கினங்களால் ஆபத்து நேராது தீ உருவாக்கிப் பாதுகாத்துள்ளனர். இவ்வாறு இடையர்கள் ஆநிரைகளை மேய்ப்பது, பாதுகாப்பது என ஆநிரைகளோடு இவர்களின் வாழ்க்கைமுறை நகர்ந்து சென்றுள்ளது. மேலும் “ஆடு மாடுகளை மேய்த்து வாழும் வாழ்க்கையர் ஆயர்களாவர் இவர்கள் காடு சார்ந்த பகுதியில் வாழ்ந்தனர்”38 எனும் அ.தட்சிணாமூர்த்தி கூற்றும்நோக்கத்தக்கது.

### 3.3.3 முல்லை நிலப் பெண்களின் தொழில்

முல்லை நிலத்தில் ஆண்கள் மட்டுமல்லாது பெண்களும் தம்மால் இயன்ற பணிகளைச் செய்து வந்துள்ளனர். ஆநிரைகளிலிருந்து கிடைக்கக்கூடிய பால் கொண்டு தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், மோர் தயாரித்து விற்றல் போன்ற பணிகளைச் செய்துள்ளனர்.

முல்லை நிலப் பெண்கள் விடியற்காலையில் எழுந்து மத்துக் கொண்டு தயிர் கடைந்துள்ளனர். மேலும், வெண்ணெய் வெளியேறும் வரை இவர்கள் தயிர் கடைந்துள்ளமையை நற்றிணைக் குறிப்பிடுகின்றது. ஆய்ச்சியர் மோர் தயாரித்து அதனைத் தலையில் வைத்துக் கைகளை வீசிப், பிற நிலங்களுக்குக் கொண்டு சென்று விற்று வந்துள்ளனர். மோரை விற்று அதற்கு ஈடாக நெல்லைப் பெற்று வந்துள்ளனர்.

இம்முல்லை நிலத்து மக்கள் ஆநிரை மேய்த்தலோடு உழவுத் தொழிலையும் மேற்கொண்டு வாழ்ந்துள்ளனர். என்பதனை நற்றிணையும் (121:1-3) அகநானூறும் (393:4-10) குறிப்பிடுகின்றன. இங்கு வரகு விதைத்து

அவற்றைப் பாறையில் குவித்து, திரிகையில் திருகி, சுளகினால் புடைத்து அரிசியாக்கியுள்ளனர். இவற்றை நோக்க முல்லை நிலத்து மக்களின் உணவுப் பொருட்களுள் முக்கியமானவை வரகும், தினையும் இவற்றை அவர்கள் உழுது விளைவித்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவற்றை நோக்க, இவர்கள் இருக்கும் பகுதியில் நெல் விளைவிக்க முடியாது. வரகு, தினை போன்றவை தான் விளைவிக்க முடியும் என்பதனை அறிந்து வாழ்ந்துள்ளனா். மேலும், முல்லை நில மக்கள் ஆநிரை மேய்த்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டதோடு பயிரிடுந் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனா். ஆநிரை மேய்ப்பவர்கள் அல்லாத சிலர் இத்தகைய பயிரிடுந் தொழிலைச் செய்திருப்பார். ஆநிரை மேய்ப்பவர்களே பல பிரிவுகளாக இருந்துள்ளதை கலித்தொகைக் குறிப்பிடுகின்றது.

> "புல்லினத்து ஆயர் மகனேன் மற்றுயான்
> ஒக்குமன்
> புல்லினத்து ஆயனை நீ ஆயின் குடம் சுட்டு
> நல்லினத்து ஆயர் எமர்" (கலி.113: 7-10)

எனும் அடிகளும்

> "……….. குறும்பு இவர்
> புல்லினத்தார்க்கும் குடம் சுட்டவர்க்கும் எம்
> கொல் ஏறு கோடல் குறை என கோவினத்தார்
> பல் ஏறு பெய்தார் தொழுஉ
> தொழுவத்து" (கலி.107: 1-5)

என்னும் அடிகளும் ஆடுகளை மேய்ப்பவர் ஆட்டிடையர், மாடுகளை மேய்ப்பவர் மாட்டிடையர் என்று குறிப்பிடுகின்றன. மேலும், இரு பிரிவுகள் இருந்துள்ளமைக்குக் கலித்தொகையின் மற்றொரு பாடலும் சான்றளிக்கின்றது.

> "தீம்பால் கறந்த கலம்மாற்றிக் கன்று எல்லாம்
> தாம்பின் பிணித்து மனை நிறீஇ யாய் தந்த
> பூங்கரை நீலம் புடை தாழ மெய் அசைஇ பாங்கரும்
> முல்லையும் தாய பாட்டங்கால் தோழி நம்
> புல்லினத்து ஆயர் மகளிரொடு எல்லாம்
> ஒருங்கு விளையாட" (கலி.111: 1-6)

இப்பாடல் மாட்டிடையர் மகளிர் ஆட்டினத்து மகளிரோடு விளையாடியுள்ளனர் எனக் கூறி இரு பிரிவினர் இருந்துள்ளமையைத் தெளிவுபடுத்துகின்றது. இவர்களுக்குள்ளே எருமை மேய்க்கின்ற இடையரும் இருந்திருக்கின்றனர். இவர்கள் குறித்துப் பெரும்பான்மையாய் பேசப்படவில்லையெனினும் இவர்கள் தனிப்பிரிவினராக இருந்திருப்பது தெரிகிறது. மேலும், ஆநிரைகளை

மேய்க்கும் ‘பொதுவர்’ எனப் பெயர்பெறும் இடையர்கள் ஏறுகளை அடக்கச் சென்றுள்ளனர்.

ஏறுகளை அடக்க வருபவர்கள் கொன்றை, காயா, வெட்சி, பிடா, முல்லை, குல்லை, குருந்து, கோடல், பாங்கர் முதலிய மலர்களாலான கண்ணிகளைச் சூடியவர்களாக வந்துள்ளனர் எனக் கலித்தொகைப் பாடல் (103:1-5)குறிப்பிடுகின்றது. இவ்வாறு கண்ணிகளைச் சூடிய இடையர்கள் வர ஏறுகளைத் தொழுவத்தில் புக விட்டுள்ளமையை கலித்தொகை 103: (11-17, 22-23) - 105 பாடல்கள் குறிப்பிடுகின்றன. மேலும், பசுக்களை உடைய ஆயர் மகன் ஏறுதழுவுதலில் ஈடுபட்டுள்ளான். இதனை,

“கோவினத்து ஆயர்மகன் அன்றே ஓவான்
மறை ஏற்றின் மேல் இருந்து ஆடி துறை அம்பி
ஊர்வான் போல் தோன்றுமவன்” (கலி.103:37-39)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. எனவே சங்க காலத்தில் திணைமக்கள் தொழில் அடிப்படையில் பலப் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்ததை அறியமுடிகின்றது. இவ்வாறு ஆடுகளை மேய்ப்பவர், மாடுகளை மேய்ப்பவர் என்ற பாகுபாடோ அவர்களுக்குத் தனிப்பெயரிட்டு அழைக்கும் முறையோபிற இலக்கியங்களில் காணப்படவில்லை. ஆனால் கலித்தொகையில் குறிப்பிட்டிருப்பதைக் கொண்டு இத்தகைய பிரிவுகள் சங்க காலத்தில் இருந்திருப்பதற்கு வாய்ப்புள்ளது. இவற்றை நோக்க ஒரே நிலத்துக்குள், செய்யும் தொழிலின் அடிப்படையில் பாகுபாடு இருந்துள்ளது. பலப் பிரிவுகளாக மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. மேலும், இம்முல்லை நிலத்தை ஆண்டவர்களாகச் சிலர் குறிப்பிடப்படுகின்றனர்.

### 3.3.4 முல்லை நிலத் தலைவா்கள்

முல்லை நிலப் பகுதிகளை ஆண்டவா்களைப் பின்வருமாறு ஆராயலாம்.

#### 3.3.4.1 பெருஞ்சேரல் இரும்பொறை

‘‘கானக நாடனை’’ (புற.5:3)

என்ற அடிகள் பெருஞ்சேரல் இரும்பொறை கானகத்து நாட்டினை ஆண்டவன் எனக் குறிப்பிடுகின்றது.

#### 3.3.4.2 அவியன்

“கான்கெழு நாடன் கடுந்தேர் அவியன்” (புற.383:21)

எனும் அடிகளில் அவியன், கன்றுகள் பலவாக நிறைந்துள்ள நாட்டினை உடையவன் எனப் புறப்பாடல் குறிப்பிடுகின்றது.

#### 3.3.4.3 நள்ளி

"திண்தேர் நள்ளி கானத்து அண்டர்'' (குறு.210:2)

நள்ளி என்பானும் இடையர்களுக்குரியத் தலைவனாக இருந்துள்ளதைக் குறுந்தொகைப் பாடலொன்று குறிப்பிடுகின்றது. மேலும், வி.நாகராசன் அவர்களும் தமது உரையில் "நள்ளி கடையெழு வள்ளல்களுள் ஒருவன். கண்டிரக் கோப்பெருநள்ளி என்றும் கூறப்பெறுவன். தோட்டி மலைக்குத் தலைவன் விருந்தோம்புவதில் சிறந்தவன். இவன் நாட்டில் ஆநிரைகள் மிக்கு இருந்தன"[39] எனக் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

#### 3.3.4.4 கழுவுள்

''ஆன் பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்க" (பதி.7:13-17)

எனும் அடி கழுவுள் இடையருக்குத் தலைவனாக இருந்துள்ளதைக் குறிப்பிடுகின்றது.

#### 3.3.4.5 பல்யானை செல்கெழுகுட்டுவன்

"முல்லைக் கண்ணிப் பல் ஆன் கோவலர்
புல்லுடை வியன்புலம் பல் ஆ பரப்பி
கல் உயர் கடத்திடைக் கதிர் மணி பெறூஉம்
மிதி அல் செருப்பின் பூழியர் கோவே" (பதி.21:20-24)

எனும் அடிகளில் கால்நடைகளை மேய்த்து வாழும் பூழியர் இனத்தவர்க்குத் தலைவனாகச் செல்கெழு குட்டுவன் விளங்கியுள்ளதைக் குறிப்பிடுகின்றது. மேலும்,ஆடு மாடுகளை மேய்பவருக்குத் தலைவனாகப் பல்யானை செல்கெழு குட்டுவன் என்பவனும் இருந்துள்ளான். இவ்வாறு முல்லை நிலத்தை ஆண்டவர்களாக மக்களுக்குத் தலைவர்களாகப் பெருஞ்சேரல் இரும்பொறை, செல்கெழு குட்டுவன், அவியன், நள்ளி, கழுவுள் போன்றோர் வாழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. மேலும், திணைசார் மக்களுக்குத் தலைவர்களாகச் சிலர் குறிப்பிடப்பட்டிருப்பதைச் சங்கப் பாடல்களால் அறியலாம்.

### 3.4 மருத நிலம்

வயலும் வயல் சார்ந்த இடமும் 'மருதம்' இந்த நிலப்பகுதி பெரும்பாலும் ஆற்றங்கரைகளை ஒட்டியும் குளம், குட்டைகளை அடுத்தும்

அமைந்துள்ளது. இதனை, “ஆற்றின் ஓரங்களில் இருந்த சமவெளி நிலம் மருதம் எனப்பட்டது. நீர்வளம் மிக்க நிலப்பகுதியாக மருதம் அமைந்திருந்ததால் இங்கே வேளாண்மை செழித்தோங்கியது”[40] என அ.பாண்டுரங்கன் அவர்களும் “வயலும் வயலைச் சார்ந்த இடமும் மருதம் எனப்படும். இந்த நிலம் நீர் வளத்தால் சிறந்தது. நெல், கரும்பு, புகையிலை முதலிய உயரிய பயிர்கள் நன்கு பயிராகும் நிலம்”[41] என்று இராசமாணிக்கனார் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. இவர்களின் கூற்றுப்படி நீர்வளம் மிக்க நிலப்பகுதியாக வேளாண்மை செய்வதற்கு ஏற்ற நிலமாக மருத நிலம் விளங்கியுள்ளமை தெளிவு.

### 3.4.1 மருத நில மக்கள்

மருத நிலம் நீர் வளமிக்கப் பகுதியாதலால் அங்குள்ள மக்கள் உழவுத்தொழில் எனப்படும் வேளாண்மை செய்து வாழ்ந்துள்ளனர். அவர்களை உழவர், கடையர் என்றும் பெண்களை உழத்தியர், கடைசியர் என்றும் அழைத்துள்ளனர். மேலும் உழவுத் தொழில் தொடர்பான பணிகளைச் செய்யும் இவர்களுக்குக் களமர், தொழுவர், அரிநர், வினைஞர் எனப் பலவாறு பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனை, “இந்நிலத்து குடிமக்கள் உழவர், களமர், கடையர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் உழத்தியர், கடைசியர் எனப்பட்டனர்”[42] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. இதனைப் பின்வரும் பாடல் வரிகளும் மெய்ப்பிக்கும்

“கழனி உழவர்” (புற.13:11)
“கலி மகிழ் உழவர்” (அக.37:2)
“வன்கை வினைஞர்” (புற.61:8)
“……. எருது எறி களமர்” (நற்.125:9)
“கள் ஆர் களமர்” (அக.366:3)
“களமர்க்கு அரித்த விளையல்” (புற.212:2)
“நெல் அரி தொழுவர்” (நற்.195:6)
“செந்நெல் அரிநர்” (நற்.275:1)
“அரிநர் கொய்வாள் மடங்க” (பதி.19:22)
“வெண்ணெல் அரிநர்” (புற.348:1)

மேலும், வேளாண்மை தொழில் செய்த உழவர்கள் ‘வேளாளர்கள்’ என அழைக்கப்பட்டனர். இவர்களுள் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் எனும் இரு பிரிவினர் இருந்துள்ளதையும் காணமுடிகின்றது. “வேளாளரின் சிறந்த பண்பு விருந்தோம்பல் அதனாலேயே

உழவன் வேளாளன் எனப்பெற்றான். உழவுத் தொழிலும் வேளாண்மை எனப்பெற்றது"[43] என்று தேவநேயப்பாவாணர் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

"விளைவதை வினைஎவன் மென்புல வன்புலக்
களமர் உழவர் கடி மறுகு பிறசார்" (பரி.திர.1:26-27)

எனும் அடிகளில் இருபிரிவுகளான வேளாளர்களைக் குறிப்பிடுகின்றது. இதனை, "உழவர்களில் நிலத்தை உழுவோரும் உழுவித்து உண்போரும் என இரு பிரிவுகள் தோன்றின. நில உடைமையாளர்களான கிழார்கள் உழுவித்து உண்போராயினர். அவர்களின் நிலங்களில் உழுது பயிரிட்டு ஊழியம் செய்தோர் உழுவோர் எனப்பெற்றனர்"[44] என்றும் அ.பாண்டுரங்கன் கூற்றும் மற்றும், "வேளாளர்களில் உழுதுண்போர் என்ற பிரிவினர் சிறு நில விவசாயிகளாகத் திகழ்ந்தனர். உழுவித்துண்போர் கீழ் இருந்த வினைவலர்கள் எனப்பட்ட பணியாளர்கள் அதாவது உழுதுண்ட வேளாளர்கள் கீழ்மக்களாகக் கருதப்பட்டுள்ளனர்"[45] எனும் பெ.மாதையன் கருத்தும் இருவகையான வேளாளர்கள் இருந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றன. இவ்வாறு உழவர்கள் பெருநிலக் கிழார்களுக்குப் பணிபுரிந்து வாழ்ந்துள்ளமையை அறியமுடிகின்றது.

### 3.4.2 மருத நிலத்தாரின் உணவு

நீர்வளமிக்க பகுதியில் வாழ்ந்த மருதநில மக்களது உணவில் அரிசிச் சோறு முக்கிய இடம் பெற்றுள்ளது. இவர்கள் வெண்ணெல் அரிசியைப் பயன்படுத்தியுள்ளனர். இவர்கள் உண்டு வாழ்ந்த உணவுக் குறித்தப் பாடல்கள் எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ளன. மருத நிலத்தில் நெல் முதலியவற்றை விளைவிக்கும் உழவர்கள் அரிசிச் சோறும் விரால் மீனின் துண்டுகளையும் சமைத்து உண்டுள்ளனர். மேலும், இவர்கள் வெண்மையான சோற்றிற்கு நிகராக வாளைமீன் துண்டுகளை சேர்த்து உண்டுள்ளனர். (புற.61:35) மேலும், நெல் அறுப்பவர்கள் மடையில் இருந்த வாளை மீன், உழுபவர்கள் ஆமை, கரும்பு வெட்டுபவர்கள் கரும்பிலிருந்து கிடைக்கும் தேன் இவற்றையே உணவாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். வயிலில் பறவை விரட்டும் உழுதுண்ணும் உழவர்கள் கீழே விழும் பனங்கருக்கை விறகாகக் கொண்டு கழியிடத்துப் பிடித்த மீனைச்சுட்டு அதனோடு கள் சேர்த்து உண்டுள்ளனர். (புற.42:1214) மேற்கூறியவற்றை நோக்க உழுதுண்டு வாழும் உழவர்கள் நெல் அறுப்பவர், உழுபவர், கரும்பு வெட்டுபவர் எனப் பலவிதத் தொழில் மக்கள் இருந்துள்ளமையையும்

அவர்கள் தொழில் செய்யும் இடத்தில் கிடைக்கக் கூடிய உணவுப் பண்டங்களையே உணவாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதையும் அறிய முடிகின்றது. மேலும், அவர்கள் உண்ணும் உணவையே வரும் சுற்றத்தாருக்கும் கொடுத்து வாழ்ந்துள்ளனர். இதனை, "உழவர்கள் தம்மிடத்து வரும் சுற்றத்தாருக்கு வாளை, ஆமை முதலியவற்றின் தசைகளோடு கரும்பிலிருந்து எடுத்த இனிய சாற்றையும் சேர்த்து விருந்து செய்வர்"[46] என்பதை மு.சண்முகம்பிள்ளை தமது நூலில் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

"களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கின் காமம் வீட ஆரா
ஆரல் கொழுஞ் சூடு அம் கவுள் அடாஅ
வைகு தொழில் மடியும்" (புற.212:1-5)

எனும் அடிகளில், அரிக்கப்பட்ட மதுவை ஆமை இறைச்சியோடு விருப்பம் தீர உண்டுள்ளனர். மேலும், ஆரல் மீனின் வேகவைத்த துண்டை மதுவுடன் உண்டு மயங்கி இருந்துள்ளனர் எனக் குறிப்பிடுவதைக் காணலாம். இத்தகைய உணவை கோப்பெருஞ்சோழன் வழங்கியுள்ளதையும் அத்தகைய வளம் பொருந்திய நாட்டையுடையவன் என்பதைக்குறிப்பிடுகின்றது. மேலும் சோழநாட்டில் உள்ள உணவு முறையினைப் புறநானூற்றின் 399:1-9 ஆவது பாடல் சுட்டுகின்றது. இப்பாடலில் சோழநாட்டில் வசிப்போர்அளக்காமல் வெண்ணெல்லை எடுத்துக் குற்றிச் சோறாக்கி, கனிகளைப் பிசைந்து புளிக்குழம்பு செய்து, சுறாமீனின் இறைச்சி. வள்ளைக்கீரை மற்றும் பாகற்காய் அவற்றையெல்லாம் சமைத்து உணவாக உண்டுள்ளனர்.நாள் முழுவதும் சோம்பியிராது உழைத்து விளைவிக்கும் உழவர்களின் உணவு முறையினையும் வளமிகுந்த அந்நாட்டில் கிடைக்கப்பெறும் உணவு குறித்தும் நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், மருதநிலத்தார் சிலர் வயல்களின் ஓரங்களில் கூரை அமைத்தும் வாழ்ந்துள்ளனர். இங்கு மருத நிலத்தார் வாழ்ந்த பகுதியை ஊர் எனக் குறிப்பிட்டிருப்பதால் பல குடும்பங்கள் வசிக்கும் பகுதியையே அவ்வாறு குறிப்பிட்டிருப்பர். ஆகையால் வசதியுடைய மருத நிலத்தில் நிறைய மக்கள் வாழ்ந்திருக்கக்கூடும்.

### 3.4.3 மருத நிலத்தார் தொழில்

நில வளமும் நீர்வளமும் நிறைந்த மருத நிலத்தில் வேளாண்மையே முக்கியத் தொழிலாக இருந்துள்ளது. இவர்கள் நெல், கரும்பு முதலியவற்றைப் பயிரிட்டுள்ளனர். இவர்கள் உழுது பயிரிட்டு கதிரறுத்து

சேர்க்கும் உழவுத் தொழில் முறையை இலக்கியங்கள் அழகாக எடுத்தியம்பியுள்ளன. உழவர்கள் எருதுகளைக் கொண்டு நிலத்தை உழுதுள்ளனர். இவர்கள் விடியற்காலத்தில் எருதுகளைக் கொண்டு உழும் ஓசை இடந்தோறும் பரவியதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மழை பெய்த காலத்திலும் ஒற்றை ஏர் கொண்டு உழுதுள்ளனர்.

“ஈரம்பட செவ்விப் பைம் புனத்து
ஓர் ஏர் உழவன்” (குறு.13:4-5)

இவர்கள் மழை பெய்த நிலத்தில், ஈரம் காயாத நிலையிலும் உழுதுண்டு வாழ்ந்துள்ளனர். இது இவர்களின் வாழ்க்கை முறையினை எடுத்துக் காட்டுவதாய் அமைந்துள்ளது. மேலும், உழவுத் தொழிலே இவர்களுக்கு முதன்மை ஆதாரம் என்பதையும் உறுதிப்படுத்துகிறது. உழவர்கள் நன்றாக உழுதப் பின்னர் விதைகளை எடுத்துக் கொண்டு விதைக்கச் சென்றுள்ளனர். நீர் நிறைந்த சேற்று வயலில் நாற்று நட்டு, நெற்பயிர்களுக்கிடையே இருக்கும் களைகளையும் பறித்தெறிந்துள்ளனர்.

‘‘அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்
மறு கால் உழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி” (நற்.210:1-3)
“வித்திய உழவர் நெல்லொடு பெயரும்” (ஐங்.3:4)
“கொண்டைக் கூழைத் தண் தழைக் கடைசியர்
சிறு மாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்
மிலங்கு மிளிர் செறுவின் தளம்பு தடிந்து இட்ட
பழன ......................................“ (புற.61:1-4)
‘‘செறு வினை மகளிர் மலிந்த வெக்கை” (பதி.71:1-3)

மேற்கூறியவற்றை நோக்கும் பொழுது விதைத்தல், நாற்று நடுதல், களைப்பறித்தல் போன்ற பணிகளைப் பெண்கள் செய்து வந்துள்ளனா் என்பது தெளிவு. இதனை, சசிவல்லியும் “நெல் வயல்களில் தொழில் செய்யும் உழவர்கள் இடையிடையே தோன்றும் களைகளைக் களைந்தெறிவர். களைகளேயன்றிப் பிற உயிர்களாலும் பயிர்கட்கு இடையூறுகள் உண்டாகும். நாற்றும் நடும்போதே அவற்றை நண்டுகள் அழித்து விடுவதுண்டு. விளைந்த பின் எலிகள் கதிர்களை அறுத்துச் சென்று விடுவதுண்டு. மயில்கள் கதிர்களில் உள்ள நெல் மணிகளைக் கொத்தி விடுதலும் உண்டு இவ்வாறாகப் பயிர்களுக்குப் பல வகையாலும் வரும் அழிவைத் தடுக்க உழவர்கள் விளைநிலத்தைக் கண்ணெனக் காத்தனர்”[48] என்பதைக் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்க ஒன்றாகும்.

இவ்வாறு பாதுகாப்பாக விளைவித்த நெல்லை அறுவடை செய்து குவித்துள்ளனர். இவர்கள் நெல்லினைக் குயம் என்று அழைக்கப்பட்ட அரிவாள் கொண்டு அறுத்து, அரிக்கும் தொழிலை மேற்கொண்டுள்ளமையைச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு பறை முழக்கி, அரிவாள் கொண்டு நெல்லறுத்து, குவிக்கும் பணியைச் செய்யும் மருத நில மக்களை அரிநர், தொழுவர், அரிவனர் எனப் பலவாறு பெயரிட்டு அழைத்துள்ளமையைக் காண முடிகின்றது. மேலும், வயலில் களைப்பறித்தல், பயிர்களைக் காத்தல், நெல் அறுத்துக் குவித்து அடித்தல் போன்ற பணிகளை நிலமல்லாத பிறத் தொழிலாளர்கள் செய்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. இவற்றை மெய்ப்பிக்கும் விதமாக நெல்லறுப்பவர் அறுத்து நெல்லடிக்கும் களங்களுக்குக் கொண்டு சென்று பிறரிடம் அவற்றைச் சேர்த்துள்ளமைச் சான்றாகும்.

“குன்று உறழ்ந்த களிறு என்கோ?
கொய் உளைய மா என்கோ?
மன்று நிறையும் நிரை என்கோ?
ஆங்கு அவை கனவு என மருள வல்லே நனவின்
நல்கியோனே” (புற.387: 22-27)

செல்வக்கடுங்கோ எனும் மன்னன் இரவலருக்குக் களிறுகள், குதிரைகள், பசுக்கூட்டங்கள் இவற்றோடு மனைக்கண் இருந்து பணிபுரிந்த களமர் மற்றும் நெற்போர்க் களங்களையும் நல்கியுள்ளான் எனப் புறப்பாடல் குறிப்பிடுகின்றது. மேற்கூறியவற்றை நோக்க நிலமல்லாத உழவர்கள் உழுவித்துண்ணும் கிழார்களுக்குப் பணிபுரிந்து வாழும் நிலையிலும் பிறருக்குப் பரிசளிக்கப்படும் நிலையிலும் இருந்துள்ளமையை அறிய முடிகின்றது. இதன் மூலம் உழுவோர், உழுவித்துண்போர் எனும் பிரிவுகள் மட்டுமல்லாது களமர், அரிநர், தொழுவர், வினைஞர் என்று அழைக்கப்படும் பலத் தொழிலாளர்களும் இருந்துள்ளனர். ஏனெனில் செய்யும் தொழிலடிப்படையில் அவர்களுக்குச் சூட்டிய பெயரே இதனை மெய்ப்பிக்கும் விதமாக அமைகிறது. மேலும், நெல்லறுப்பவர் மடையில் கிடைக்கும் வாளை மீனையும் உழுபவர் ஆமை இறைச்சியையும் கரும்பு வெட்டுபவர் கரும்புச் சாறையும் உணவாகக் கொண்டு வாழ்ந்திருப்பதைப் புறப்பாடல் (42) குறிப்பிடுவதும் சான்றாகும்.

சங்க காலத்தில் அரிதில் முயன்று தோண்டிய கிணறு மற்றும்குளத்திலிருந்து நீரை இறைத்து வயலுக்குப் பாய்ச்சும் தொழிலைச் சிலர் செய்துள்ளனர். இவர்களை ‘நிரைத் தொழுவர்’ என்ற பெயரால்

சுட்டுகின்றனர். இவர்கள் ஓங்கி உயர்ந்த சாடியில் பனங்குடையால் நீரினை எடுத்து ஊற்றி, பின் வயலுக்குப் பாய்ச்சியதை அகப்பாடல் (அக.275:1-3) சுட்டுகின்றது. நீர் வளமும் நிலவளமும் நிறைந்த பகுதிகளில் கரும்பு விளைவிக்கப்பட்டது. அந்த கரும்பை எந்திரத்திலிட்டுச் சாறு எடுக்கும் பணியைச் செய்த தொழிலாளர்கள் இருந்தனர். அவர்கள், 'அறைநர்' என அழைக்கப்பட்டனர்.

நில வளமிகுந்த மருத நிலத்தில் நெல் மற்றும் கரும்பும் பயிரிட்டுள்ளனர். அதை விளைவித்து எந்திரத்திலிட்டு சாறு எடுக்கும் பணியையும் மேற்கொண்டுள்ளனர். செழிப்பான மருத நிலத்தில் நெல், கரும்பு முதலியன பயிரிடும் வேளாண்மை தொழிலே முதன்மையாக விளங்கியுள்ளது. மருத நிலத்தில் உழுவோர், உழுவித்துண்போர், உழவர், கடைசியர், அரிநர், களமர், அறைவனர், வினைஞர் எனப் பல பிரிவுகளான மக்கள் இருந்துள்ளதையும் அறியமுடிகின்றது.

மருத நிலத்து மக்களுக்குத் தலைவர்களாக மகிழ்நன், ஊரன் என அழைக்கப்பட்ட தலைவர்கள் இருந்துள்ளனர்.

### 3.4.4 மருத நிலத்தலைவர்கள்

மருதநிலப் பகுதிகளை மகிழ்நன், ஊரன் இவர்களோடு பிற குறுநில மன்னர்களும் ஆட்சி செலுத்தியுள்ளனர்.

#### 3.4.4.1 ஊரன் (வயல்)

மருத நிலத்தை ஆட்சிசெய்தவர்களாக ஊரன், மகிழ்நன், ஆகியோரை உரையாசிரியர்கள் குறிப்பிடுவர். இவர்களுள் வயல்கள் சூழ்ந்த ஊரையுடையவன் ஊரன். ஊரனை ஐங்குறுநூற்றின் 25-ஆவது பாடல் வயலைக் கொடியினை நண்டு அறுப்பதற்கு இடமான வயல்கள் சூழ்ந்த ஊரையுடையவனாகக் குறிப்பிடுகின்றது. மற்றொரு பாடலிலும் நெல்முளைகளை நண்டுகள் அறுத்தற்கு இடமான வயல்கள் நிறைந்த ஊரைக் கொண்ட தலைவனை ஊரன் எனக் குறிப்பிடுகிறது. இதனை,

"மாரி கடி கொள காவலர் கடுக
வித்திய வெண்முளை களவன் அறுக்கும்
கழனி ஊரன்" (ஐங்.29:1-3)

எனும் அடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், நெய்தலும் ஆம்பலும் ஒரு சேர செழித்து வளரும் கழனிகள் சூழ்ந்துள்ள ஊருக்குத்

தலைவன் என்பதை ஐங்குறுநூற்றின் 96-ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. ஆம்பலும் மீன்கூட்டமும் நிறைந்த பொய்கையை உடைய ஊரன் என நற்றிணைப் பாடல் அடி (230:5) குறிப்பிடுகின்றது. நீர் உண்ணக்கூடிய நீர்த்துறையிலே இறங்கிய பெண்கள் அஞ்சி ஓட ஆழமான நீரையுடைய பொய்கையில் வாளைமீன்கள் துள்ளிப்பாயும் சிறப்புடைய பகுதிக்குத் தலைவன் ஊரன் என்பதை நற்றிணைப் பாடல் (310:1-4) குறிப்பிடுகின்றது. மருத நிலத்தலைவன் வயல், நீர்த்துறை, பொய்கை எனச் சிறப்பு வாய்ந்த ஊர்களுக்குத் தலைவனாக இருந்துள்ளதை அறியமுடிகின்றது.

மகிழ்நனும் வயல் மற்றும் நீர் சூழ்ந்த மருத நில ஊர்களுக்குத் தலைவனாக இருந்துள்ளான். இதனை,

“கழனி நல் ஊர் மகிழ்நர்க்கு” (நற்.70:8)
“ஆம்பல் அம் செறுவின் தேனூர்
…………………………………
………………………… மகிழ்ந” (ஐங்.57:,2,4)

எனும் அடிகளும்

“யாறு அணிந்தன்று நின் ஊரே
……………………….. மகிழ்ந” (ஐங்.45:3,4)

எனும் அடிகளும் குறிப்பிடுவதைக் காணலாம். மகிழ்நனது ஊர் கூதிர்காலத்தில் கலங்கல் நீரையும் கோடைக்காலத்தில் தெளிந்த நீரைக் கொண்டதுமான ஆற்றுநீரால் அழகுபெற்றுள்ளது. நண்டு, முதலை மிகுதியாக வாழும் ஊரையுடையவனாகக் ஐங்குறுநூறு (24:1-3) பாடல் குறிப்பிடுகின்றது. சங்கப்பாடல்களில் ஊரன், மகிழ்நன் மட்டுமல்லாது ஆதன், அழிசி அருமன் போன்ற பலரும் மருத நிலத் தலைவர்களாக இருந்துள்ளனர்.

### 3.4.4.2அருமன்

மருத நிலத்திலுள்ள சிறுகுடி எனும் ஊரை அருமன் ஆட்சிசெய்துள்ளான்.

‘‘கூழுடை நல் மனைக் குழுவின இருக்கும்
மூதில் அருமன் பேர் இசைச் சிறுகுடி” (நற்.367:5,6)

எனும் அடிகளில் மிகுதியான உணவுப் பொருளுடைய நல்ல மனைகள் பலவாகவுள்ள ஊரில் புகழ்மிக்கவனாக அருமன் இருந்திருக்கிறான். இதனை,

ஆதி அருமன் மூதூர்” (குறு.293:1-4)

எனும் அடி உறுதிப்படுத்தும்.

### 3.4.4.3 விரான்

"தேர் வண் விராஅன் இருப்பை அன்ன" (நற்.350:4) எனும் பாடல் வெண்ணிற நெற்போர்களை மிகுதியாகக் கொண்ட இருப்பை எனும் ஊரினன் விரான். இரவலர்களுக்குத் தேரைக் கொடுக்கும் வள்ளல் தன்மையுடையவன். அவனுடைய ஊரில் உழவர்கள் நெல் அரிவதற்கு முழக்கும் தண்ணுமை ஒலிக்கு அஞ்சி வயலில் உள்ள பறவையினங்கள் அருகில் இருக்கும் மருத மரத்தில் தங்கின. என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.

"விண்டு அன்ன வெண்ணெற் போர்வின்
கை வண் விராஅன் இருப்பை அன்ன" (ஐங்.58:1-2)

மேலும் "விரான் என்பவன் இருப்பை நகரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்ட வள்ளல் என்றும் மலையென நெற்போர்களைக் கொண்ட ஊரின் தலைவன் விரான்"[48] என அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிடுவதும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.

### 3.4.3.4 வாணன்

மருத நிலத்தின் சிறுகுடி தலைவன். வாணனது ஊர், காய்த்த நெற்பயிரையுடைய வயல்களைக் கொண்டு விளங்கியுள்ளதை,

காய்நெல் படப்பை வாணன் சிறுகுடி" (அக.204 10-13)

எனும் அடி சுட்டுகின்றது. மேலும், அவனது ஊரில் உள்ள குளத்து நீர் கால்வாய் வழியாகச் சென்று சேரும். அங்குள்ள வாளை மீன் வயலில் அஞ்சாது திரியும் சிறுகுடி என வாணனது சிறப்பினை நற்றிணைப் பாடல் (340:3-9) குறிப்பிடுகின்றது. "பிற ஊர்களினும் சிறந்தது வாணனுடைய சிறுகுடி"[49] எனக் கு.வெ.பாலசுப்பிரமணியனும் "சிறுகுடி – காவிரியின் வடபால் வாணனுக்கு உரிமை பூண்ட ஊர்"[50] என நற்றிணை உரையிலும் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது. இதன் மூலம் வளம் பொருந்திய சிறுகுடி எனும் ஊரை ஆண்டவனாக வாணன் இருந்துள்ளமை தெளிவு.

### 3.4.3.4 தித்தன்

"மாவண் தித்தன் வெண்நெல் வேலி
உறந்தை அன்ன" (புற.352:9-10)
"மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை" (அக.6:4-5)

போன்ற அடிகளில்சோழ மன்னர்களுள் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன் தித்தன். பெரிய வள்ளல் தன்மையுடையவனாக

வெண்ணெல் வயல்கள் சூழ்ந்த உறையூரினை ஆட்சி செய்துள்ளான் மேலும், புகழ்மிக்க நல்ல அணிகலன்களைக் கொடுத்தாலும் பெறாது வளமை பொருந்திய நாட்டிற்குரிமையுடையவனாக இருந்துள்ளான். "தித்தன் என்பவனது ஆளுகைக்கு உட்பட்டிருந்தது உறையூர் சங்க காலத்தே சோழர் ஆட்சிக்கு முன்னர் தித்தன் பாதுகாப்பில் இருந்திருக்கக்கூடும்"[51] என கு.வெ.பாலசுப்பிரமணியன் தனது உரையில் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. எனவே தித்தன் சோழரது வருகைக்கு முன் சிறப்புற வாழ்ந்துள்ளான் என்பதும் உறையூரை தனது ஆளுகைக்குள் கொண்டு வந்து ஆட்சி செய்துள்ளான் என்பதும் புலனாகும்.

### 3.4.3.6 அருவந்தை

''காவரி அணையும் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி அம்பர் கிழவோன்
நல் அருவந்தை" (புற.385:8-10)

அருவந்தை சோழநாட்டில் பாயும் காவிரி நீரையுடைய தோட்டங்களையும் நெல்விளையும் கழனிகளையும் உடைய அம்பர் என்னும் ஊருக்குத் தலைவனாக விளங்கியதோடு பிறர் மனையில் நின்று பறை முழக்கிப் பாடிய அளவிலே, தம் மனைக்கு அழைத்துப் பசித் துன்பம் போக்கும் வளம் பொருந்தியவனாகவும் வாழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. "அம்பை காவிரிபாயும் சோழநாட்டில் உள்ள ஓர் ஊர் இவ்வூரின் தலைவன் அருவந்தை"[52] என்பதை கு.வெ.பாலசுப்பிரமணியனும் தமது உரையில் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.

### 3.4.3.7ஆதன்

நெடுவேள் ஆதன் எனக் குறிப்பிடப்பெறும் ஆதன் 'போந்தை' என்னும் ஊரினை ஆட்சி செய்துள்ளான். இதனை,

"நெடுவேள் ஆதன் போந்தை" (புற.338:4)

எனும் அடி உறுதிப்படுத்துகிறது. இவனது நாட்டில் வயல்கள், நெல்லால் நிறைந்த வீடுகள், செல்வம் நிறைந்த வீதிகள் மற்றும் பல மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலைகள் விளங்கியமை அவன் சிறப்பைக் காட்டுகின்றன.

### 3.7.3.9 ஒய்மான் வில்லியாதன்

ஒய்மான் வில்லியாதன் என்பவன் 'மாவிலங்கை' என்னும் ஊர்க்குத் தலைவன். மேலும், இவனது சிறப்பினைக் கூறுமிடத்து, நெல்லறுக்கும்

தொழிலைச் செய்வோர் தம்முடைய கூரிய அரிவாளின் வாய் மழுங்கினால்திரும்ப பயன்படுத்த வேண்டி சேற்றில் படிந்திருக்கும் ஆமையின் முதுகில் உள்ள ஓட்டினைத் தீட்டும் கல்லாகக் கருதித் தீட்டியுள்ளனர். அத்தகைய நெல்பயிர் நெருங்கிய விளைவயல்கள் உடையதாய் ‘மாவிலங்கை’ எனும் ஊர் இருந்துள்ளமையை,

“நெல்அரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்
பின்னை மறத்தொடு அரிய கல்செத்து
அள்ளல் யாமைக் கூன்புறத்து உரிஞ்சும்
நெல் அமல் புரவின் இலங்கைக் கிழவோன்
வில்லியாதன்” (புற.379:3-7)

எனும் புறப்பாடல் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. “இவன் இலங்கை என்னுமூர்க்குத் தலைவன். இவ்விலங்கை மேற்கூறிய மாவிலங்கையென்னும் ஊரென்பதும் இவன் நல்லியக்கோடன் பரம்பரையைச் சார்ந்தோனென்பதும் ஊகித்தறியப்படுகின்றன”[53] என உ.வே.சா. குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. மேலும் ஓய்மான் நல்லியக்கோடன் பரம்பரையில் ஓய்மான் நல்லியாதன். ஓய்மான் வில்லியாதன் என்றும் இரண்டு உபகாரிகள் இருந்ததாக உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். சங்ககாலத்தில் ஒருவர் பல பெயர்களால் அழைக்கப்படும் மரபும் காணப்படுகிறது.

### 3.4.4.9 கோப்பெருநற்கிள்ளி

கோப்பெருநற்கிள்ளி, மிகுந்த நீர் வேலியை உடைய நாட்டிற்கு உரிமையுடையவன். இவனது நாட்டில் நெற்கதிர்களும் கொழுத்த மீனும், கள்ளும் கொண்ட நீரும் இருந்துள்ளதை,

‘‘கொழுமீன் விளைந்த கள்ளின்
விழு நீர் வேலி நாடு கிழவோனே” (புற.13:10-13)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. எனவே மிகுந்த நீருடைய நாட்டிற்குத் தலைவனாகக் கோப்பெருநற்கிள்ளி இருந்துள்ளமையை புலனாகின்றது.

### 3.4.4.10சென்னி

நாள்தோறும் புது வருவாயுடைய நல்ல நாட்டிற்குத் தலைவனாகச்சென்னி விளங்கியதை,

‘‘வைகல் யாணர், நல் நாட்டுப் பொருநன்
எஃகு விளங்கு தடக்கை இயல் தேர்ச்சென்னி” (புற.61: 1-13)

எனும் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. அவனது நாட்டில், உழவர்கள் மலங்கு மீன் துள்ளும் வயல்களில் உள்ள நெய்தல், ஆம்பல் மலர்களைக்

களையாகப் பறிப்பர் என்றும் வாளைமீன் ‘தளம்பு’ (சோற்றுக்கட்டி உடைப்பது) எனும் கருவியால் துண்டிக்கப்பட, அதன் தசையை கறியுணவாக்கி உண்டுள்ளனர். அவர்களின் சிறுவர்கள் தென்னங்காய்கள் கொண்டு விளையாடி வெறுப்புற்று, போரின் மீது ஏறி, பனம் பழத்தைத் தொட்டு விளையாடியுள்ளனர். இத்தகைய சிறப்பு வாய்ந்த வளம் பொருந்திய நாடாக சென்னி ஆட்சி செய்த நாடு இருந்துள்ளது. மருத நிலத் தலைவனாக மகிழ்நன், ஊரன் மட்டுமல்லாது அருமன், அருவந்தை, நெடுவேள் ஆதன், வில்லியாநன், சென்னி, நற்கிள்ளி, தித்தன், வாணன், விரான் போன்ற பலரும் மருத நிலப் பகுதிகளில் ஆட்சி செலுத்தி வந்திருப்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. வேளாண்மை செயவதற்கேற்ற மருத நிலத்தை ஆட்சி புரிந்தவர்களை இலக்கியங்கள் சிறப்பாகப் பதிவுசெய்துள்ளன.

### 3.5 நெய்தல் நிலம்

மருத நிலத்தை அடுத்து, கடலும் கடல் சார்ந்த பகுதி அமைந்திருந்தது. அது நெய்தல் எனப்பட்டது. அந்நிலத்தில் நெய்தல் மலர் மிகுந்திருப்பதால் நெய்தல் எனவும் அங்குள்ள பெண்கள் கடலுக்குச் சென்ற ஆடவரை நினைந்து இரங்கி இருத்தலுமான உரிப் பொருளை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது என்ற கருத்தும் பரவலாக நிலவி வருகிறது. பெரும்பாலும் நெய்தல் நிலத்து மக்கள் தங்கள் வாழ்க்கையைக் கடலைச் சார்ந்தே அமைத்திருப்பதால் கடலும் கடல் சார்ந்த பகுதியும் ‘நெய்தல்’ என அழைக்கப்படுகிறது.

#### 3.5.1 நெய்தல் நில மக்கள்

கடலுக்குச் சென்று மீன் பிடித்தலே நெய்தல் நில மக்களின் முக்கியத் தொழிலாக இருந்துள்ளது. ஆகையால் அத்தொழில் செய்த மக்களை, பரதவர், அளவர், வலைஞர் எனவும் அவர்தம் பெண்டிரைப் பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனவும் குறிப்பிட்டுள்ளனர். இதனை, “நெய்தல் நில குடிமக்களுள் ஆடவர், பரதர், நுளையர், அளவர், வலையர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனப்பட்டனர்”[54] என்பதை மா.இராசமாணிக்கனாரும் “நெய்தற்கு மக்கட் பெயர் நுளையர், திமிலர், பரதவர்,நுளைத்தியர், பரத்தியர் எனப்பட்டது”[55] எனச் சசிவல்லியும் குறிப்பிடுவது

கவனிக்கத்தக்கது. மேலும் எட்டுத்தொகை நூல்களில் பரதவர், வலைஞர், திமிலோன் பற்றிய குறிப்புகள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. இதனை,

"திண் திமில் வன் பரதவர்" (புற.24:4)
"கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய" (குறு.304:4)
"பெருங்கடற் பரதவர்" (குறு.320:1)
"நெடுங்கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்" (நற்.175:1)
"வன் கைப் பரதவர்" (நற்.303:9)
"திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்" (அக.320:2)
"எரிப்பூம் பழனம் நெரித்து உடன் வலைஞர்" (புற.249:3)

எனும் அடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது.

### 3.5.2 நெய்தல் நிலத்தார் இல்லம்

நெய்தல் நிலம் கடற்சார் பகுதியாதலால் கடற்கரையிலுள்ள மணல்மேட்டில் குடிசை அமைத்து வாழ்ந்துள்ளனர். இவர்கள் வாழ்ந்த பகுதியைப் 'பாக்கம்' என்றும் 'சிறுகுடி' எனவும் அழைத்துள்ளனர். இவர்கள் வாழ்ந்த குடிசைகாய்ந்த புல்லால் வேய்ந்த குறுகிய இறப்பினையுடையதாய் அமைந்துள்ளது. மக்களின் இருப்பிடத்தைச் 'சேரி' எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். அங்குப் புலால் நாற்றம் மிகுந்து காணப்பட்டு ஊர் என்று நினைப்பதற்கரிய சிறுமையுடையதாய் அமைந்துள்ளது. புல்லால் குடிசை அமைத்து வாழ்ந்தப் பகுதியைச் 'சிறுகுடி', 'சேரி' எனவும் சிலவாகிய குடிகளையுடைய இடத்தில் வசித்தவர்கள் உள்ள பகுதியைப் 'பாக்கம்' என்றும் அழைத்துள்ளமையைக் காணமுடிகின்றது. ஆகவே, வசிப்பிடத்திற்கேற்ப இவர்களுக்குள்ளே வேறுபாடுகள் இருந்திருப்பதை அறியமுடிகின்றது. மேலும், இதனை உறுதிப்படுத்தும் விதமாக தாழை மரங்களை வேலியாக உடைய கொல்லைப் பகுதியில் முள்ளிச் செடிகள் வேய்ந்த குறுகிய கூரையையுடைய சிறுகுடில்களுடையவரும், கொழுத்த மீன் கொள்பவருமான பாக்கத்தில் உறைபவருமாக இரு பிரிவினர் இருந்துள்ளமையை,

''முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கம்" (நற்.207:1-3)

என நற்றிணை குறிப்பிடுகின்றது. இவற்றை நோக்க கடற்கரையை அடுத்துள்ள மணற்பகுதியிலும் கடற்கரைச் சோலைப் பகுதியிலும் குடில் அமைத்து வாழந்து வந்திருப்பதை அறியமுடிகின்றது. "கடற்கரையை அடுத்த பெருமணற் பகுதியில் கடல் வளத்தை நம்பி வாழும் மக்கள் உறைந்தனர். இங்குள்ள ஊர்கள் கடலையடுத்தும் உப்பங்கழியடுத்தும்

தாழை வேலிகளுடன் காணப்பட்டன. இந்த ஊர்களைப் 'பாக்கம்' என்பர்"[56] என மு.சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்க, கடற்கரையில் அமைந்துள்ள இல்லங்கள் நிறைந்த ஊர் பகுதியைப் பாக்கம் என அழைத்துள்ளனர். கடற்கரையில் குடிசைகள் அமைத்து வாழ்ந்தவர்களைச் சேரி பிரிவினுள் குறிப்பிட்டுள்ளனர் எனலாம். மேலும், கடற்பகுதியில் வாழ்ந்து வந்த இந்நெய்தல் மக்கள் கடலில் கிடைக்கும் மீன்களையே உணவாக்கிக் கொண்டுள்ளனர். பிற நிலத்தாரிடம் உப்பு, மீன் போன்றவற்றை விற்று அவற்றிலிருந்து பெறக்கூடிய நெல்லைக் கொண்டுச் சமைத்து உண்டுள்ளனர். ஆகவே அந்தந்த நிலத்து மக்கள் தமது நிலங்களில் கிடைக்கும் பொருட்களையே பெரும்பாலும் உணவாக்கிக் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

### 3.5.3 நெய்தல் நில மக்களின் தொழில்

கடற்கரைப் பகுதியில் வாழ்ந்துள்ள இந்நெய்தல் நில மக்களின் தொழில் கடலையே சார்ந்திருந்தது. கடல், குளங்களுக்குச் சென்று மீன் பிடிப்பது இவர்களின் முதன்மைத் தொழிலாக இருந்துள்ளது. இரவு, பகல் பாராது இத்தொழிலைச் செய்துள்ளனர். சிறிய காலுடைய நண்டுகளை அடித்துச் செல்லும் புலால் நாற்றம் வீசும் அலைகளையுடைய கடலில் மீன் பிடிக்கும் பரதவர் பற்றிநற்றிணையின் 219ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. கடலில் மட்டுமல்லாது குளத்திலும் மீன் பிடித்துள்ளதை,

> "………….. யாணர்க்
> கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட
> மீன்வலை "                                        (குறு.171: 1-3)

எனும் குறுந்தொகை அடிகளால் அறிய முடிகிறது. மேலும், பெரிய காற்று வீசும் காலத்தில் வலை, தூண்டில் கொண்டு அலைப் பொங்கி வீசும் கடலுக்குச்சென்று தொழில் செய்துள்ள பரதவர் பற்றி நற்றிணையின் 207-ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. இப்பரதவர்கள் வலையைத் தயார்படுத்தி சிறிய, பெரிய வலைகளைக் கொண்டு பல வகை மீன்களைப் பிடித்து வந்துள்ளனர். வலையைக் கிழிக்கும் பெரிய சுறாமீனையும் பிடிக்கச் சென்றுள்ளனர். பரதவர்கள் பகல், இரவு என இருவேளையிலும் மீன்பிடிக்கும் இயல்புடையவர்கள். மீன்களை அங்கேயே விற்று, மணல் பரப்பிலேயே படுத்து உறங்கியுள்ளனர். "பரதவர் மகளிர் மீன்களை வட்டிகளில் சுமந்து சென்று அடுத்துள்ள மருத நிலத்து ஊர்களில் விற்று நெல் முதலியன பொருட்களுக்கு மாறிவருவர்"[57] என மு.சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பது

கவனிக்கத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்க, கடலில் சென்று மீன் பிடிப்பதையே தொழிலாகக் கொண்ட பரதவர்களும் பரதவ மகளிரும் மீன்களைத் தமது நிலத்திலும் பிற இடங்களுக்கும் கொண்டு சென்று விற்றுள்ளனர். இம்மக்களின் மீன் பிடித்தல் தொழிலில் மட்டுமல்லாது உப்பு விளைவித்தலிலும் ஈடுபட்டுள்ளனர். கடல் மற்றும் கழிகளில் உள்ள நீரைப் பாய்ச்சி, பாத்தியாக்கி உப்பு விளைவித்துள்ளனர். மழையை எதிர்பாராது செய்யும் வேளாண்மை என்று இத்தொழில் குறிப்பிடப்பெற்றுள்ளது. இத்தொழில் செய்பவர்களை ‘அளவர்’ எனப் பத்துப்பாட்டு குறிப்பிடுகின்றது. எனினும் எட்டுத்தொகையில் அத்தகைய பெயர் இடம்பெறவில்லை. மேலும், உப்பு விளைவித்தலோடு நில்லாது, அதனை விற்பதற்காகக் கடற்கரைச் சோலையில் குவித்து, காவல் காத்துள்ளமையை, நற்றிணைப் (331:1-3) பாடலடிகள் விவரிக்கின்றன. நெய்தல் நிலத்தார் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் மற்றும் சங்கு, முத்தெடுத்தல் எனும் பிற தொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர். பரந்தகன்ற கடலில் திரண்ட வடிவினையுடைய முத்துக்களை வாரிக் கொண்டு வந்து ஊரில் பலருக்கும் பகுத்துக் கொடுக்கும் பெரிய துறையயையுடையவனாகப் பரதவன் இருந்துள்ளதை அகநானூற்றின் 280-ஆவது பாடல் குறிப்பிடுகின்றது. பரதவர்கள் முத்துக்களை விலைக்கூறி விற்றுள்ளனர். சிப்பியிற் பிறக்கும் முத்தைவிட சங்கிற் பிறக்கும் முத்து சிறந்தது என்பர். அத்தகைய சிறப்பு வாய்ந்த சங்குகள் ஈன்ற முத்துக்களை விற்றுள்ளனர். பரதவர்களில் பலர் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் தொழில்களில் ஈடுபட செல்வாக்குப் பெற்ற சிலர் சங்கெடுத்தல், முத்தெடுத்தல் போன்ற பிற தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். இது அவர்களுக்குள் தொழில் பிரிவுகள் இருந்துள்ளமையைச் சுட்டிக்காட்டுகின்றது. மேலும், பரதவர்களில் சிலர் கடல் வாணிகத்திலும் ஈடுபட்டு வாழ்ந்துள்ளனர். இவர்கள் இருக்கும் மணற்பரப்பில் பல்வேறு நாடுகளிலிருந்து கப்பல்களில் கொண்டுவரப்பட்ட பலவகைப்பண்டங்கள் இறக்கிவைக்கப்பட்டிருந்ததை,

“வேறுபல் நாட்டில் கால் தரவந்த
பல் உறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்” (நற்.31:8-9)

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. இதையே, “பரதவர்கள் கடல் வாணிகம் நடைப்பெற இன்றியமையாதவராய் திகழ்ந்தனர். வணிக உரிமையாளர்களாகவும் இருந்துள்ளனர்”[58] எனும் சசிவல்லி கூற்றும்நோக்கத்தக்கது. பரதவர்களில் தலைவர்களாகச் செயல்பட்டவரைத்

‘தென்பரதவர்’ என அழைத்துள்ளனர். இவர்களின் வலிமையைக் கண்டு பேரரசர்களும் கவலைக் கொண்டு எதிர்த்துள்ளதை,

“தென்பரதவர் மிடல்சாய
வடவடுகள் வாள்ஓட்டிய” (புற.378:1-2)

எனும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. இவ்வாறு நெய்தல் நிலமக்களுள் தொழில் அடிப்படையில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், சங்கு முத்தெடுத்தல், கடல் வாணிகம் செய்வோர் எனும் பிரிவுகள் இருந்துள்ளமையை அறியமுடிகின்றது. ஏனெனில் மீன்பிடிப்பவர்களில் சிறிய வலைக் கொண்டு, சிறு படகிலும் குளத்திலும் மீன் பிடித்துள்ளனர். பெரிய வலை கொண்டு கடலுக்குச் சென்று மீன் பிடித்து வந்து விற்றுள்ளனர். சிலா் உப்பு விளைவித்து விற்று வாழ்ந்துள்ளனர். சிலர் விலையுயர்ந்த சங்கு முத்தெடுத்து விற்றுள்ளனர். மற்றும் சிலர் கடல் வாணிபத்திலும் தலைவர்களாகவும் இருந்துள்ளனா் என்பது உறுதியாகிறது. நெய்தல் நில மக்களுக்குத் தலைவர்களாகச் சிலர் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களுக்குத் துறைவன், கொண்கன், புலம்பன், சேர்ப்பன், எனப் பெயரிட்டு அழைத்துள்ளனா்.“நெய்தல் நிலத்து குடிமக்களுக்குத் தலைவராயினாா் சோ்ப்பன்,புலம்பன் எனப்பட்டனர்”[59] என இராசமாணிக்கனாரும் “நெய்தல் நிலத் தலைமக்கள் கொண்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பன் என்னும் பெயர்களால் வழங்கப்பட்டனர்”[60] எனச் சசிவல்லியும் குறிப்பிட்டுள்ளமை கவனிக்கத்தக்கது. மேலும், கடற்துறைக்குத் தலைவன் துறைவன், மென்னிலத்திற்குத் தலைவன் புலம்பன், மற்றும் கடற் நீர்பரப்பையுடையவன் சேர்ப்பன், கடற்கரைப் பகுதியுடைய நாட்டிற்குத் தலைவன் கொண்கன் என அழைக்கப்பட்டதை இலக்கியச் சான்றுகள் வழி அறியமுடிகிறது.

### 3.5.4 நெய்தல் நிலத் தலைவா்கள்

#### 3.5.4.1 துறைவன்

நெய்தல் நில தலைமக்களுள் ஒருவனாகத் துறைவன் இடம்பெற்றுள்ளான். கண்டல் மரக்காய்கள் உதிர்ந்து பெரிய கழியிடத்து விழுந்துவிட அதனால் ஆம்பலின் மலர் சாய்ந்து நீர்க்காக்கை கொட்டாவி விட்டாற்போல வெண்ணிறமாய் மலர்ந்து நிற்கும் இத்தகைய கடற்பரப்பின் துறைவன் என நற்றிணை 345-ஆவது பாடல் சுட்டுகின்றது.மேலும், வெண்மை நிறம் சிறிதே உடைய காக்கை, உப்பங்கழிகளில் இரையை ஆராய்ந்து

உண்டு, பூக்களின் மணம் வீசுகின்ற பொழிலில் தங்கும் இத்தகைய நீர்த்துறையையுடையத் தலைவன் எனக் குறுந்தொகை குறிப்பிடுவதை,

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந்து உண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு" (குறு.313:1-3)

எனும் அடிகளால் அறியலாம். சிறிய இலைகளையுடைய ஞாழல் மரத்தின் பெரிய கிளையைக் கடலலை மேலெழுந்து வந்து வளைத்தற்கு இடனான நெய்தல் நிலத்தலைவன் துறைவன் என்பதை ஐங்குறுநூறு (145:1-2)பாடல் குறிப்பிட்டுள்ளது. ஐங்குறுநூற்றில் 111, 115, 136, 142, 147, 150, 152,165 ஏழு பாடல்களும் குறுந்தொகையில் 296, 303, 328, 320, 318, 349, ஆறு பாடல்களும் நெய்தல் நிலத் தலைவனைத் 'துறைவன்' எனக் குறிப்பிடுகின்றன.

### 3.5.4.2 கொண்கன்

நெய்தல் நிலத் தலைவன் 'கொண்கன்' கடல்நாட்டிற்குத் தலைவனாகவும் நெடுந்தேரையுடையவனாகவும் இருந்துள்ளமையைச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. கடல்கெழு தலைவனான கொண்கனது நாட்டில் இளமகளிர், குவிந்த வெண்மணலில் குரவைக்கூத்து நிகழ்த்தி மகிழுந்துள்ளமையை,

"பொய்தல் ஆடிய பொய்யா மகளிர்
குப்பை வெண்மணல் குரவை நிறூஉம்
துறை கெழு கொண்கன்" (ஐங்.181: 2-4)

எனும் அடிகளின் மூலம் அறிய முடிகின்றது. மனையின் கண் இருக்கும் ஊர்க்குருவி ஈன்ற முட்டை உடைந்தது போன்று பெரிய அரும்புகள் மலர்ந்த,புன்னை மரங்களையுடையக் கடற்கரைச்சோலையையுடையவன் கொண்கன் என்பதைநற்றிணைப் பாடல் (231: 6-8) குறிப்பிடுகின்றது.

### 3.5.4.3 புலம்பன்

மென்னிலமான நெய்தல் நிலத்திற்குரியவனாகப் 'புலம்பன்' இருந்துள்ளதை,

"மல்லல் இருங்கழி மல்கும்
மெல்லம் புலம்பன்" (ஐங்.120: 3-4)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. புலால் நாறுகின்ற குடியிருப்புக்களையுடைய பாக்கத்தில், மீன் இனத்தை வேட்டையாடச் சென்ற பரதவர்கள், உப்பங்கழியில் மலர்ந்திருக்கும் நீலப் பூக்களைக் கொன்றைப்

பூக்களுடன் சூடிக்கொள்ளும் இயல்புடைய மென்னிலத்திற்குரியவனாகப் ‘புலம்பன்’ இருந்துள்ளதை அகப்பாடல் (270: 1-4) குறிப்பிடுகின்றது.

### 3.5.4.4 சேர்ப்பன்

நீர்ப்பரப்பினையுடைய நெய்தல் நிலத்திற்குத் தலைவனாகச் ‘சேர்ப்பன்’ குறிப்பிடப் பெறுகின்றான்.

“நெடு நீர்ச் சேர்ப்பன் உருஉ மாறே” (நற்.235:10)

எனும் பாடல் குளிர்ந்த மாலையணிந்த மார்பில் வண்டுகள் தேனை நுகரமணிகள் அணிவிக்கப் பெற்ற குதிரைகளைச் செலுத்தியபடி நெடிய நீர்ப்பரப்பமைந்த நெய்தல் நிலத் தலைவன் வருவான் எனக் குறிப்பிட்டுள்ளது. அந்திப் பொழுதில் முக்கோலை உடைய அந்தணர் மந்திர மொழியை நினைவு கொள்வது போல, இனமான நாரைகள் ஒலி அடங்கி மணல் மேல் தங்குகின்ற நீரையுடைய சேர்ப்பன் என்பதை,

‘‘எக்கர் மேல் இறை கொள்ளும் இலங்கு நீர்த்தண் சேர்ப்ப”
(கலி.126:5)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. நீர்ப் பரப்பிற்குத் தலைவனான சேர்ப்பன் குறித்து நற்றிணையின் (19, 58, 63, 74, 78, 235) ஆறு பாடல்களும் குறுந்தொகையின் (283, 306, 334, 343) நான்குப் பாடல்களும் கலித்தொகையின் (121,124,149) மூன்று பாடல்களும் பதிவு செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்கக் கடலும் கடல் சார்ந்த இடமுமான கடற் பகுதிகளைத் துறைவன், புலம்பன், கொண்கன், சேர்ப்பன் என்போர் ஆட்சிசெய்திருப்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. இதனை, உறுதிபடுத்துவதாக “நானிலமக்கள் தங்கள் ஊர்தோறும் தங்களுக்கேற்ற தலைவனொருவனது காவலின் கீழ்அடங்கி வாழ்ந்தார்கள். குறிஞ்சி நிலத்தலைவனை ‘வெற்பன்’ என்றும் முல்லை நிலத் தலைவனைக் குறும்பொறை நாடன் மருத நிலத் தலைவனை ஊரன் என்றும் நெய்தல் நிலத் தலைவனைத் துறைவன் என்றும் வழங்குதல் மரபு”[61] என்பதனை, வெள்ளை வாராணன் குறிப்பிட்டிருப்பதுஇணைத்து நோக்கத்தக்கது. நெய்தல் நிலத்தில் இவர்கள் மட்டுமல்லாது தழும்பன், பெரியன் போன்ற பிறரும் ஆட்சி செய்து வந்துள்ளனர்.

### 3.5.4.5 தழும்பன்

நெய்தல் நிலத் தலைவனாகத் தழும்பன் குறிப்பிடப் பெறுகின்றான்.

“……………… பெரும்புண்

ஏஎர் தழும்பன் ஊணூர் ஆங்கண்
பிச்சை சூழ் பெருங்களிறு போல" (நற்.300: 9-11)

எனும் அடிகள், இவன் வன் போரிலே புண்பட்டு தழும்பு ஏற்பட்டதால் இப்பெயர் பெற்றதையும் ஊணூர் என்ற இடத்தை ஆட்சி செய்ததையும் தெளிவுபடுத்துகின்றன. குறிப்பிடுகிறது.

"பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்
விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து'' (அக.227: 17-21)

எனும் பாடலடிகள் யானை மிதித்த காரணத்தால் தழும்பு ஏற்பட்டதையும் மருங்கூர் பட்டினத்துக்கு அப்பால் அவனது ஊணூர் அமைந்திருந்ததையும் குறிப்பிடுகின்றன.

### 3.5.4.6 பெரியன்

'பெரியன்' பொறையாறு எனும் பகுதியை ஆட்சி செலுத்தியவனாகச் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. நல்ல தேரினையுடையவன், கொடைத் தன்மை வாய்ந்தவன் பெரியன்.அவனது ஊரில் தாழையை வேலியாகக் கொண்ட அழகிய தோட்டங்கள் கள்மணம் கமழும் தன்மையன என்பதை,

"பாடுநர்த் தொடுத்த கை வண் கோமான்
பரியுடை நல் தேர்ப் பெரியன் விரி இணர்ப்
புன்னை அம் கானல் புறந்தை" (அக.100:11-13)
"நறவு மகிழ் இருக்கை நல் தேர்ப்பெரியன்
கள்கமழ் பொறையாறு அன்ன" (நற்.131: 7-8)

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. மேலும் "பெரியன் ஒரு வள்ளல், புறந்தை ஓர் ஊர்புறையாற்றின் மரூஉ புறையாறு. இன்று பொறையாறு என வழங்கப்படுகிறது"[62] என உரையாசிரியர் செயபால் குறிப்பிட்டுள்ளார். ஆகவே, புறையாறு என்பதே நாளடைவில் பொறையாறு என மாற்றம் பெற்று வந்திருப்பதும் அத்தகைய ஊரை ஆட்சி செய்தவன் பெரியன் என்பதும் புலனாகின்றது.

### 3.5.4.7மத்தி

பல வேற்படைகளையுடைய மத்தியினது 'கழாஅர்' ஊரில் பெண்கள் வெண்ணிற நாரைகளை ஓட்டி விளையாடுவதை,

"வல்வில் எறுழ்த்தோள் பரதவர் கோமான்
பல்வேல் மத்தி கழாஅர் முன்துறை" (அக.226:7-8)

எனும் அடிகளால் அறியலாம். இதனை, உறுதிப்படுத்தும் விதமாக, "மத்தி இவண் ஓர் உபகாரி. கழாஅர் என்னும் ஊருக்கு உரியவன். பரதவர் கோமான் வலிய வில்லைத் தாங்கிய வலிமை கொண்ட தோள்களையும் பல வேற்படைகளையும் உடையவன்"[63] என இரா.செயபால் அவர்கள் தமது நூலில் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. பாடலடிகளை நோக்க மத்தி என்பவன் கழார் எனும் பகுதியை ஆட்சிசெய்துள்ளமை தெளிவாகின்றது.

### 3.5.4.8 பொறையன்

கடற்கரைப் பகுதியில் அமைந்திருக்கும் 'தொண்டி' நகரை ஆண்டவன் பொறையன் இவன் வெல்லும் வேற்படையையுடையவனாகக் கடத்தற்கரிய சேனையையுடையவனாக இருந்துள்ளதை,

"கானல் அம் தொண்டிப் பொருநன் வென் வேல்
தேறல் அருந் தானைப் பொறையன்" (நற்.18:5-6)
"தின் தேர்ப் பொறையன் தொண்டி
தன் திறம் பெறுக" (நற்.8:10-11)

"திண்தேர்ப் பொறையன் தொண்டி முன் துறை" (குறு.128:2)

எனும் பாடல் அடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. மேற்கூறியவற்றை நோக்க, வளம் பொருந்திய கடற்கரை நகரமான தொண்டி நகரத்தைப் பொறையன் ஆண்டுள்ளதை அறிய முடிகின்றது. மேலும் "பொறையன் என்பது சேர வேந்தனையும் தொண்டி அவனது கடற்கரை நகரையும் குறிக்கும்"[64] என கு.வெ.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. இவ்வாறு மற்ற திணைகளைப் போன்று நெய்தல் நிலப் பகுதிகளைத் திணைத் தலைவர்கள் மட்டுமல்லாது தழும்பன், பெரியன், மத்தி, பொறையன் போன்ற பிற தலைவர்களும் ஆட்சி செய்துள்ளமையைக் அறியமுடிகின்றது.

### 3.6 பாலை நிலம்

ஐந்து திணைகளில் ஒன்றாகப் பாலைத் திணையைக் குறிப்பிட்டுள்ளனர். இந்நிலம் வறண்ட பகுதியாக இருந்துள்ளது. குறிஞ்சியும் முல்லையும் தம் இயல்பில் மாறும் போது இந்நிலை உருவாகும் என்பர். "குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் அடுத்தடுத்து இருப்பவை இவை முதுவேனிற் காலத்தில் தமக்குரிய நீர் வளத்திற்குறைந்து மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற மிக்க வெப்பத்தை அடையும் அக்காலத்தில் அந்நிலப்பகுதி 'பாலை' எனப் பெயர் பெறும்"[65] என இராசமாணிக்கணாரும் பாலை என்பது

ஒரு தனி நிலம் அன்று எனவும் முல்லை குறிஞ்சி நிலங்கள் வெயிலின் கொடுமையால் வளம் இழந்து நிற்கும்போது பாலை என்று குறிக்கப்படும் என்றும் தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால்வகை நாட்டுப்பகுதிகள் கொள்ளப்பட்ட போதிலும் வளம் மாறி நிற்கின்ற நிலையில் 'பாலை' எனக் கூறுவர். பாலையில் வெயில் மிகுதியால் மரஞ்செடி கொடிகள் கரிந்து, விலங்குகள் உணவும் நீரும் வேண்டும் அளவு பெறாது ஓய்ந்து காணப்படும் இதனைச் 'சுரம்' என அழைப்பர்"[66] என மு.சண்முகம்பிள்ளையும் கூறுவார். இவர்களின் கூற்றுப்படி ஒரு நிலம் இயல்பு நிலையிலிருந்து மாற்றம் பெற்று மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற சூழலில் தனித்தப் பகுதியாக மாற்றமடைகிறது என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.6.1 பாலை நில மக்கள்

வளம் குறைந்த பகுதியான இப்பாலை நில மக்களைஎயினர், மறவர், எயிற்றியர் எனக் குறிப்பிடுவர். "பாலைநிலத்து குடிமக்களுள் ஆடவர், எயினர், மறவர் எனப்பட்டனர். பெண்டிர் எயிற்றியர், மறத்தியர் எனப்பட்டனர்"[67] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. மேலும், எட்டுத்தொகை நூல்களில் பாலை நிலத்தில் வாழ்ந்த மக்களாக எயினர், எயிற்றியர், மறவர், கூளியர், மழவர், வேட்டுவர், கள்வர் போன்றோரைக் குறிப்பிட்டுள்ளமை கவனிக்கத்தக்கது. இதனை,

"கொடுவில் எயினர்" (குறு.12:3)
"கொலைவில் எயினர்" (ஐங்.363:2)
"கொடுவில் எயினர் கோட் சுரம் படர" (அக.79:14)
"எயினர் தந்த எய்ம் மான்" (புற.177:13)
"துவர் செய் ஆடைச் செந்தொடை மறவர்" (நற்.33:6)
"கொடுஞ்சிலை மறவர்" (குறு.331:3)
"வில் ஓர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்" (அக.35:6)
"வல் வில் மறவர்" (புற.259:4)
"விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்" (ஐங்.352:1)
"இரும் புலி வேட்டுவன்" (புற.19:5)
"கான் உறை வாழ்க்கை கத நாய் வேட்டுவன்" (புற.33:1)
"காந்தள் அம் கண்ணி கொலை வில் வேட்டுவர்" (பதி.30:9)
"கொள்ளை வல்சிக்கவர் காற் கூளியர்" (பதி.19:1)
"குரங்கு அன்ன புன் குறுங் கூளியர்" (புற.136:13)
"வழு இல் வன் கை மழவர் பெரும" (புற.90:11)
"நோன்சிலை மழவர்" (அக.119:9)
"கல்லா மழவர் வில்லிடை விலங்கிய" (நற்.387:5)

"………………. கள்வர்
பொன்புனை பகழி செப்பம் கொண்மார்" (குறு.16:1-2)

ஆகிய பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன.

### 3.6.2 பாலை நிலத்தார் இல்லம்

பாலை நிலமக்கள் புல்லால் வேய்ந்த குடிசையில் வசித்துள்ளனர். இவர்கள் கற்பாறைகளோடு ஒட்டிய குறுகிய குனிந்து செல்லக்கூடிய அளவில் சிதைந்த குடிசையிலும் புதர் போன்ற குடிசையிலும் தான் வாழ்ந்துள்ளனர். சிதைந்த குடிசையில் வாழ்ந்துள்ளது. எத்தகைய வறுமை நிலையில் வாழ்ந்துள்ளனர் என்பதற்குச் சான்றாகும். மறவர்கள் கற்கள் நிரம்பிய பகுதியில் குறும்பை என்று அழைக்கப்பட்ட அரண்களில் வாழ்ந்துள்ளனர். "கல் சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பை" (அக.129:6).

இதில் குறும்பு என்பதற்கு அரண் எனப் பொருள் கூறுவர். இவ்வாறு பாலை நிலத்தார் வாழ்ந்த பகுதி குறும்பு எனஅழைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இதனை, இராசமாணிக்கனார் பாலை நில மக்கள் வாழ்ந்த ஊர்கள் பறந்தலை, குறும்பு எனப் பெயர் பெற்றன"[68] எனக் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

### 3.6.3 பாலை நிலத்தார் உணவு

வறுமையில் வாழ்ந்த இப்பாலை நில மக்களின் உணவு முறை, எளிமையானதாகவே இருந்துள்ளது. இவர்கள் மான், எருதுஇறைச்சிகளையும் நெல், திணை, இவற்றைக் கொண்டு சமைத்த கள் வகைகளையும் உணவாக உண்டுள்ளனர். முள்ளம் பன்றி இறைச்சி இவர்களின் உணவில் முக்கிய இடம் பெறுகின்றது.

### 3.6.4 பாலை நிலத்தார் தொழில்

பாலை நிலம் நீரும் நிழலுமற்ற வளம் குறைந்த பகுதியாதலால் அங்கு வேளாண்மையோ மற்ற தொழில்களோ செய்வதற்கு ஏற்ற சூழல் அமையவில்லை. ஆதலால் அங்குள்ள மக்கள் காடு மலைகளுக்குச் சென்று வேட்டையாடுதல், அவ்வழி வருவோரை மறித்துப்பொருள்களைக் கைகொள்வது பிற இடங்களுக்குச் சென்று ஆநிரைகளைக் கவர்தல் கொள்ளையடித்தல் போன்ற பணிகளைச் செய்து வாழ்ந்துள்ளனர். மேலும் "இப்பாலை நிலமக்களின் தொழில் வழிப்பறிசெய்வதும் பகைவருடைய கால்நடைகளைக் கவர்வதும் ஊர்களுக்குச் சென்று கொள்ளையடித்து

வருவதுமாகும்”[69] என இராசமாணிக்கனாரும் “பாலை நில மக்கள் தம் தொழில் வேட்டையாடுதலும் வழிச் செல்வோரைவருத்தி அவர்தம் பொருள்களைப் பறித்து வருதலும் ஆம்”[70] என மு.சண்முகம்பிள்ளையும் தமது நூல்களில் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது. பாலைநிலத்தில் வாழ்ந்த மழவர் தம் தொழிலன்றி பிறவற்றைக் கல்லாதவராக விளங்கியுள்ளனர். வேட்டைத் தொழில் செய்தமையால் ‘வேட்டுவன்’ எனப் பாலை நிலத்தாரை அழைத்துள்ளனர்.

பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டைத் தொழில் மட்டுமல்லாது, அவ்வழியில் செல்வோருடைய பொருள்களைக் கொள்ளையடித்தும் வாழ்ந்துள்ளனர். இவர்கள் வலிமையான தோற்றம் கடுமையான பார்வையுடன் வழிச் செல்வோரை எதிர் நோக்கியுள்ளனர். பாலை நிலத்து வாழ்ந்த மக்கள் வேட்டைத்தொழில், வழிப்பறி செய்தல் இவற்றோடு பகைநாட்டாரின் பசுக்கூட்டங்களையும் கவர்ந்து வந்துள்ளனர். இங்கு ஆநிரை கவர்தல் தொழிலில் மறவர் மற்றும் மழவர் ஈடுபட்டுள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது. பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர், மறவர், மழவர், வேட்டுவர், கூளியர் போன்றோர் வேட்டையாடுதல், வழிப்பறி செய்தல், ஆநிரை கவர்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டு வாழ்ந்துள்ளமையை அறியமுடிகின்றது. குறிப்பாக, எயினர், வேட்டுவர் வேட்டையாடுதலிலும், மறவர், மழவர், கூளியர் என்போர் வழிப்பறிசெய்தல், ஆநிரை கவர்தல் போன்ற பணிகளிலும் ஈடுபட்டு வாழ்ந்திருப்பதைக் காணமுடிகின்றது. இலக்கியங்கள் மறவர், மழவர் என்ற பிரிவினரும் வேட்டுவர், கூளியர் என்று அழைக்கப்பட்ட எயினர் எனும் பிரிவும் வாழ்ந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.6.5 பாலை நிலத் தலைவர்கள்

இப்பாலை நில மக்களின் தலைவர்களாக மீளி, விடலை, காளை ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். “பாலை நிலத்தலைவன் விடலை, காளை, மீளி எனப்பட்டான்”[71] என இராச மாணிக்கனார் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

#### 3.6.5.1 விடலை

எட்டுத் தொகையில் பாலை நிலத் தலைவனான ‘விடலை’ பற்றிய குறிப்பே அதிகம் இடம்பெற்றிருக்கின்றது. இதற்கு

"..................ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு" (குறு.15:4-5)
"அம்பு அமை வல் வில் விடலை" (ஐங்.373:5)
"வென்வேல் விடலை" (ஐங்.364:4)

போன்ற அடிகள் சான்றாகின்றன.

### 3.6.5.2 **ஆதி**

பாலை நில மக்களுக்குத் தலைவனாகக் குறிப்பிடப்பெறும் 'ஆதி' ஆட்சி செய்த ஊரில் வருவோர்க்குக் கள்ளை அரண்களில் இருந்தவாறே அளித்துள்ளனர். வருவோரும் கள்ளோடு சேர்த்து களாப்பழம், துடரி எனும் ஒரு வகைப்பழம், நாவற்பழம் ஆகியவற்றைப் பறித்து உண்டுள்ளனர். அத்தகைய சிறப்பு வாய்ந்த ஊருக்குத் தலைவனாக 'ஆதி' குறிப்பிடப்பெற்றுள்ளான். எயினர்கள் வேட்டை ஆடிக் கொண்டு வந்த பன்றித் தசையோடு வெண்சோற்றுக் கட்டியைச் சேர்த்துப் பனையோலையில் செய்தக் குடையில் வழங்கியுள்ளமையை,

"பெரும் பயிர் ஆதி பிணங்கு அரில் குட நாட்டு
எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப்
பைஞ் ஞிணம் பெருத்த பசு வெள் அமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும் பனங்குடையின் மிசையும்" (புற.177:12-16)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. குறிஞ்சி முதல் பாலை வரையிலான ஐந்திணைகளிலும் மக்கள் மேற்கொண்டுள்ள உணவு, இருப்பிடம், தொழில், பாகுபாடு என அவர்களின் வாழ்க்கைமுறை மற்றும்'நிலமக்களும் அந்நிலமக்களுக்குத் தலைவர்களாகச் சிலரும் இருந்து ஆட்சி செய்துள்ளமையை மேற்கண்ட பகுதிகள் தெளிவுபடுத்துகின்றன.

## 3.7 தொழில் குடிகள்

எட்டுத்தொகை நூல்களில் மேற்கூறிய ஐந்து திணைகளில்வாழ்ந்த திணைசார்ந்த மக்கள் மட்டுமல்லாது தொழில் சார்ந்தபிரிவினரும் வாழ்ந்துள்ளனர். இவர்களை வாழ்வாதாரத்திற்கானத்தொழில் செய்வோர், வாணிகம் தொடர்பான தொழில் செய்வோர் மற்றும் கலையியல் தொடர்பான தொழில் செய்வோர் என மூன்று பகுதிகளாகப் பிரித்து ஆராயலாம்.

### 3.7.1 வாழ்வியல் தொழில்

வாழ்வாதாரத்திற்கானத் தொழிலில் ஈடுபட்ட மக்கள் பிரிவினரை வாழ்வியல் தொழில் செய்வோர் எனக் குறிப்பிடலாம்.

### 3.7.1.1 குயவர்

பண்டைய கால மனிதன் அன்றாட வாழ்வில் பயன்படுத்தக்கூடிய பானை, வட்டில், குடம், இறந்தவர்களைப் புதைப்பதற்குத் தாழிகள் போன்ற பலப்பொருட்களையும் மண்ணால் செய்துள்ளான். மண்ணால் கலங்களைச் செய்த குயவர்களைக் ‘கலஞ்செய்கோ’ என்றும் ‘வேட்கோ’ என்றும் அழைத்துள்ளனர். இவர்களது பிள்ளைகளும் அத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இதனை, புறப்பாடல் (32:8-9) குறிப்பிடுகின்றது. குயவரின் பிள்ளைகள் பானை செய்ய உதவும் சக்கரத்தில் பசிய மண்ணை வைத்துப் பசும்கலங்களைச் செய்து சூளையிலிட்டு எடுத்துள்ளனர். இதனை,

“கலம் செய் கோவே கலம் செய் கோவே
இருள் திணிந்தன்ன குரூஉத்திரள் பரூஉப் புகை
அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை
நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே
அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி
வனைதல் வேட்டனை ஆயின்” (புற.228:1-4,12-13)

எனும் அடிகளால் அறியலாம். இங்கு பெரும்புகைக் கொண்ட சூளையை உடைய, பழைய ஊரில் பொருட்களைச் செய்யும் குயவர்கள் இருந்துள்ளமை கவனிக்கத்தக்கது. இத்தகைய தொழில் பிரிவினரை, “மண்ணைக் கொண்டு வலக்கைக் கலங்களைச் செய்து சூளையில் சுட்டு மண்பாண்டங்களை, மக்களுக்கு வழங்குவர். தங்களுக்கு வேண்டிய பல்வேறு வகையான மண்பாண்டங்களைச் செய்வர். இத்தொழிலில் இவர்களுடைய சிறுவர்களும் ஒத்துழைப்பர்”[72] என்பதை மு.சண்முகம்பிள்ளையும், “மட்கலத் தொழில் செய்வோர் கலஞ்செய்கோ எனப்பட்டனர். வேட்கோ எனப்படுவாரும் இவர்களேயாவர். இவர்கள் மக்கள் வேட்கோச்சிறார் எனப்பட்டனர் என்றும் வீடுகளில் பயன்படும் சிறிய கலன்களோடு இறந்தோரை வைத்துப் புதைக்கும் பெரிய தாழிகளும் இவர்களால் செய்யப்பட்டன”[73]எனச் சசிவல்லியும் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்க கலங்களைச் செய்யும் குயவர்கள் இருந்துள்ளதும் அவர்களுக்கு ‘வேட்கோவர்’ எனப் பெயரிடப்பட்டுள்ளதும் திண்ணம். “உணவு சமைத்தற்குரிய கலங்களை மண்ணினால் வனையும் புத்தி நுட்டத்தினையுணர்ந்தவர் வேட்கோவர் ஆகிய குயவராவர்”[74] என்ற க.வெள்ளைவாரணனின் கூற்றும் மற்றொரு சான்றாக அமைகின்றது. இங்கு, குயவர்களை உரையாசிரியர்கள் வேட்கோவர் என்ற பெயரில் குறிப்பிட்டுள்ளனர். இது குயவர்களுக்கு வழங்கப்பட்ட பழையபெயர்களுள்

ஒன்றாகும். இச்சொல் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்காகும்.

### 3.7.1.2 கொல்லர்கள்

சங்க காலத்தில் மண் கொண்டு கலங்களைச் செய்தது போல, இரும்பு, பொன், செம்பு போன்ற உலோகங்களைப் பயன்படுத்தி மக்களுக்குப் பயன்படக்கூடியப் பலவகையானப் பொருட்களைச் செய்துள்ளனர். இவர்களைக் கொல்லர்கள் என்று அழைத்துள்ளனர். மேலும் இரும்பை உருக்கி வேலை செய்பவனை இரும்புக் கொல்லன் என்றும் பொன்னை உருக்கி பொன்னாலானப் பொருட்கள் செய்பவனைப் பொற் கொல்லன் என்றும் அழைத்துள்ளனர்.

#### 3.7.1.2.1 இரும்புக் கொல்லன்

இரும்பினால் ஆன பொருட்களைச் செய்யும் கொல்லனுக்கு இரும்புக் கொல்லன் என்று பெயர். இவர்கள் தொழில் செய்த இடம் 'கொற்றுறை' என அழைக்கப்பட்டது. அங்கு நெருப்பைத் தூண்டுவதற்கென உலை அமைக்கப்பட்டுள்ளது. இரும்பைக் காய்ச்சி அடிக்கும் கூடத்தில் இரும்பினது வெம்மையை நீக்குதற்கு 'மடலால் நீர் தெளித்துள்ளனர். தமது கூடத்தில் போர்க்கருவிகள், வீட்டுப் பொருட்கள், வேளாண் கருவிகள் ஆகியவை செய்யப்பட்டுள்ளன. இரும்பை அடிக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள இக்கொல்லன் வலிமையுடையவனாக இருந்துள்ளான், என்பதைப் புறநானூறு (170 15-17) குறிப்பிடுகின்றது. இத்தகைய வலிமையுடைய கொல்லன் படைக்கலன்கள் வடித்துக் கொடுத்துள்ளதை,

"படை பண்ணிப் புனையவும்" (கலி.17:1)
"………………….. தன் ஊர்க்
கருங் கைக் கொல்லனை இரக்கும்
திருந்து இலை நெடு வேல் வடித்திசின்" (புற.180:11-13)
"வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" (புற.180:11-13)

போன்ற பாடல் அடிகளால் அறியலாம். இப்பாடல்களில் படைக்கருவிகள் வடித்துக் கொடுத்தல், வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லனுக்குரிய கடமையாகக் கூறப்பட்டுள்ளது. அரசு உருவாக்கத்திற்கு அடிப்படை போர்க்கருவிகள் அத்தகைய போர்க்கருவிகளை வடித்துத் தரக்கூடிய முதன்மைத் தொழிலைக் கொல்லர்கள் செய்து வந்துள்ளனா். போர்க்கருவிகள் மட்டுமல்லாது நீண்ட கைப்பிடியுடைய கோடாரி போன்ற

கருவிகளும் செய்துள்ளனர். இதனை, புறநானூற்றுப் (36:6-8) பாடல் சுட்டுகின்றது.

இவற்றை நோக்க இரும்பை மூலப் பொருளாகக் கொண்டு தொழில் செய்தக் கொல்லர் எனும் தொழிற் பிரிவினர் இருந்துள்ளமையை அறியமுடிகின்றது.

**3.7.1.2.2 பொற்கொல்லன்**

பொன் கொண்டு அணிகலன் செய்யும் பிரிவினரைப் 'பொற்கொல்லன்' என்பர். இவர்கள் பொன்னை உருக்கி வளையல், சிலம்பு, மேகலை, மாலை, சுரிதகம், தலைக்கோல் என மக்களுக்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் செய்து வந்துள்ளனர். இவர்களைக் 'கம்மியர்' என்று அழைத்துள்ளமையை

"பொன் செய் கம்மியன் கைவினை கடுப்ப
தகை வனப்புற்ற" (நற்.313:2-3)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. இவர்கள் அழகான அணிகலன்களைச் செய்துள்ளனா். இவர்கள் சுரிதகம், வளையல், கிண்கிணி, சிலம்பு போன்றவற்றைக் செய்துள்ளமையைச் சங்க இலக்கியப் பாடல்கள் (நற்.86:4-6,197:8-9 கலி.54:6,85:1-2 பரி.21:18-19) குறிப்பிடுகின்றன. பொன்தகடு பதிக்கப்பட்ட தேர் (குறு.205:3), நெற்றிப்பட்டம் (புற.126:1), பூ (பதி.1), கழல் (புற.40:3-5 புற.29:1-3) மாலை போன்ற பலவும் செய்துள்ளனர். "பொன்னால் ஆன நகைகளைச் செய்யும் பொற்கொல்லர்கள் இருந்தனர். இவர்கள் பொன்னை உருவாக்கிப் பல்வேறு அழகிய அணிகலன்களைச் செய்தனர்"[75] என அ.பாண்டுரங்கன் குறிப்பிட்டுள்ளாா். பொன் உருக்கி அணிகலன் செய்வார் மட்டுமின்றி பொன் உரைப்பாரும் இருந்துள்ளதை.

"பொன் உரை கல்லின் நல் நிறம் பெறூஉம்" (நற்.25:4)

எனும் அடியால் அறியலாம். பொன்னை உரைத்துப் பார்த்தலுக்குக் கல் பயன்படுத்தியுள்ளனா். இதனை, "ஆபரணம் செய்யும் தட்டரோடு பொன்னுரை காண் தட்டாரும் பணித்தட்டாரும் வெவ்வேறு பணிகளைச் செய்தனர்"[76] எனும் மு.சண்முகம் பிள்ளையின் கூற்று அவர்களுள் தொழிற் பிரிவினர் இருந்துள்ளதை உணா்த்துகின்றது.

### 3.7.1.2.3 கம்மியர்

இரும்பு, பொன் இவற்றால் பொருள்கள் செய்வதைப் போன்று செம்பு, வெள்ளியால் பொருட்கள் செய்துள்ளனர். இவர்களைக் ‘கம்மியர்’ எனும் சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

“…………..வெள்ளி
உருக்குறு கொள்கலம் கடுப்ப” (நற்.124:6-7)
“வெள்ளிவிழுத்தொடி மென்கருப்ப உலக்கை” (அக.286:1)

எனும் பாடலடிகள் வெள்ளியை உருக்கும் கொள்கலம் வெள்ளியால் செய்யப்பட்ட பூண் உலக்கையிற் பொருத்தப்பட்டுள்ளதையும் குறிப்பிடுகின்றன. “சங்ககால மக்கள் பொன், வெள்ளியால் ஆகிய அழகிய தொழிற்றிறம் விளங்கும் அணிகலன்கள் செய்வதில் தேர்ந்திருந்தனர்”[77] எனும் கூற்றும் இத்தகைய தொழிற் திறம் வாய்ந்த தொழில் பிரிவினா் இருந்துள்ளமையைத் தெளிவுபடுத்துகிறது.

செம்பு கொண்டு பானை முதலிய பொருட்களைச் செய்துள்ளனர். இவர்களைச் “செம்பினால் கலம் செய்வார் செம்பு கொட்டிகள் எனப்படுவர்”[78] என வெள்ளைவாரணன் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இலக்கியங்களில் ‘கம்மியர்’ என்றே இவர்கள் அழைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் பாத்திரங்களைக் கடைகின்ற பொழுது மின்னல் போல் ஒளி தோன்றுவதை, (நற்.153:2-3) பாடல் விளக்குகின்றது. செம்பு செய்கின்ற கம்மியர் “செம்பை நிறுத்து வாங்கி, பானை முதலிய கலங்களைச் செய்வதற்கு மண்ணால் உரு செய்து செம்பை உருக்கி வார்த்து அமைப்பர்”[79] என மு.சண்முகம்பிள்ளையும் “செம்பு போன்ற உலோகங்களைப் பயன்படுத்தி வீட்டுக்குப் பயன்படும் செப்புக் கலங்களைச் சமைத்த தொழிலாளர்களும் இருந்தனர். வார்ப்படத் தொழிலும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. தாம் செய்ய வேண்டிய பொருள்களை முதலில் மண்ணால் உருவாக்கி, அதன் மேல் செம்பைக் காய்ச்சி ஊற்றி வடிப்பர். அவ்வாறு வடித்த பாத்திரங்களைக் கடைந்து அவற்றுக்கு அழுத்தம் கொடுப்பர்”[80] என அ.பாண்டுரங்கனும் குறிப்பிடுவா். மேலும், அவர்கள் மண்ணால் உருவம் செய்வதற்குரிய மண்ணைத் துறைகளிலிருந்து எடுத்து வந்ததை,

“………………. கம்மியன்
பொறி அறு பிணைக் கூட்டும் துறை மணல் கொண்டு
வம்மோ” (நற்.363: 4-6)

எனும் நற்றிணைப்பாடல் குறிப்பிடுகின்றது. எனவே, சங்க காலத்தில் செம்பு மற்றும் வெள்ளி கொண்டு வீட்டுக்குத்தேவையான பொருட்களைச் செய்துகொடுக்கும் கம்மியர்கள் வாழ்ந்துள்ளமை தெளிவு.

### 3.7.1.3 தச்சர்

இரும்பு, பொன், செம்பு, வெள்ளி இவற்றைக் கொண்டு பொருள்கள் செய்து வந்த தொழிற்பிரிவினரைப் போன்று மரத்தாலானப் பொருள்களைச் செய்து வாழ்ந்த ‘தச்சர்’ பிரிவினரும் இருந்துள்ளனர். இவர்கள் தேர், வண்டி போன்ற ஊர்திகளையும் கதவு போன்ற வீட்டுப்பொருள்களையும் செய்துள்ளனர். ஒரு நாளில் எட்டுத் தேர்களைச் செய்யும் அளவிற்குத் தொழிற்திறம் வாய்ந்தவர்களாக இருந்துள்ளனர். இதனை,

“………………வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோனே” (புற.87:2-4)

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. குற்றமற சிறிய, நெடிய தேர்களைச் செய்த தச்சர்களுக்கு அவர்களது சிறார்களும் உதவி புரிந்துள்ளனர். இதனை புறநானூறு (புற.206:11-12) விளக்குகின்றது. இப்பாடலில் சிறுவர்களும் பொருட்கள் செய்வதற்கேற்ப, மரத்தினை வெட்டுவதற்குக் காடுகளுக்குச் சென்று உதவியுள்ளனர். மேலும், அரண்மனை வாயிற்கதவுகளையும் தச்சர்கள் செய்துள்ளனர். இதனை,

“…………பொன் பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவின் கதவு மெய் காணின்” (பதி.53:15-16)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. மேலும், “மரத்தினை அறுத்து வீடமைத்தற்கும் வண்டி தேர் முதலியன செய்தற்கும் வழி கண்ட பெருமை தச்சர் என்னும் தொழிலாளர்களுக்கே உரியதாகும்”[81] என்ற வெள்ளை வாரணன் கூற்றும் “மரவேலை செய்பவர் தச்சர் எனப்பெற்றனர். போருக்குரிய தேர்களும் இவர்களால் செய்யப்பட்டன. அரசர்களின் அரண்மனைகளில் இருந்த வாயில்களும் வாயில் கதவுகளும் கோட்டைக் கதவுகளும் கோட்டைக் கதவுகளைப் பாதுகாக்கப் பயன்பட்ட குறுக்குச் சட்டமான கணையமும் தச்சரால் செய்யப்பட்டன”[82] என்னும் பாண்டுரங்கன் கூற்றும் தச்சுத் தொழில் செய்த தச்சர்களின் திறத்தைக் காட்டுவதாய் அமைகின்றது. இவற்றை நோக்க, தச்சா் என்னும் பிரிவினா் வாழ்ந்துள்ளமை தெளிவாகின்றது.

### 3.7.1.4 பருத்திப் பெண்டிர்

மக்களுக்கு உணவினை அடுத்து இன்றியமையாதது ஆடையாகும். அத்தகைய ஆடையை உருவாக்கும் நெசவுத் தொழிலுக்குத் தேவையான நூலை நூற்கும் தொழிலை ஆண்,பெண் இருவரும் செய்துள்ளனர். நெசவுத் தொழிலுக்குப் பருத்தி மிகவும் தேவையான ஒரு மூலப்பொருள் எனலாம். அவ்வகையில் பருத்திப் பஞ்சிலிருந்து நூல் எடுக்கும் தொழிலில் கைதேர்ந்தவர்களாகப் பெண்கள் இருந்துள்ளனர். இத்தொழில் செய்த பெண்களைப் 'பருத்திப் பெண்டிர்' என அழைத்துள்ளனர். இவர்கள் பருத்தியிலிருந்து பஞ்சைப் பிரித்தெடுக்க ஒருவகையான வில் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன" (புற.125:1)
''எ.ஃகுறு பஞ்சிற்று ஆகி" (நற்.247:4)
"வில்எறி பஞ்சியின் வெண்மழை தவழும்" (அக.133:6)

போன்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், "மகளிர் பருத்திப் பஞ்சினைக் கடைந்து செப்பஞ்செய்து நுண்ணிய நூலாக நூற்குந் தொழிலிற் கைத்திறம் பெற்று விளங்கினார்கள்"[83] எனும் க.வெள்ளைவாரணன் கூற்றும் பெண்கள் நூல் நூற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தமையைக் குறிப்பிடுகின்றது. பெண்கள் மட்டுமல்லாது நூல் நூற்போன் குறித்த கலித்தொகைப்பாடல் ஒன்றும் இடம்பெற்றுள்ளது.

"செந்நூற் கழிஒருவன் கைப்பற்ற அந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம்" (கலி.103:30-31)

எனும் இப்பாடல் நூலை ஒருவன் பிடித்துக் கொள்ள மற்றொருவன் அந்நூலை மூன்றாக நூற்கும் இயல்பினை விவரிக்கின்றது.இவ்வாறு சங்ககாலத்தில் பருத்திப்பஞ்சு எடுக்கும் பணியை, குறிப்பாகப் விதவைப் பெண்கள் செய்து வாழ்வாதாரத்திற்குப் பயன்படுத்தியுள்ளதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 3.7.1.5 அறுவையர்

நூல் நூற்பதையும் அந் நூல் கொண்டு ஆடை நெய்யும் தொழிலையும் சங்க காலத்தில செய்துள்ளனர். இத்தொழில் புரிந்தவர்களை நெசவாளர்கள் என்று கூறுவர். சங்க இலக்கியத்தில் ஆடை, நெய்தலில் ஈடுபட்டவர்களை 'அறுவையர்' என்று அழைத்துள்ளனர். இவர்களுக்குக் 'காருகர்' என்ற பெயரும் இருந்துள்ளது. இவர்கள் நுண்ணிய நூலினால் நுட்பமாக ஆடை நெய்துள்ளனர். புகையைப் போன்ற மென்மையாக

நெய்யப்பட்ட ஆடைகளுக்குப் பூ வேலைப்பாடுகளும் செய்து அழகுபடுத்தியுள்ளனர். இதனை

“………………. நேர்கரை
நுண்நூல் கலிங்கம் உடீஇ” (புற.392:14-15)
“…………….தன் அரைப்
புகைவிரிந்து அன்ன பொங்குதுகில் உடீஇ” (புற.398:19-20)
“………..விரிநூல் அறுவையர்” (பதி.34:3)

போன்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இங்கு நுண்ணிய நூல் கொண்டு மென்மையான ஆடைகளை நெய்துள்ளனர். சங்க இலக்கியத்தில் ஆடையைக் குறிக்கத் துகில், கலிங்கம், அறுவை போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேலும், இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாத வகையில் பூவாலே ஆடை நெய்யப்பட்டதைப் புறப்பாடல் (புறம்383:10-12) குறிப்பிடுகின்றது. மேலும், பாம்பின் தோலை ஒத்த வெள்ளிய பூ வேலை செய்யப்பட்ட ஆடைகள் மற்றும் பிற வண்ண ஆடைகள் ஆகியவற்றைப் பூ வேலைப்பாடுகளுடன் செய்துள்ளமையை நற்றிணை (90:4) புறநானூறு (397:15) கலித்தொகை (111:2-3) போன்ற இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. “நுண்மையான நூலைக் கொண்டு நெய்யப்பட்ட ஆடையினுடைய இழைகளின் வரிசைகளைக் காண்பதற்கு இயலாத வகையில் நுட்பமாக நெய்யப்பட்டிருந்தது என்றும் மென்மையாக நேர்த்தியுடன் நெய்யப்பட்ட ஆடைகளுக்கு மேலும், அழகூட்டும் வகையில் நேரிய கரைகள் அமைத்து அதில் அழகிய பூ வேலைப்பாடுகளும் செய்தனர்”[84] எனும் கருத்தும் நோக்கத்தக்கது. சங்ககாலத்தில் ஆடை நெய்தல் மட்டுமல்லாது அவற்றுக்குப் பூ வேலைப்பாடுகளும் சிறப்பாகச் செய்து ஆடை நெய்துள்ளனர்.

### 3.7.1.6 புலைத்தி

சங்க காலத்தில் ஆடைகளைப் பல விதமாக நெய்து கொடுத்த தொழிற்பிரிவினரைப் போன்று, அவற்றைத் தூய்மையாக அழுக்குப் போகத் துவைக்கும் பணியைச் செய்வோரும் இருந்துள்ளனர். அத்தகைய சலவைத்தொழில் செய்து வந்தோரைச் சங்க இலக்கியம் ‘புலைத்தி’ மற்றும் காழியர்’ என்று குறிப்பிடுகின்றது. இப்புலைத்தி நீர்த்துறைக்குச் சென்று துணிகளை வெளுத்திருக்கிறாள். அதுமட்டுமல்லாது, ஊரில் உள்ள அனைவருடைய ஆடைகளையும் வெளுக்கும் வழக்கத்தினைக் கொண்டிருந்ததை,

“நாடி நின் தூது ஆடி துறை செல்லாள் ஊரவர்
ஆடை கொண்டு ஒலிக்கும் நின் புலைத்தி” (கலி.72:13-14)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. “ஊரவர்களின் அழுக்கு உடைகளை எடுத்துச் சென்று நீரில் தோய்த்து வெளுக்கும் மக்களும் இருந்தனர் இத்தொழிலைச் செய்பவள் புலைத்தி என்று அழைக்கப்படும் பெண்பாலராவர்”[85] என சண்முகம்பிள்ளை கூறுவதும் நோக்கத்தக்கது. முதலில் உவர் மண் கொண்டு சென்றும் பின்பு உவர்நிலத்தில் நீருள்ள இடமாகக் கண்டறிந்து அந்த இடத்தில் பள்ளம் தோண்டி ஆடைகளை வெளுக்கும் முறையும் புலைத்தியரிடம் வழக்கத்திலிருந்துள்ளமையை,

“களர்ப்படு கூவல் தோண்டி நாளும்
புலத்தி கழீஇய தூவெள் அறுவை” (புற.311:1-2)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் விழாக்காலங்களில் கூட ஓய்வின்றி ஆடை வெளுத்திருக்கின்றனர். இதனை,

“ஆடியல் விழவின் அழுங்கல் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு” (நற்.90:1-4)

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. விழாக்காலங்களில் ஒட்டுமொத்த மக்களும் மகிழ்ச்சியில் திளைத்த போது, புலைத்தி மட்டும் இரவு பகல் பாராமல் உழைப்பவளாகக் காட்டும் இப்பாடலில் வறுமையில்லாத ஆடையொலிக்கும் புலைத்தி எனக் குறிப்பிட்டுள்ளமை முரண்பாடு உடையதே. மேலும் “கூத்து முதலான களியாட்டங்கள் ஒருபால் நிகழ ஓயாது விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கும் மூதூர்களில் ஆடைகளைப் பருத்தி ஆடை, பட்டாடை என இனம் பிரித்து அழுக்குப் போகத் துவைத்தளிக்கும் தொழிலைக் கையோய்வதில்லாமல் செய்பவள்”[86] என்ற பி.டி.சீனிவாச அய்யங்காரின் கூற்றும் இணைத்து நோக்கத்தக்கது. களர்நிலத்தில் கிணற்றைத் தோண்டி ஊறிவரும் நீரில் ஆடைகளை வெளுப்பதால், ஆடைகளில் உள்ள அழுக்குப் போய்விடும் என்ற அறிவியல் உண்மையை அறிந்தவர்களாகச் சங்க கால மக்கள் செயல்பட்டள்ளமை கவனிக்கத்தக்கது. மேலும், தொழிற் பிரிவினரான இப்புலைத்தி ஆடை வெளுத்தலோடு புட்டில் செய்து விற்கும் தொழிலையும் செய்துள்ளனர். இதனை, கலித்தொகைப் பாடல் (117:7-9) சுட்டுகின்றது. மேற்கூறியவற்றை நோக்க முதன்மைத் தொழிலான சலவைத் தொழில் செய்து வாழும் தொழிற் பிரிவினருக்கு அவர்களின் தொழிலில் போதிய வருமானம்

கிடைக்காத போது பிறத் தொழிலிலும் ஈடுபட்டு வாழ்ந்துள்ளனர் என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.7.1.7 புலையர்

சங்க காலத்தில் சலவைத் தொழில் செய்த பிரிவினர் 'புலைத்தி' என்று அழைக்கப்பட்டதைப் போன்று 'புலையர்' என்ற ஒரு தொழிற்பிரிவினரும் இடம் பெறுகின்றனர். இவர்கள் துடி கொட்டி செய்தி அறிவித்தல், பிணம் எறித்தல், ஈமச் சடங்கு செய்தல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர். செய்தி அறிவிக்கும் தொழிலில் புலையா் ஈடுபட்டுள்ளதைப் பின்வரும் பாடல்கள் சுட்டுகின்றன.

"மலையன் மாஊர்ந்து போகி புலையன்
பெருந்துடி கறங்கப் பிறபுலம் புக்கு அவர்" (நற்.77:1-2)

"துடி எறியும் புலைய" (புற.287:1)
"…………….. ஒல்லென
இழிப்பிறப்பாளன் கருங்கை சிவப்ப
வலி துரந்து சிலைக்கும் வன் கண் கடுந்துடி" (புற.170: 4-6)

இங்குத் துடி கொட்டும் புலையனைப் புறநானூறு இழிபிறப்பாளன் எனக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. இவன் தன் கைகள் சிவக்கச் சிவக்கத் துடி கொட்டும் தொழிலைச் செய்துள்ளான். பாசறையில் போர்க்குரிய பூவை மறவர்க்குத் தரும் நாள் இன்று என்று செய்தி அறிவிப்பவனாக இருந்துள்ளான். இதனை,

"……………….பாசறை
பூக்கோள் இன்று என்று அறையும்
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே" (புற.289:8-10)

எனும் அடிகளால் அறியலாம். இங்கும் புலையனை 'இழிசினன்' எனக் கூறியிருப்பது கவனத்திற்குரியது. "புலையன் போருக்குப் பூக் கொள்ளுமாறு வீரர்களை அழைத்து பறையறையும் தொழிலும் இவர்களுக்குண்டு"[87] என்பதை மு.சண்முகம்பிள்ளை குறிப்பிடுவது நோக்கத்தக்கது. அதனோடு அகநூல்கள் புலையன் எனவும் புறநூல்கள் இழிசினன், இழிபிறப்பாளன் எனக் கூறி அவர்களைக் கீழானவர்களாகக் கூறியிருப்பதை அறியமுடிகின்றது. இவர்கள் சுடுகாட்டில் இறந்தவர்களுக்குப் பலி உணவு படைத்தல், பிணஞ்சுடுதல் போன்ற ஈடமச் சடங்குகள் செய்துள்ளமையைப் புறப்பாடல் (363:10-15) குறிப்பிடுகின்றது. கள்ளிச் செடிகள் மூடிய முட்கள் நிறைந்த காட்டில் இறந்தவர்களைப் பாடையில் கொண்டு போய் வைத்து அங்கு உப்பில்லாத உணவைப் புறம் நோக்காது இழிப்பிறப்பினோனாகியப்

புலையனால் பலி உணவாக வீசியெறியப்படுவதைக் குறிப்பிடுகின்றது. “இறந்த பின்னர் பிணத்தைப் பாடையிற் கொண்டு செல்வர். பிணத்தைச் சிதையிற் கிடத்தியப் பின்னர் உப்பின்றி வேகவைத்த சோற்றைப் பலி உணவாகப் படைத்து அந்தச் சோற்றைப் புலையன் பின்புறம் பாராது நின்று மண்ணில் விட்டெறிவான்”[88] எனும் கு.வெ.பாலசுப்பிரமணியம் கருத்து பிணத்தை எரியூட்டுவதற்கு முன் நிகழும் நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகின்றது. பிணத்தைப் புல் மீது கிடத்தி கள்ளுடனே சில சோறாகிய உணவைப் படைத்து, பின் சுடலைத் தீயில் புலையன் சுட்டெறித்துள்ளதை,

“புலையன் ஏவ புல்மேல் அமர்ந்து உண்டு
அழல்வாய்ப் புக்க” (புற.360:19,20)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. இதனை மெய்பிக்கும் வகையில் “இடுகாட்டில் செய்யும் கிரியைகளைப் புலையர்கள் செய்துள்ளனர். எனவே இன்று போல் அன்றும் புலையர் பிணம் சுடும் கடமையை மேற்கொண்டிருந்தமை தெளிவு”[89]என அ.தட்சிணாமூர்த்தியும் “இறந்தோரை அடக்கம் செய்யும் ஈமச் சடங்கில் பங்கு பெற்றவனைப் புலையன் என்றனர்”[90] என ராஜ்கௌதமனும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளவற்றை நோக்க ஈமச்சடங்கு செய்யும் தொழிலில் புலையர் ஈடுபட்டிருந்தமை தெளிவு.

### 3.7.1.8 ஓவியர்

சங்க காலத்தில் கண்ணால் கண்ட காட்சிகள் மற்றும் தம் உள்ளத்தில் தோன்றும் காட்சிகளை உயிரோட்டத்துடன் வரையும் திறம் உடையவர்கள் இருந்துள்ளனர். இவர்களை ‘ஓவமாக்கள்’ என்று அழைத்துள்ளனர். இவர்கள் சுவர்கள்,போர்க்கருவியான பறை ஆகியவற்றிலும் ஓவியங்களைத் தீட்டி மகிழ்ந்துள்ளதை,

“……………புனைசுவர்ப்
பாவை அன்ன பழி தீர் காட்சி” (நற்.252:6-7)
“காழ் புனைந்து இயற்றிய வனப்பு அமை நோன்சுவர்ப்
பாவையும் பலி எனப் பெறாஅ” (அக.369:7-8)

போன்ற அடிகள் குறிப்பிடுகின்றன. “சுவரோவியங்கள் நெய்யோவியங்களாகவும் (Oilpaintings) சுதையோவியங்களாகவும் (Frescoes) செய்வதுண்டு. சுதை ஓவியம் என்பது சுவரில் சுதை பூசி அது உலராமல் ஈரமாயிருக்கும்போதே ஓவியம் தீட்டுவதாகும். ஏனைய நாடுகளைப் போலவே தமிழ் நாட்டிலும் முதன் முதலாக எழுதப்பட்ட ஓவியம் சுவரோவியங்கள்”[91] எனும் சசிவல்லி கூற்றும் இணைத்து நோக்கத்தக்கது.

அரண்மனை, மாளிகை, சுவர், பறை ஆகியவற்றில் ஓவியம் தீட்டியுள்ளமையை நற்றிணைப் பாடல் (58:2-3) சுட்டுகின்றது. இதனை, உறுதிப்படுத்தும் விதமாக, "பறை போன்ற தோற்கருவிகள் எழிலுடன் விளங்கத் தோற்பகுதியின் மேல் ஓவியங்கள் வரையப்படுதலுண்டு"[92] எனும் கூற்றும் அமைகிறது. இங்கு முதலில் ஓவியம் சுவரில் தீட்டியுள்ளதாகக் குறிப்பிடுவது சிந்தனைக்குரியது. ஏனெனில் பெரும்பாலும் மரப்பலகை, துணிகளில் ஓவியங்கள் தீட்டும் மரபு தமிழகத்தில் இருந்துள்ளது. ஆகையால் இவற்றைக் கால அடிப்படையில் ஆய்வு செய்யவதே சிறப்பு. இத்தொழில் செய்யும் ஓவியர் 'துகலிகை' எனும் எழுதுகோலில் அரக்குத் தோய்த்து ஓவியம் எழுதியுள்ளமையை நற்றிணை அடிகள் குறிப்பிடுகின்றன.

"ஓவமாக்கள் ஒள் அரக்கு ஊட்டிய
துகலிகை அன்ன" (நற்.118:7-8)

இவர்கள் ஓவியம் வரைதலில் திறமையுடையவராக இருத்தலால் அழகு நிரம்ப வரைந்துள்ளனர். மேலும், வரையும் ஓவியத்திற்கு உயிர் இருப்பது போன்று வரையும் திறம் உடையவராக விளங்கியுள்ளதை,

"தாய் உயிர் பெய்த பாவை போல" (பதி.61:3-4)

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இவற்றை நோக்க சங்ககாலத்தில் கண்ணுக்கினிய ஓவியங்களை வரைவோர் இருந்துள்ளமை தெளிவாகிறது.

#### 3.7.1.9 மருத்துவர்

சங்க காலத்தில் நோய் தீர்க்கும் மருத்துவர்கள் இருந்துள்ளனர். இவர்களை 'அறவோன்' எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். நோயைக் குணப்படுத்தும் அறச்செயலைச் செய்துள்ளமையால் இவர்களுக்கு 'அறவோன்' என்ற பெயர் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். இம் மருத்துவன் நோய்க்குரிய மருந்தை, சிறந்த முறையில் அளித்துள்ளதை,

"அரும் பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது
மருந்து ஆய்ந்து கொடுத்து அறவோன் போல"
"திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்து போல்" (கலி.17:19-20)

என்ற பாடலடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. மருத்துவன் நோயால் வாடும் ஒருவனுக்கு அந்நோய் தீர்க்கும் மருந்தையும் அதன் திறத்தையும் அறிந்து இன் உயிரை மீட்டுத் தரும் அற்புதமான பணியைச் செய்துள்ளமையை,

“வருந்திய செல்லல் தீர்த்த திறன் அறி ஒருவன்
மருந்து” (கலி.129: 23-24)

“இன் உயிர் போத்தரும் மருத்துவர் ஆயின்” (கலி.137:25)

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. நோய் தீர்க்கக்கூடிய மருத்துவன் அந்நோய் தீர்க்கும் மருந்தை மரத்திலிருந்தே எடுத்துப் பயன்படுத்தியுள்ளமையை, புறநானூறு (180:4-6), நற்றிணை (226:1) பாடல்கள் குறிப்பிடுகின்றன. “பழந்தமிழ் சமுதாயத்தில் நோய் தீர்க்கும் மருத்துவர் இருந்தனர். அக்காலத்தில மருத்துவர்களை அறவோன் என்றும் மருத்தன், மருத்துவன் என்றும் அழைத்தனர்”[93] எனும் கருத்தும் இதனை உறுதிப்படுத்தும். மேற்கூறியவற்றை நோக்க மக்களின் பிணியறிந்து மருந்து கொடுக்கும் தொழிலினா் இருந்துள்ளமை தெளிவு.

### 3.7.1.10 சமையல் தொழில்

சங்க காலத்தில் பெண்கள் வரும் விருந்தினருக்கு அரிய பல உணவுகளைச் சமைத்து விருந்தோம்பல் செய்வது மட்டுமல்லாது அதை ஒரு தொழிலாகவும் செய்துள்ளனர். அவர்களை ‘அடுமகள்’ எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். இவர்கள் சமைக்கும் பகுதியை ‘அட்டில்’ எனவும் குறிப்பிட்டுள்ளனர். “உணவு சமைக்கும் பகுதியை ‘அட்டில்’ என்பர். சமைக்கின்ற பாத்திரத்தை ‘அடுகலம்’ என்றும் சமைக்கின்ற பெண்பாலரை அடுமகள் என்றும் குறிப்பர்”[94] என சண்முகம்பிள்ளையும் “சமைக்கும் கலையையே தாம் செய்யக் கூடிய தொழிலாக மேற்கொண்டு வாழ்ந்த மகளிரும் இருந்துள்ளனர். இப்பெண்டிர் அடுமகளிர் எனப்பட்டனர்”[95] எனச் சசிவல்லயும்குறிப்பிடுவது நோக்கத்தக்கது. இத்தொழில் செய்தோர் பல்வேறு வகையான உணவுகளைச் சமைத்துள்ளனர். கனியைச் சமைத்து புளிக் குழம்பு, சுறாமீனின் இறைச்சி, வள்ளைக் கீரை, பாகற்காய், இவற்றோடு சோறு சமைத்து வழங்கியுள்ளமையை,

“அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்
தொடிமாண் உலக்கைப் பரூஉக்குற்று அரிசி
..................................
..............................
மெய்களைந்த இன்னொடு விரைஇ
மூழ்ப்பப் பெய்த முழு அவிழ்ப் புழுக்கல்” (புற.339:1-9)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. “உயிர் வாழ்க்கைக்கு ஆக்கந்தரும் சமையற்றொழில் அக்காலத்து ‘அட்டிற்றொழில்’ என வழங்கப்பட்டது. புலால்

கலந்த உணவினை அமைத்தலும் புலால் கலவா உணவினை அமைத்தலும் எனச் சமையல் முறை இருவகையாகக் கொள்ளப்பட்டது"[96] என்கிறார் க.வெள்ளைவாரணன். ஆகவே சைவ மற்றும் அசைவ உணவுகள் சமைக்கப்பட்டிருப்பது தெரிய வருகின்றது. பரிபாடல் (86:121), பதிற்றுப்பத்து (24:18-22), நற்றிணை (300:12) போன்ற பாடல்கள் சமைக்கும் இடங்களில் சமையல் தொழிலாளர்கள் இருந்து புலால் உணவு சமைத்து யாவரும் வியக்கும் வகையில் குறைவுப்படாது வழங்கியுள்ளமையை விளக்குகின்றன. இவற்றை ஆராயும்போது சமையல் செய்த தொழிற்பிரிவினரும் இருந்துள்ளமை புலனாகிறது.

### 3.7.1.11 தோல்தொழில்

இயற்கையொடு இயைந்த வாழ்வை மேற்கொண்ட சங்க கால மக்கள் தோலின் பயனறிந்து வாழ்ந்துள்ளனர். விலங்குகளின் தோலைப் பயன்படுத்திப் போர்க்கருவிகள், இசைக்கருவிகள் அன்றாட வாழ்வில் பயன்படுத்தக்கூடிய பொருட்கள் எனப் பலவற்றை, சீரிய முறையில் செய்து தந்துள்ளனர். போர்க்கருவிகளில் முக்கியமாக முரசு, பறை, கேடயம் மற்றும் பொருட்களை எடுத்துச் செல்வதற்குத் தோலினால் செய்த பை ஆகியவற்றைச் செய்துள்ளனர். போர் முரசு மிகவும் முக்கியமான ஒரு கருவி வீரமுடைய இரு காளைகளை மோதவிட்டு வென்ற காளையின் தோலை மயிர் சீவாது முரசு செய்துள்ளனர். இதனை,

"மண்கொள வரிந்த வைந் நுதி மருப்பின்
அண்ணல் நல் ஏறு இரண்டு உடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண் பிணி முரசம்" (புற.288:1-4)
"ஓடா நல்ஏற்று உரிவை தைஇய
ஆடுகொள் முரசம் இழுமென முழங்க" (அக.334:1-2)

போன்ற பாடலடிகள் சுட்டுகின்றன. "போரினை முறைப்படி வழிநடத்திச் செல்ல போர்முரசு மிக இன்றியமையாத ஒன்றாகும். இப்போர் முரசு வன்மையான மயிர் நீக்கப்படாத தோல்களால் செய்யப்பட்டுள்ளது"[97] என்பதைச் சசிவல்லி குறிப்பிட்டுள்ளார். மான் தோலால் பொருள்கள் செய்திருப்பதைப் பதிற்றுப்பத்து (பதி.74: 9-15) குறிப்பிடுகின்றது. பறை எனும் இசைக்கருவித் தோலால் செய்யப்பட்டிருந்ததை,

"சிறுதோட் கோத்த செவ் அரிப்பறை" (நற்.58:2)

என்னும் நற்றிணைப்பாடல் குறிப்பிடுகின்றது. “போர்க்கருவிகள், இசைக்கருவிகள் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படும் பொருட்கள் அணிகலன்கள் எனப்பல்வேறு வகைகளாகத் தோலின் தன்மைக்கு ஏற்றவாறு பயன்படுத்தினர். பெருமளவிலும் பல்வேறு விதமாகவும் தோல் பொருட்கள் செய்யப்பட்டதால் தோலைப் பதப்படுத்தித் தொழில் செய்த வினைஞர்களும் பலராக இருந்திருத்தல் வேண்டும்”[98] எனவே போருக்குத் தேவையான கருவிகள், இசைக்கருவிகள் என விலங்கினங்களின் தோல் கொண்டு பொருட்கள் செய்து வாழும் தொழில்பிரிவினர் இருந்துள்ளனர் என்பது தெளிவு.

### 3.7.1.12 ஓலைத்தொழில்

பண்டைத் தமிழ் மக்கள் தென்னை, பனை மர ஓலைகளைக் கொண்டு அன்றாடம் பயன்படுத்தும் பல பொருட்களைச் செய்துள்ளனர். ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பொருட்களை எடுத்துச் செல்வதற்குரிய கூடை. பாய், வெயில் மழை இவற்றிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள குடை போன்ற பலவிதமான பொருட்களையும் ஓலைகள் கொண்டு செய்யும் தொழிற் பிரிவினரும் இருந்துள்ளனர். சோறு கொண்டு செல்ல, பூப்பறித்துப்போட வெயிலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள, நீர் இறைக்க எனப் பலவிதமான பயன்களைத் தருகின்ற குடையைச் செய்திருப்பதை, (புற.352:3-5,அக.275:1-3) பாடல்களும்

“உறைப்புழி ஓலைபோல” (புற.290:7)
“ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடை” (அக.121:12)
“கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்” (அக.194:7)

ஆகிய பாடலடிகளும் விவரிக்கின்றன. இவர்கள் குடை மட்டுமல்லாது புட்டில், பெட்டி, பாய் இவற்றையும் செய்துள்ளமையை கலித்தொகை (117:8-9), குறுந்தொகை (155:1-2), ஐங்குறுநூறு (48:2), புறநானூறு (246:9), அகநானூறு (94:4) ஆகிய பாடல்கள் விளக்குகின்றன. “ஓலைகளைப் பயன்படுத்தி அக்காலத்தில் பலவிதமான கூடைகள் செய்தனர். அவை வட்டி, புட்டில், குடை எனப்பட்டன. ஓலைக் கொண்டு செய்யப்பட்ட இக்கூடைகள் சாதாரணமானவை விலைகுறைந்தவை என்றாலும் அவையும் கலைத்திறனோடு செய்யப்பட்டன என்றும் இடையர்கள் பயன்படுத்திய பறி என்று சொல்லப்பட்ட பாய் மழை, வெயில் இவற்றினின்றும் பாதுகாப்புத் தரவும் படுத்துறங்கும் பாயாகவும் பயன்படுத்தப்பட்டது”[99] எனும் கருத்தும் ஓலைத்தொழில் நடைபெற்றுள்ளமைக்குச் சான்றாகும்.

### 3.7.1.13 பாவை செய்தல்

சங்க காலத்தில் ஓலைகள் கொண்டு குடை, புட்டில், பெட்டி, பாய் போன்ற பொருட்கள் செய்தது போன்று பூந்தாதுக்கள் புல், பொன் இவற்றைக் கொண்டு பாவை செய்துள்ளனர். முதலில் குழந்தைகளும் பெண்களும் மணலில் பாவை அமைத்து விளையாடி மகிழ்ந்துள்ளனர். பின்னர் அதைச் சிலப் பொருட்கள் கொண்டு செய்து வந்துள்ளனர். பூந்தாதுக்களாலும் புல் வகையாலும் பாவை செய்துள்ளமையை குறுந்தொகை (48:1-3, 76:1-2) பாடலடிகளால் அறியமுடிகின்றது.

"பொன் செய்பாவை கொடுப்பவும் கொள்ளான்" (குறு.292:5)
"தாஇல் நன்பொன் தைஇய பாவை
விண் தவழ் இளவெயிற் கொண்டு நின்றன்ன" (அக.212:1-2)

போன்ற பாடலடிகள் புல், பூந்தாது, பொன் இவற்றைக் கொண்டு பாவை செய்யும் வழக்கம் பண்டைச் சமூகத்தில் இருந்துள்ளமையைக் காட்டுகின்றது. இதையே "மண்ணால் செய்த பாவைகளே அன்றி ஒரு வகையான புல்லாலும் உலோகத்தாலும் பாவை செய்யப்பட்டது. என்றும் பொன்னால் பாவை போன்ற உருவம் அமைக்கும் வழக்கம்"[100] இருந்துள்ளதை உறுதிப்படுத்துகிறது. சங்க கால மக்கள் சோம்பியிராது கிடைத்தப் பொருட்களைக்கொண்டு ஏதாவது தொழில் செய்து வாழுபவராக இருந்துள்ளனர்.

### 3.7.1.14 கயிறு திரித்தல்

ஒரு பொருளைப் பிணித்துக் கட்டுவதற்குக் கயிறு பயன்படுத்துவர். அவ்வகையில் தயிர் கடைய, மணி கட்ட, யானையைக் கட்ட எனப் பலவிதமான செயல்களுக்குக் கயிற்றின் பயன்பாடு அறிந்து கயிறு திரித்தல் தொழிலைச் செய்துள்ளமையை, (நற்றிணை 222:1-4) மற்றும்

"கயிறு பிணிக்கொண்ட கவிழ் மணி மருங்கின்" (புற.3:10)
"மத்துக்கயிறு ஆடா வைகற் பொழுது" (பதி.71:16)

ஆகிய பாடலடிகள் மூலம் அறியமுடிகின்றது. ஊசல் கட்டி ஆடுவதற்கு, மணி கட்டுவதற்கு, தயிர் கடைவதற்கு என அன்றாட வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும் கயிற்றினை வன்மையாக உருவாக்கியுள்ளனர். மேலும், பனை நாரினால் கயிறு திரித்துள்ளனர். இதனை நற்றிணைப் (நற்.90:6) பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது. கயிறு திரிக்கும் தொழிலில் மக்கள் இருந்துள்ளனர். மேலும், "யானைகளைக் கயிற்றினால் பிணித்து வைத்தனர். முல்லை நில மக்கள் தயிரைக் கடைவதற்குக் கயிற்றினைப்

பயன்படுத்தினர்”[101] என்று சசிவல்லி குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. எனவே, இனக்குழு மக்கள் இயற்கையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு பொருட்கள் உருவாக்குவதில் கைதேர்ந்தவர்களாக இருந்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

### 3.7.1.15 துடியன்

‘துடியன்’ எனும் தொழிற்பிரிவினரைப் பழமையான குடிகளுள் ஒன்றாகக் குறிப்பிடுகின்றனர். இவர்கள் ‘துடி’ எனும் இசைக்கருவி இசைத்து செய்தி அறிவிக்கும் தொழிலைச் செய்துள்ளதை,

“துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை” (புற.335:7-8)
“உவலைக் கண்ணித் துடியன் வந்தென” (புற.269:6)
“துடியன் கையது வேலே” (புற.285:2)
“சிறாஅ அர் துடியர்” (புற.291:1)

போன்ற அடிகளின் மூலம் அறியலாம். இவர்களைத் தொடர்ந்து அதே தொழிலை அவர்கள் பிள்ளைகள் செய்திருக்கின்றனர்.இவர்களுக்குப் போர்க்களில் மன்னன் வேல் கொடுத்தும் உதவியதாகக் கூறப்படுகிறது. துடியனை “போர்க்காலங்களில் போர் மறவர்க்கு அவர்தம் தலைவரிடும் பணியைத் துடிகொட்டித் தெரிவிப்பது துடியனது தொழிலாகும்”[102] எனும் கருத்தும் இவர்கள் தனித்த தொழிற்பிரிவினராகச் செயல்பட்டுள்ளமையைத் தெளிவுபடுத்துகிறது.

### 3.7.1.16 முரசு அறைவோர்

போருக்குரிய முரசுகள் சிறப்புற அமைவதற்கு எருதுகளின் தோலை மயிர் நீக்காது செய்துபோர் நிகழ்வுகளுக்குப் பெரும்பாலும் பயன்படுத்தியுள்ளனர். இத்தகு சிறப்பு பொருந்திய முரசை முழக்கி வீரர்களைப் போர்க்களத்துக்குள் அனுப்பும் பணியை இத்தொழில் பிரிவினர் செய்துள்ளமையை,

“கடுஞ்சிலை கடவும் தழங்கு குரல் முரசம்
அகல் இரு விசும்பின் ஆகத்து அதிர” (பதி.68:3-4)

எனும் வரிகள் சுட்டுகின்றன. போரின் போது வீரர்கள் முன்னேறிச் செல்வதற்கும் முரசு முழக்கியுள்ளனர். இதனை, பதிற்றுப்பத்து (69:3-4,84:1-2) பாடலடிகளால் அறிய முடிகின்றது. இதன்மூலம் போர்க்காலங்களில் போர் நிகழ்வுகளுக்குப் பெரிதும் துணைபுரிந்த முரசை முழக்கும் பணியை ஒரு பிரிவினர் செய்திருப்பது தெளிவாகின்றது. “போர்த்தொழிலில் போர்

அறிவிக்கப் படைகளுக்கு அறிவிக்க வேண்டிய விதிமுறைகளைத் தெரிவிக்க போர் வெற்றியைக் கொண்டாட எனப் போர்முரசம் போர்த் தொழிலுக்குப் பெருமளவு பயன்பட்டது"[103] என்ற மு.சண்முகம்பிள்ளையின் கூற்றும் இணைத்து நோக்கத்தக்கது.

### 3.7.1.17 பறையன்

பழமையான குடிகளுள்பறை இசைத்து போர் செய்தியை அறிவிப்பவரை பறையன் என அழைத்துள்ளனர். இதனை,

"…………….. பாசறை
பூக்கோள் இன்று என்று அறையும்
மடிவாய்த் தண்ணுமை இழிசினன்குரலே" (புற.289:9-10)
"நிறப் படைக்கு ஒல்கா யானை மேலோன்
குறும்பர்க்கு எரியும் ஏவல் தண்ணுமை" (புற.293:1-2)

போன்ற அடிகள் குறிப்பிடுகின்றன. போருக்குரிய பூக்கோள் பெற வீரரை ஏவுவதற்கும் போர் மற்றும்இறப்பு நிகழ்வுகளுக்குப் பறை இசைக்கப்பட்டுள்ளமயை,

"ஓர் இல் நெய்தல் கறங்க" (புற.194:1)

எனும் பாடல் அடி சுட்டுகின்றது. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள "நெய்தல் என்பதற்கு 'சாக்காட்டுப்பறை'"[104] என விளக்கம் தந்துள்ளார் கு.வெ.பாலசுப்பிரமணியம். "நெய்தல் என்பதற்கு 'சாப்பறை'"[105] எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியமும் பொருள் கூறியிருப்பது நோக்கத்தக்கது. மதங்கொண்ட யானையை நீராட்டுவதற்கு வெளியே அழைத்து வரும்போது மக்களை வெளியே வராது தடுப்பதற்கும் ஆற்றில் புது நீர் வரவை மக்களுக்கு அறிவிப்பதற்கும் பறை பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளமையை கலித்தொகை (56:32-33), பரிபாடல் (20:14-15) தெளிவுபடுத்துகின்றன.

மேற்கூறியவற்றை நோக்க அன்றாட வாழ்வில் போர், பிற நிகழ்வுகள் என அனைத்திற்கும் பறை முழக்கிச் செய்தி அறிவித்துள்ளமையை அறியமுடிகின்றது.

### 3.7.1.18 நாழிகைக் கணக்கர்

பொழுதினை அறிந்து கூறுவோர் நாழிகைக் கணக்கர் எனப்பட்டனர். இவர்கள் ஒரு சிறு பாத்திரத்தில் நீரை நிரப்பி, அதிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாக வடிவதை அடிப்படையாகக் கொண்டு பொழுதினைக்

கணித்துள்ளனர். இதற்குக் 'கன்னல்' எனும் கருவியைப் பயன்படுத்தியுள்ளதை,

"குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது
கதிர் மருங்கு அறியாது அஞ்சுவரப்பாஅய்" (அக.43:6-7)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இங்குப் பொழுதையறிய பயன்படுத்திய பாத்திரத்திற்குக் குறுநீர்க்கன்னல் எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். "குறுநீர் எறிந்து நாழிகைகளைக் கணக்கிடுவார் இருந்தனர்"[106] என அ.தட்சிணாமூர்த்தி மற்றும் "ஒரு நாளில் அமையும் பொழுதைக் கணக்கிட்டுக் கூறுவார். நாழிகைக் கணக்கர் எனப்பட்டனர் என்றும் நீரிட்டு ஒரு துளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு அந்நீரினை அளந்து காணும் கருவியாகலின் நாழிகை வட்டில் குறுநீர்க் கன்னல் எனப்பட்டது"[107] என சசிவல்லியும் தமது நூல்களில் குறிப்பிடுவது மேற்கூறிய பிரிவினர் இருந்துள்ளதை உறுதிப்படுத்துகின்றன.

### 3.7.1.19 அறிவன்

அறிவன் மூன்று காலத்தின் இயல்புகளையும் அறிந்து கூறக் கூடிய இயல்புடையவன். இவன் காலத்தைக் கணித்துக் கூறுபவன் ஆதலால் 'கணியன்' எனவும் குறிப்பிடப்படுவதை,

"நெறி அறி செறி குறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇ
தகைமிகு தொகை வகை அறியும் சான்றவர் இனமாக"
(கலி.39:45-46)

எனும் கலித்தொகைப் பாடல் அடிகளின் மூலம் அறியலாம். இவர்கள்,"பகலும் இரவும் இடைவிடாது வானத்தை நோக்கியிருந்து அங்கு நிகழும் வானவில்லும் மின்னலும் விண்மீன் வீழ்வும் கோள் நிலையும் பார்த்து மழை, பனி, வெயில் என்ற மூவகைக் காலத்தின் இயல்புகளையும் விளங்க அறிவுறுத்தும் வான நூற்புலவன் அறிவனாவான். இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலத்தியல்பினையும் கண்ணி (கருதி) உரைக்கும் இவனைக் கணிவன் என வழங்குதல் மரபு"[108] என க.வெள்ளைவாரனனும் "மூன்று காலமும் அறிந்து கூறும் அறிவர் இருந்தனர். அவர்கள் கணியர் என்றும் அறியப்பட்டனர்"[109] என்பதை அ.தட்சிணாமூர்த்தியும் குறிப்பிடுவதைக் காணலாம். இவற்றை நோக்க பொழுதினை அளந்து கூறிய நாழிகைக் கணக்கரைப் போன்று காலத்தைக் கணித்துக் கூறிய அறிவன் என்ற பிரிவினரும் இருந்துள்ளமை தெளிவு.

### 3.7.1.20 காரோடன்

காரோடன் என்பவர் சாணைக்கால் செய்யும் தொழிலினர். இவர்கள் அரக்கோடு சேர்த்து ஒரு வகைக் கல்லைச் செய்துள்ளனர். இது ஆயுதங்களைக் கூர்மைப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, "காரோடன் என்பான் படைக்கலங்கட்குத் தோலினால் உறை தைத்துக் கொடுப்பவன். உறை கன்னுதலின் உறைகாரன் எனப்பட்டான். இவ்வுறைகாரரே ஆயுதங்களைக் கூர்மைப் படுத்தும் சாணைக் கல்லும் செய்வர்"[110] என்று சசிவல்லியும் "காரோடர் என்பவர் சாணை பிடிக்கும் தொழிலாளராவர்"[111] எனத் தட்சிணாமூர்த்தியும் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. இவர்களை,

"………………….. பொதினி ஆங்கண்
சிறு காரோடன் பயினொடு சேர்த்திய
கல் போல்" (அக.1:4-6)

எனும் அகநானூற்றுப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு தோலினால் உறை தைப்பதோடு ஒருவகை கற்பொடி மற்றும் அரக்குக் கூட்டிக் கல் செய்துள்ளதையும் அறிய முடிகின்றது.

### 3.7.1.22 கட்டில் பின்னுவோன்

ஊரில் விழா தொடங்குகிறது. மனைவியோ பிள்ளை பேறு பெரும் நிலையில் இருந்துள்ளாள். கதிரவன் மறைய கட்டில் பின்னும் ஒருவன் கையில் உள்ள வாரைச் செலுத்தும் ஊசியை விரைவாகச் செலுத்தியுள்ளமையைப் புறப்பாடல் குறிப்பிடுகின்றது.

"சாறு தலைக்கொண்டென பெண் ஈற்று உற்றென
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ் தூண்டு ஊசியின் விரைந்தன்றுமாதோ" (புற.82:1-4)

இங்கு, கட்டில் பின்னும் தொழில் செய்பவனை இழிசினன் எனக் கூறி தாழ்ந்தவனாகக் குறிப்பிட்டுள்ளமை கவனிக்கத்தக்கது. "ஊரில் தொடங்கிய விழாவிற்கு உதவவும், மனைவியின் உடல் நோய்க்கு உதவும் பொருட்டு சூரியன் மறையும் பொழுது நெருங்கவே விரைந்து செயல்படுகின்றான். எனவும் விழாவிற்கு உதவுதலும் மனைவிக்கு உதவுதலும் இழிசினனுக்குக் கடமையாதலின் சூரியன் மறைதல் தையல் வேலைக்கு இடையூறாதலின் அ∴து அவன் விரைவினை மிகுதிப் படுத்திற்று"[111] என்று சசிவல்லி விளக்கம் தந்திருப்பதும் நோக்கத்தக்கது. இவ்வாறு தாம் செய்யும் பணியை நேரம்

கருதி திறம்படச் செய்வதில் சங்கத் தமிழர் திறம் மிக்கவராக இருந்துள்ளனர். மேலும் செய்யும் தொழிலின் அடிப்படையில் அவர்கள் கீழ்நிலைப்படுத்தப்பட்டுள்ளமையும் தெளிவாகிறது.

**3.7.1.23 வலவன்**

சங்க இலக்கிய அகப்புறப்பாடல்களில் தேர் பெருமளவு பயன்பட்டுள்ளது. அந்த தேரைச் செலுத்துபவனை ‘வலவன்’ என்றும் ‘பாகன்’ எனவும் அழைத்துள்ளனர். இவ்வலவன் போருக்குச் செல்லும் தலைவனுக்குத் தேர் ஓட்டிச் சென்றுள்ளதை அகப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

“………………..வலவன்
வள்பு வலித்து ஊரின் அல்லது முள் உறின்
முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றா
நல் நால்கு பூண்ட கடும் பரி நெடுந்தேர்” (அக.104:3-6)(அக.234:3-9)

காற்றுபோல விரைந்து ஓடும் தேரில் ஏறியமர்ந்து செலுத்துவாயாக எனத் தலைவன் கூறியுள்ளான். நேர் ஓட்டத்துடன் தேர் செல்லுமாறு நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரை ஓட்டும் பணியை வலவன் செய்துள்ளான்.வினை முடித்து மீளும் தலைவன், தலைவியை விரைந்து சென்று காண வேண்டும் என்பதைத் தேர்ப்பாகனுக்கு உணர்த்தி, தேரை விரைந்து செலுத்துமாறு கூறுவதை, (ஐங்.481:3-4,ஐங்.482:1-2) ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகளால் அறியலாம். “நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேரைச் செலுத்துவதில் வல்லவன் வலவன்”[112] எனச் சசிவல்லி குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

**3.7.1.24 சாகாடுகைப்போன்**

சங்க காலத்தில் தேரைச் செலுத்துவோர் மட்டுமன்றிவண்டியைச் செலுத்துவோரும் இருந்துள்ளனர். இவர்கள் சிறப்புடன் வண்டியைச் செலுத்தும் பணியை அறிந்தவர் என்பதை,

“கால் பார் கோத்து ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு கைப்போன் மாாணின்
ஊறு இன்றாகி ஆறு இனிது படுமே” (புற.185:1-3)

எனும் அடிகளால் அறியலாம்.

**3.7.1.25 யானைப்பாகன்**

போர்த் தொழிலை விரும்பிய யானைகளைச் செலுத்தும் பணியைச் செய்வோரும் இருந்துள்ளனர். அவர்களுக்கு ‘யானைப்பாகன்’ எனப் பெயரிட்டுள்ளனர். யானைகளைச் செலுத்துவதும் பாதுகாப்பதும் அவர்களது

பணியாக இருந்துள்ளது. "யானையை அடக்கி ஆள்பவன் அல்லது செலுத்துபவன் யானைப்பாகன் எனப்பட்டான்"[113] என்ற கூற்றும் இங்குக் குறிப்பிடத்தக்கது. தம் ஏவலின் கீழ் பல்லாண்டு வாழ்ந்த யானை ஒரு நாள் இறந்து படவே அவன் மிகவும் வருத்தமுற்றதைப் புறப்பாடல் (புற.220:1-5) குறிப்பிடுகின்றது. யானையைக் கட்டுத்தறியிலே கட்டி வைத்துப் பாதுகாத்து அதனைச் செலுத்துபவரது இயல்பினை நற்றிணை (182:8-9) பாடலும் குறிப்பிடுகின்றது. மேற்கூறியவற்றை நோக்க யானையை அடக்கி அதனைச் செலுத்தும் தொழிலைச் செய்பவனாகப் பாகன் இருந்துள்ளான்.

### 3.7.1.26 அரைக்குநர்

சங்க கால மக்கள் நறுமணப் பொருள்களைப் பெரிதும் பயன்படுத்தியமையால் அதைத் தயாரிக்கும் பணியைச் சிலர் மேற்கொண்டிருந்ததைக் காணமுடிகின்றது. இவர்கள் சிவந்த குங்குமக் குழம்பு, சேறாக்கப்பட்ட அகிற் குழம்பு, பல கருப்பூரங்கள் என அனைத்தையும் சாந்தரைக்கும் அம்மியிலிட்டு ஒன்றாகுமாறு குழவியால் நெருப்பின் நிறம் போன்று அரைத்துள்ளனர். இதனை,

"செங் குங்குமச் செழுஞ்சேறு
பங்கம் செய் அகில் பல பளிதம்
மறுகுபட அறை புரை அறு குழவியின்
அவி அமர் அழலென அரைக்குநர்" (பரி.10:81-84)

எனும் அடிகள் விளக்குகின்றன.

### 3.7.1.27 கம்மியன்

தொன்மையானதும் முத்துக்குப் பெயர் போனதுமான துறைமுகங்களுள் ஒன்று கொற்கை. அதே போன்று பந்தர் என்ற ஊரிலும் பலரும் புகழும்படியான முத்துக்கள் கிடைத்துள்ளன. அம்முத்துகளைக் கொண்டு அணிகலன் செய்தவர்கள் 'கம்மியர்' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் முத்துக்களைக் கொண்டு அணிகலன்கள் செய்தமையை இலக்கியங்கள் (பதி.39:14-17), (கலி.85:11-15) சுட்டிக்காட்டுகின்றன. இதனை விதமாக,

"கை வல் கம்மியன் கவின் பெறக் கழாஅ
மண்ணாப் பசு முத்து ஏய்ப்ப" (நற்.94:4-5)

எனும் பாடல் வரிகள் உறுதிப்படுத்தும். இப்பாடலின் வழி முத்தால் மாலை, வடம் போன்ற அணிகலன்கள் செய்துள்ளமை உறுதியாகிறது. இதனை, "முத்தையும் மணியையும் மூடியிருக்கும் மாசினைப் போக்கி

ஒளிபெறச் செய்து அவற்றிற்குத் துளை முதலியன இடும் பணி செய்வாரும் ஒருவகை கம்மியர்”[114] எனும் மு.சண்முகம்பிள்ளை கருத்தும் உறுதிபடுகிறது. எனவே பொன், முத்து, மணி என அனைத்துப் பொருட்களையும் கொண்டு அணிகலன் செய்வோர் இருந்துள்ளனர் எனலாம்.

### 3.7.1.28 அகவன் மகள்

சங்க கால மக்கள் தங்கள் வாழ்வில் நடைபெறப்போகும் நன்மை தீமைகளை அறிவதில் ஆர்வமுடையவராய் இருந்துள்ளனர். அதற்குக் குறி சொல்லுதல் என்று பெயர். அத்தொழிலை, பெண்கள் செய்துள்ளனர். அவர்களை ‘அகவன் மகள்’ ‘கட்டுவிச்சி’ எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். இவர்கள் தெய்வத்தையும் அக்குறி கேட்பவருடைய குலத்தோரையும் வாழ்த்திச் சொல்லியுள்ளனர். இதனை,

“வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்” (குறு.298:6 குறு.23:1-5)

குறுந்தொகை பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது. “குறிசொல்பவள் கட்டுவிச்சி எனப்படுவாள். அகவன் மகள் என்றால் அழைக்கும் மகள் என்பது பொருள். அகவன் மகள் குறி சொல்லும் பொழுது தெய்வங்களையும் குறி சொல்லப்படுவோர் குலத்தோரையும் அழைத்துப் பாடுதல் பற்றி அழைத்துப்பாடுதல் பற்றி அகவன் மகள் என்பது அவளுக்குப் பெயராயிற்று”[115] எனச் சசிவல்லி குறிப்பிடுவதும் நோக்கத்தக்கதே.

### 3.7.1.29 காவலர்கள்

காவல் தொழில் செய்வோர் காவலர் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களை ஊர் காவலர், மனைக் காவலர், வயல் காவலர், நீர் நிலைக் காவலர் எனப் பிரித்து அணுகலாம்.

### 3.7.1.30 ஊர்க்காவலர்

சங்க காலத்தில் ஊரைக் காவல் செய்யும் காவலர்கள் கையில் விளக்குடன் இரவு முழுவதும் சுற்றித் திரிந்து உறங்காமல் காவல் காத்துள்ளனர். அத்தொழிலைச் சோர்வடையாது செய்துள்ளனர். ஊர்க்காவலர் துஞ்சாக் கண்ணுடையவராக இருந்து கையில் விளக்குடன் காவல் காத்துள்ளமையை சங்கப்பாடல்கள் (கலி.142:32-33 நற்.98:8-10 புற.37:8-9 குறு.375:4-6 குறு.261:6-7) விவரிக்கின்றன. மணி அடித்து ‘ஓ’ என்னும் ஒலியெழுப்பிக் கொண்டு இரவில் காவல் காத்துள்ளதை நற்றிணைப்பாடல் (132:8-10) சுட்டுகின்றது. மேலும், வெளியே யாரேனும்

உள்ளார்களா என்றும் உள்ளே வருபவர்கள் உள்ளீரோ எனவும் கேட்டறிந்து பின்புக் கதவை அடைத்துக் காத்துள்ளதை, குறுந்தொகைப் பாடலால் (118:3-4) அறியமுடிகின்றது. மக்களை விழிப்புணர்வுடன் வைத்திருக்க எண்ணிக் கள்வரைக் காணாத போதும் கண்டதாகக் கூறிக் காவல் காத்துள்ளனர். இதனை,

"ஏதப்பாடு எண்ணி புரிசை வியல் உள்ளோர்
கள்வரைக் காணாது கண்டேம் என்பார் போல" (கலி.81:25-26)

எனும் அடிகளின் மூலம் அறியலாம். "காக்குந் தொழில் செய்பவர் காவலர் எனப்பட்டனர். பண்டை நாளில் இரவுப் பொழுதில் காவலர் சுற்றிச் சுற்றிக் காவல்புரியும் வழக்கமுண்டு. யாமத்தே காவலர்கள் ஊரைக் காத்து எச்சரிக்கும் முறையும் இருந்து வந்துள்ளது என்றும் அந்நாளில காவலர்கள் யாமந் தோறும் மணியடித்து உணர்த்தி விழிப்புறச் செய்து காவல் புரியும் சிறந்த பழக்கம் இருந்துள்ளது"[116] என்ற கூற்றும் ஊர்க்காவலர் இருந்து சிறப்பாகச் செயலாற்றியுள்ளமையைக் குறிப்பிடுகின்றது.

### 3.7.1.29.1 மனைக் காவலர்

இரவு வேளையில் வீடுகளைக் காவல் காப்பவர் இருந்துள்ளமையை,

"நல்மனை நெடுநகர்க் காவலர்" (அக.22:16)
"காவலர் அறிதல் ஓம்பி, பையென
வீழாக்கதவம் அசையினன்" (அக.102:12-13)

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. "இரவுப் பொழுதில் வீடுகளைக் காக்கும் காவலர் இருந்தனர்"[117] எனும் கூற்றும் இத்தொழிலுடையோர் இருந்துள்ளமையைத் தெளிவுபடுத்துகிறது.

### 3.7.1.29.2 வயல்காவலர்

சங்க காலத்தில் பயிர்களைக் காக்கும் தொழிலில் மக்கள் ஈடுபட்டுள்ளனர். மனிதர்களாலும் பிற உயிரினங்களாலும் பயிர்களுக்கு சேதம் நேராத வகையில் காக்கும் பணியைச் செய்த வயல் காவலர்களை நற்றிணை. (280:56-7), ஐங்குறுநூற்றுப் பாடல் (29:1-2) அடிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடலில் வயலில் காவல் புரியும் போது, நத்தையை ஆமை முதுகில் உடைத்துத் தின்றுள்ளனர். மேலும், நெல் விளைந்த வயலைக் காவல் புரிய விரைந்து சென்றுள்ளமையை அறிய முடிகின்றது.

### 3.7.1.29.3 நீர் நிலைக் காவலர்

பண்டைக் காலத்தில் நீர் நிலைகளைக் காவல் புரிவதற்கென சிலர் இருந்துள்ளனர். இவர்கள் இரவு நேரத்தில் துயில் கொள்ளாது அத்தொழிலில் ஈடுபட்டுள்ளதை,

“தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்
பெருங்குளம் காவலன் போல” (அக.252:11-13)

எனும் அடிகள் சுட்டுகின்றன. இப்பாடலில் மழை பொழிந்த இரவு வேளையிலும் துயிலாது இருந்து சிறிய கரையினையுடைய பெரிய குளத்தைக் காவல் காத்துள்ளனர். வெள்ளப் பெருக்கின் போது கரை உடையாது காக்கக் கரைக்காவலர்கள் இருந்துள்ளதை, புறநானூறு (118:2-3), பரிபாடல் (6:22-24), பரிபாடல் (10:7-8) விவரிக்கின்றன. அவர்களைப் பறை முழக்கி அழைக்கும் மரபும் இருந்துள்ளது. மேலும், “பெரிய நீர்நிலைகளைக் காப்பதற்கும் காவற் பணியாளர் அமைந்திருந்தனர். இவர்களும் மழைக்காலங்களில் இரவில் துயிலாது பணிபுரிந்தனர்”[118] எனச் சண்முகம்பிள்ளை குறிப்பிட்டிருப்பது வயல் காவலா் இருந்துள்ளமையை உறுதிப்படுத்துகிறது.

### 3.7.1.30 ஏவலர்

சங்க காலத்தில் தலைவன், தலைவியா் ஏவும் தொழிலைச் செய்யும் பணியாளர்களும் இருந்துள்ளனர். இவர்களை ஏவலர்கள் எனக் குறிப்பிடுவதை, நற்றிணை (.42:4-7), அகநானூற்றுப் பாடல்கள் வழி (310:1-2) அறியலாம். தலைவன் ஏவும் பணிகளைச் செய்வதற்கென ஏவலாளர்கள் இருந்துள்ளனா். தாம் வருவதைத் தலைவிக்குத் தெரிவிக்கப் பணியாளரை அனுப்பியுள்ளனா். ஆண்களும் பெண்களும் நீராடச் செல்லும் போது அவர்களுக்குத் தேவையான பொருள்களை எடுத்துச் செல்வதற்கென்று பணியாளர்கள் இருந்துள்ளனர். இவர்கள் அகில், சந்தனக் குழம்பு மற்றும் பிறப் பொருட்களையும் ஏந்தியவராய் அவர்களைப் பின் தொடர்வதை,

“…………..துவர் புகை, சாந்தம்
எறிவன எக்குவ ஈரணிக்கு ஏற்ற
நறவு அணி பூந்துகில் நன் பல ஏந்தி
பிற தொழின …….ம் பின் தொடர” (பரி.22:17-20)

எனும் அடிகள் விவரிக்கின்றன. இவ்வாறு சங்க காலத்தில் தாமாகத் தொழில் செய்த பிரிவினர் மட்டுமல்லாது பிறர் ஏவிய பணிகளைச் செய்வோரும் இருந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.8 வாணிகத் தொழில்

சங்க காலத்தில் வாழ்வியலோடு தொடர்புடைய தொழில் செய்த பிரிவினர் போன்று வணிகம் செய்வதை முதன்மையாகக் கொண்ட மக்களும் இருந்துள்ளனர். ஆரம்பக் காலங்களில் ஒரு நிலத்தில் கிடைக்கும் பொருட்களைப் பிற நிலத்தாருக்குக் கொடுத்து தமக்குத் தேவையானப் பொருட்களைப் பண்டமாற்று முறையில் பெற்றுள்ளனர். இனக்குழு மக்கள் தமது தொழிலுக்கேற்ப பின்னாளில் வணிகம் செய்பவராக மாற்றமடைந்துள்ளனர் எனலாம். இவர்களுள் பெரு வணிகர்களும் சிறு வணிகர்களும் இருந்துள்ளனர். ஏனெனில் நீரிலும் நிலத்திலும் கிடைத்தப் பொருட்களைப் பெருவாரியாகக் கலங்களின் மூலம் பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்பனை செய்தவர்கள் பெரு வணிகர் என்றும் தாம் வாழும் பகுதியிலேயே சிலப் பொருட்களைக் கொண்டு சென்று விற்பனை செய்தவர்கள் சிறு வணிகர்கள் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர். இத்தகைய இயல்புடைய வணிகர் பிரிவினர் குறித்து இப்பகுதி ஆராய்கிறது.

#### 3.8.1வணிகர்

சங்க காலத்து வணிகர்கள் அறநெறியில் நின்று வணிகம் செய்துள்ளனர். இவர்கள் வணிகத்திற்காகத் தாம் விரும்பிய துறைமுகத்திற்குச் சென்று வணிகம் செய்துவிட்டு நாவாயை எதிர்பார்த்து நின்றுள்ளதை,

“தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரை சேரும்
ஏமுறு நாவாய் வரவு எதிர்கொள்வார்” (பரி.10:38-39)

எனும் பரிபாடல் அடிகளால் அறியலாம். வணிகத் தொழிலில் ஈடுபட்ட வணிகர்கள்விலையைக் கூறி அறநெறியில் பொருள் விற்கும் இயல்புடையவர்கள் என்பதைப் புறநானூறு (134:1-2) குறிப்பிடுகின்றது. இவ்வாறு கப்பல்கள் மூலம் வாணிகம் செய்த பெரு வணிகர்கள் மட்டுமல்லாது கழுதை, வண்டி இவற்றின் உதவியோடு பொருட்களை விற்று வணிகம் செய்யும் சிறு வணிகர்களும் இருந்துள்ளனர்.

#### 3.8.2 பூவிலைப் பெண்டு

சங்க காலத்தில் பெண்கள் பூ விற்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் காட்டு மல்லிகை, கருங்குவளை, பாதிரி போன்ற பல புது மலர்களையும் வட்டியில் ஏந்திச் சென்று தெருக்கள் தோறும் விற்றுள்ளதை அகநானூறு (391:1-4), கலித்தொகை (66:1-2), நற்றிணை (118:11-14) போன்ற

பாடல்கள் குறிப்பிடுன்றன. மேலும் பூ விற்கும் பெண்கள் சூழ்நிலை அறிந்து இல்லங்களில் சென்று பூ விற்றுள்ளனர். ஏனெனில் போருக்குத் தண்ணுமை ஒலி கேட்க, இனிமேல் அங்குள்ளப் பெண்கள் ஆடவர் இல்லாது போகவே, பூக்களைத் தலையில் சூடமாட்டார்கள் என்று எண்ணி, பிற இல்லங்களுக்குச் சென்று விற்றுள்ளனர். இதனை, புறப்பாடல் (293:2-6) சுட்டுகின்றது. இப்பாடலில் அவள் பூ விற்காது பிற இடங்களுக்குச் செல்லும் நிலையைச் சுட்டி அவளை இரங்கத்தக்கவளாகக் குறிப்பிட்டிருப்பது அத்தொழிலில் மட்டுமே வருமானம் ஈட்டுபவர்களாக அவள் இருந்திருக்க வேண்டும் என்பதை காட்டுகிறது. மேலும். வணிகர்களுக்குத் தாம் கொண்டு செல்லும் பொருட்கள் விற்பனையானால் மட்டுமே மகிழ்ச்சி இல்லையேல் அன்றாடத் தொழிலாகச் செய்யும் இவர்களது நிலை புறப்பாடல் குறிப்பிடுவது போன்று இரங்கத்தக்கதே. இப்பூவிலை பெண்டிர் குறித்து, "இந்நாளில் நாம் காண்பது போலவே பண்டைக் காலத்திலும் அவ்வப் பருவத்திற்கேற்ற புத்தம் புது மலர்களை வட்டிகளில் ஏந்தித் தெருக்கள்தோறும் திரிந்து இளமகளிர் பூ விற்றனர் என்றும் பூ விற்கும் மகளிர் பூ விற்பவரேயானாலும் சூழ்நிலை அறிந்து இல்லங்களில் சென்று மலர் விற்பர்"[119] எனச் சசிவல்லி குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கது.

### 3.8.3 கூலம் பகர்நர்

சங்க கால மக்கள் தானியங்களை விளைவிப்பதோடு அவற்றைப் பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்றுள்ளதை,

> "ஞாலத்துக்
> கூலம்பகர்நர் குடிப்புறந்தராஅ
> குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி" (பதி.13:22-24)

எனும் அடிகள் சுட்டுகின்றன. இப்பாடலில் கூலம் விற்கும் வணிகர்கள் இருந்துள்ளதையும் அக்குடிகளை மன்னன் பாதுகாத்து வந்துள்ளதையும் அறியமுடிகின்றது.

### 3.8.4 பாசவர்

சங்க காலத்தில் 'பாசவர்' ஆட்டு இறைச்சி விற்பவராகக் குறிப்பிடப்படுவர். "பாசவர்-ஆட்டிறைச்சிவிற்கும் வணிகர்"[120] எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் பொருள் தந்திருப்பதும் இதனை உறுதிப்படுத்துகிறது. இவர்கள் மரக்கட்டை மீது இறைச்சியை வைத்து

அரிவாள் கொண்டு வெட்டுவதால் மரக்கட்டைகள் சிதைந்து விட்டதாக, பதிற்றுப்பத்துக் (21:9-12), (67:15-17) குறிப்பிடுகின்றது.

### 3.8.5 மிளகு வணிகர்

சங்க காலத்தில் தமிழக மக்களுடன் வெளி நாட்டினருக்குத் தொடர்பு ஏற்பட முக்கியக் காரணமாய் அமைந்தது வணிகம் எனலாம். ஏனெனில் நம் நாட்டில் கிடைக்கும் பொருட்களைப் பிற நாட்டினா் கப்பல்கள் மூலமாக வந்து வாங்கிச் சென்றுள்ளனர். அவற்றுள் ஒன்று மிளகு வாணிகம். வெளிநாட்டினர் பொன்னைக் கொடுத்து மிளகைப் பெற்றுச் சென்றுள்ளனர். வீடுகளில் குவித்து வைத்த மிளகைக் கடற்கரைப் பகுதிகளுக்குக் கொண்டு சென்று விற்றுள்ளனர். சங்க காலத்தில் மிளகு வணிகம் நடைபெற்றுள்ளமையை,

“மனைக்குவைஇய கறி மூடையால்
கலிச் சும்மைய கரை கலக்குறுந்து” (புற.343:3-4)
“யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்” (அக.149:10-11)

எனும் அடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், “யவனர்கள் சேரநாட்டின் துறைமுகப்பட்டினமாய் விளங்கிய முசிறித் துறைமுகத்தில் கப்பல்களில் வந்து பொன்னைத் தந்து மிளகைப் பெற்றுச் சென்றனர்”[121] எனும் கூற்றும் ஒப்புநோக்கத்தக்கது.

### 3.8.6 உமணர்

உமணர் என்போர் உப்பு வணிகர் ஆவார். இவர்கள் உவர் நிலத்தில் விளைந்த உப்பினைப் பெற்றுக் கொண்டு ஊர் ஊராகத் திரிந்து விற்றுள்ளனர். உமணர்கள் உப்பு விற்கச் செல்லும் போது குடும்பத்தோடு சென்றுள்ளனர். அப்பெண்களும் வண்டிகளை ஓட்டிச் சென்று வழியிலேயே சமைத்து உண்டுள்ளனர். இவ்வாறு உமணர்கள் விலைகூறி உப்பு விற்கச் செல்லும் போது அதற்கு ஈடாக நெல்லைப் பெற்று வந்துள்ளனர். இதனை, புறநானூறு 386:16-17, நற்றிணைப் பாடல்கள் 138:1-3,183:1-5 பாடல்கள் விவரிக்கின்றன. ஊர்கள் தோறும் சென்று உப்பு விற்கும் வணிகர்கள் வழியிலேயே தம் வண்டிகளை நிறுத்தி வைத்து உணவு சமைத்து உண்டுள்ளனர். மேற்கூறியவற்றை நோக்க, கடல் நீரினைப் பாய்ச்சி நெய்தல் நிலத்தில் விளைவிக்கக்கூடிய உப்பினை உமணர் என்போர் பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்கும் தொழிலைச் செய்துள்ளனர்

என்பதை அறியமுடிகின்றது. மேலும், “உமணர் என்னும் சொல் உவர் மண்ணர் என்பதன் திரிபாகலாம். இவர்கள் உப்பினை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று வணிகம் புரிந்த இனத்தோராவார்”[122] என்று தட்சிணாமூர்த்தியும் “உப்பு வணிகர் உமணர் என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளனர். உவர் நிலத்தில் விளையும் உப்பினை வண்டிகளில் ஏற்றிச் சென்று மற்ற இடங்களில் வாழும் மக்களுக்கு விற்பர்”[123] எனச் சசிவல்லியும் குறிப்பிட்டுள்ளனர். மேற்கூறியவற்றை நோக்க, வணிகர்களுக்குள்ளே உப்பு வணிகர், கூலம் வணிகர், மிளகு வணிகர், பூ வணிகர், பொன் வணிகர் எனப் பலவாறான தொழில் செய்த மக்களும் இருந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.9 கலையியல் தொழில்

சங்க காலத்தில் இசை, கூத்துக் கலைகளை நிகழ்த்திய நிகழ்த்துக் கலைஞர்களும் இருந்துள்ளனர். இவர்கள் நாடுதோறும் எல்லா நிலங்களுக்கும் சென்று தாம் கற்றக் கலைகளை வெளிப்படுத்தும் கலைப்பிரிவினர் ஆவார். இவர்களுள் ஆடும் பிரிவினர், பாடும் பிரிவினர், இசைக்கருவிகளை இசைப்போர் எனப் பலவாறான கலைஞர்கள் இருந்துள்ளனர்.

#### 3.9.1 பாணர்

இசைக்கருவிகளைக் கொண்டு பாடல் பாடும் இயல்பினர் பாணர். இப்பாணர்களை பெரிய யாழ் வாசிப்போர், சிறிய யாழ் கொண்டு வாசிப்போர் என்றும் யாழ்ப்பாணர் இசைப்பாணர், மண்டைப்பாணர் என்றும் வகைப்படுத்துவர். எனினும் எட்டுத்தொகை நூல்களில் சிறிய யாழ், பெரிய யாழ் கொண்டு இசைக்கும் யாழ்ப் பாணர்கள் பற்றிய குறிப்புகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. இவற்றுள் பெரிய யாழ் கொண்டு வாசித்த பாணர்கள் குறித்துப் பதிற்றுப்பத்து. (57:7-8),(66:1-3) பாடல்கள் குறிப்பிடுகின்றன. சிறிய யாழ் கொண்ட பாணர்களை நற்றிணை (380:7-9, 380:7-9) புறநானூறு (302:5-6,155:1-3), அகநானூறு (331:10-11) ஆகிய பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவற்றை நோக்க, பெரிய யாழ் கொண்டு வாசிப்போர், சிறிய யாழ் கொண்டு வாசிப்போர் என இரண்டு பிரிவினர் இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. மேலும், “பாணர்களுள் பெரும்பாணர், சிறுபாணர் என்ற இருபிரிவனர் இருந்தனர். பேரியாழ் கொண்டு

மிக இசையறிவு பெற்றுப் பாடியோர் பெரும்பாணர் என்றும் சீறியாழ் கொண்டு இசை நுட்பம் குறைந்து காணப்பட்டோர் சிறுபாணர் என்றும் அழைக்கப்பட்டனர்”[124] எனக் காந்திதாசனும் “யாழப்பாணர்களில் யாழ் கருவியின் அளவைப் பொறுத்துச் சிறுபாணர், பெரும்பாணர் என இருவகைப்பட்டனர். சிறிய யாழ் கொண்டு பாடியவர்கள் ‘சிறுபாணர்’ அல்லது சீறியாழ்ப்பாணர் எனப்பட்டனர். அவ்வாறே, பெரிய யாழைப் பயன்படுத்தியவர்கள் ‘பெரும்பாணர்’ அல்லது பேரியாழ்ப்பாணர் என்றழைக்கப்பட்டனர்”[125] எனப் பக்தவத்சல பாரதியும் கூறுவர். மேற்கூறிய கூற்றுகள் இரு பிரிவினர் இருந்துள்ளமையை உறுதிப்படுத்துகின்றன. இப்பாணர்கள் பரிசில் பெறும் நோக்கத்துடன் ஊர் தோறும் அலைந்துள்ளனர். மிகவும் வறுமையுடன் உடுக்க உடை மற்றும் உண்ண உணவுமின்றி வருந்தியுள்ளனர். இவர்களது ஆடை கிழிந்து, வேற்று நூல்களால் தைக்கப்பெற்று, வேர்வையால் நனைந்த கந்தல் ஆடையாக இருந்துள்ளது. மேலும், நிலங்கள் தோறும் சென்று அவர்கள் தரும் உணவையே பெரிதும் உண்பதும் வள்ளல்களை நாடிச் சென்று அவா் தரும் உணவுகளை விரும்பி உண்ணுபதுமாக வாழ்ந்துள்ளனர். இவ்வாறு எளிய வாழ்வு மேற்கொண்ட பாணர்களை, புறப்பாடல்கள் (69:1-3, 150:1-4) வழி அறிய முடிகின்றது. மேலும், இவர்கள் ஊர்கள் தோறும் திரிவதால் நிலையற்ற நாடோடி வாழ்வையே வாழ்ந்துள்ளனர். எனினும் இவர்கள் தற்காலிகமாக வாழ்வதற்கென சிலப் பகுதிகளில் குடியிருப்புகள் அமைத்துள்ளனா். இவர்கள் வாழ்ந்தப் பகுதி‘சேரி’ என்றும்‘பாக்கம்’ என்று அழைக்கப்பட்டுள்ளது. இவர்கள் மருத, நெய்தல் நிலப் பகுதிகளில் வாழ்ந்துள்ளதை, புறப்பாடல் (348:3-4) பரிபாடல் (7:30-31) மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

#### 3.9.1.1 மீன் பிடித்தொழில்

சங்க காலத்தில் பாணர்கள் யாழ் இசைத்துப் பாடல் பாடியதோடு மீன் பிடிக்கும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளதை,

“நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்
தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்
நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு
வஞ்சி விறகின் சுட்டு வாய் உறுக்கும்” (அக.216:1-4)

எனும் அடிகளால் குறிப்பிடுகின்றன. இப்பாடலில் பிடித்த மீனைச் சுட்டுத் தம் தந்தையருக்குக் கள்ளோடு சேர்த்து உண்பித்துள்ளனா். தூண்டில், வலை

கொண்டு பிடித்த மீனை விற்று அதற்குப் பதிலாக நெல் முதலிய பொருட்களைப் பெற்று வந்துள்ளதை ஐங்குறுநூற்றுப் (47:1-3, 48:1-3, 49:1-2, 111:1-3) பாடலடிகளால் அறியமுடிகின்றது. "மீன்பிடிப் பாணர் கடற்கரைப் பிரதேசத்துப் பரதவர்கள் போலப் பாணர்களில் ஒரு பிரிவினர் மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் மீன்களைத் தப்பாமல் பிடிப்பதில் வல்லவர்களாயிருந்தனர். தூண்டிலால் மீனைப் பிடிப்பதிலும் திறன் கொண்டிருந்தனர். மீன் பிடிக்கும் தூண்டில்களை மூங்கிலில் செய்தனர். தூண்டில் போட்டு மீன் பிடிப்பது அல்லாமல் வலை போட்டுப் பாணன் மீன் பிடித்துள்ளான்"[126] எனும் பக்தவத்சலபாரதி கருத்தும் கவனிக்கத்தக்கது.

மேற்கூறியவற்றை நோக்க யாழ் இசைக்கும் பாணர்கள், மீன்பிடிக்கும் தொழில் செய்த பாணர்கள், எனத் தனித்தனித் தொழில் பிரிவினராகப் பாணர்கள் வாழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. மேலும், யாழ் பாணர்களுக்குள்ளே சிறு பாணர், பெரும் பாணர் என்ற பிரிவு மற்றும் படிநிலைகள் இருந்துள்ளமையை அறிய முடிகின்றன.

### 3.9.2 விறலி

ஆடல் தொழிலில் ஈடுபட்டவர் விறலி. இவ்விறலி இசைக்கருவிகள் இசைக்க அதற்கேற்ப ஆடும் திறம் பெற்றவளாக இருந்துள்ளாள். ஆடல் மற்றும் பாடல் பாடும் திறமையும் இவ்வறலியருக்கு உண்டு. இவர்கள் வள்ளல்களை நாடிச் சென்று, அவர்கள் முன்பு தம் கலைத்திறனை வெளிப்படுத்திப் பரிசில் பெற்று வாழ்ந்துள்ளனர். அதற்காக வெகுதூரம் நெடும்பொழுது நடந்து சென்றுள்ளனர். இவ்வாறு பழுமரம் தேடித் திரியும் பறவைகளில் ஒரு பிரிவாக விறலியரும் இடம் பெறுகின்றனர். இவர்கள் ஆடல் பாடல் தொழிலில் ஈடுபட்டுள்ளதைப் பதிற்றுப்பத்து (47:38) சுட்டுகின்றது. இப்பாடல் தொன்மையான நகரத்தெருக்களில் விளக்கொளியில் ஆடல் புரிந்தமையை குறிப்பிடுகின்றது. மலைப் பகுதிகளுக்கும் பிற பகுதிகளுக்கும் சென்று ஆடல் நிகழ்த்திப் பரிசில் பெற்றுள்ளதை நற்றிணைப் (328:8-11) பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது. ஆடல் தொழிலில் ஈடுபட்டுள்ள விறலியர் அழகுடன் விளங்கினர். ஏனெனில் சங்கப்பாடல்களில் இவர்கள் செய்யும் தொழிலோடு சேர்த்து, அவர்களது உடல் வருணனையும் தெளிவுபட விவரித்துக் கூறியுள்ளமைக் கவனத்திற்குரியது. அழகும் இளமையும் கொண்டு ஆடல் தொழிலில் ஈடுபட்ட இவ்விறலியர் பாடல் பாடும் திறமும் பெற்றிருந்ததைப் பதிற்றுப்பத்துக் (51:19-23,54:3-6) குறிப்பிடுகின்றது.

தலைவனின் வீரத்தைப் புகழ்ந்து பாட அவர்கள் அதை விரும்பிக் கேட்டுள்ளமை சான்றாகின்றது. இவ்வாறு தலைவர்களின் வெற்றியைப் பாடும் விறலியர், பாசறைக்குச் சென்று அவனது வேல் முதலியவற்றையும் புகழ்ந்து பாடியுள்ளனர். விறலியரை அழைத்துக் கொண்டு கூட்டமாகக் கலைப்பிரிவினர் சென்றுள்ளனர். இவ்வாறு எல்லா பகுதிகளுக்கும் சென்று தம் கலையை வெளிப்படுத்தி வாழும் இவ்விறலியர், கடத்தற்கரிய பல வழிகளைக் கடந்து நெடுதூரம் சென்று வாழும் நாடோடி வாழ்க்கையினராக இருந்துள்ளனா்.உடல் வருந்த காடு, மலை கடந்து பல இடங்களுக்குச் சென்று தம் தொழிலை நடத்தியுள்ளனர் "விறலி இவர்கள் ஆடல் பாடலில் சிறந்த மகளிர், கூத்தர், பொருநர் போல் திறமை பெற்ற கலைஞர் போர்ப்பாடல்கள் பாடினர். பாசறைகளுக்குச் சென்றனர்"[127] என்பதை கா.சுப்பிரமணியன் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கது. எனவே ஆடல், பாடல் தொழிலில் ஈடுபட்டு வாழ்ந்த விறலியர் மன்னனை நாடிச் சென்று, அவனது புகழ் பாடி ஆடும் தொழிலைச் செய்திருப்பது உறுதியாகிறது.

### 3.9.3 கூத்தர்

கூத்தா், பாணா், பொருநா், விறலி எனக் குறிப்பிடப்படும் நால்வகைக் கலைஞர்களில் ஒருவராகக் கூத்தர் இடம் பெறுகின்றனர். இக்கூத்தர் மற்ற கலைஞர்கள் போல் அல்லாது பலவிதமான இசைக்கருவிகளைக் கொண்டு சென்றுள்ளனர். அவ்வாறு பல இசைக்கருவிகளோடு உலாவும் இக்கலைஞர்கள் ஆடல், பாடல், இசை என அனைத்திலும் வல்லவர்களாக விளங்கியுள்ளனா். இவர்களைக் 'கலப்பையர்' எனவும் குறிப்பிட்டுள்ளனர். புதிற்றுப்பத்தும் (41:3-5) அகநானூறும் (301:17-24) இவா்களின் கலைப்புலமைக்குச் சான்று பகரும். இப்பாடல்கள் பலவிதமான இசைக்கருவிகளைக் கொண்டு ஆடிப்பாடி, இசை இசைத்து ஊர்தோறும் சென்று மக்களை மகிழ்வித்ததை பதிவுசெய்துள்ளன. பெரிய சுற்றத்துடன் விளங்கும் கூத்தர்களுள் கண்ணுளர், வயிரியர், கோடியர் எனத் தாம் இசைக்கும் இசைக்கருவிகளுக்கேற்ப பெயர் பெற்றவரும் இருந்துள்ளனா்.

### 3.9.5 கோடியர்

கூத்தர்களுள் ஒரு பிரிவினராகக் கோடியர் விளங்கியுள்ளனர். இக்கோடியர் விழாக்காலங்களில் யாழ், முழவு, பறை முதலான இசைக்கருவிகளை இசைப்பதும் ஆடுவதும் பாடுவதுமாக இருந்துள்ளனர். சங்க இலக்கியச் செய்திக்களஞ்சியம் "கோடியர் என்பதற்கு கூத்தர்"[128] எனப்

பொருள் தந்துள்ளது. மேலும், “கோடியர் என்போர் கூத்துக் குழுவினருள் கோடு என்னும் இசைக்கருவி வாசித்த கலைஞர் ஆவர். இவர்கள் சங்க இலக்கியங்களில் கூத்தர் என்ற பொருண்மையிலே குறிக்கப் பெற்றுள்ளனர்”[129] எனக் காந்திதாசன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.“வளைந்த ஊது கொம்பு போன்ற கருவியாகிய ‘கோடு’ இசைத்து ஆடிய கலைஞர் கோடியர் எனப்பட்டனர். கோடு என்பது யாழ்த்தண்டு ஊது கொம்பு எனவும் பொருள்படும். இது நாதஸ்வரம் போல நீண்ட மரத்தாலான குழல் கருவியாகும். வாயில் வைத்து ஊதி இசைக்கும் ‘தூம்பு’ போன்ற ஓர் ஊது கருவியாகும்”[130] எனப் பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது. இக்கோடியர் இசைக்கருவிகள் இசைத்துள்ளமையை, அகநானூறு (111:9), நற்றிணை (212:3-4), பதிற்றுப்பத்து (56:1-2) பாடல்களும் குறிப்பிடுகின்றன. மேலும், இவர்கள் யாழ், முழவு, தூம்பு போன்ற இசைக்கருவிகளை இசைத்துள்ளனர் என்பதும் தெளிவு. இவர்கள் இசைக்கருவிகள் இசைத்து ஆடிய தன்மையைப் புறநானூறு (29:22-23) குறிப்பிடுகின்றது. இவ்வாறு கோடியர்கள் விழாக்காலங்களில் இசைக்கருவிகள் இசைத்ததில் இவர்கள் முக்கிய பங்கு வகித்துள்ளனர்.

### 3.9.6 வயிரியர்

நிகழ்த்துக் கலைஞர்களுள் ஒரு பிரிவினராக வயிரியரும் இடம்பெறுகின்றனர். இவர்களை முழவு போன்ற இசைக்கருவிகளை இசைக்கும் கலைஞர்களாக அகநானூறு (328:1-2), மற்றும் புறநானூறு (164:12-13) குறிப்பிடுகின்றன. மேலும், இவர்கள் இசை இசைக்கும் தொழில் புரிந்துள்ளமையை நற்றிணை (100:810) அகநானூறு (45:11-12) பரிபாடல் (10:130-131) ஆகிய நூல்களும் குறிப்பிடுகின்றன. இவர்கள் பண் அமைத்துப் பாடல் பாடும் இயல்புடையவர்கள் ஊர் ஊராகச் சென்று மன்றங்களிலும் விழாக்காலங்களிலும் இசை இசைப்பது பண் அமைத்துப் பாடல் பாடுவதும் இவர்களது தொழிலாக இருந்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது. இதையே, “வயிரியர் பண்ணமைந்த பாடலைப் பாடுவதிலும் முழவினை இசைப்பதிலும் வல்லவர்கள்”[131] எனப் பக்தவத்சலபாரதி கூறிவதும் இணைத்துநோக்கத்தக்கது.

### 3.9.7 கண்ணுளர்

கூத்தர்களுள் ஒரு பிரிவினராகக் ‘கண்ணுளர்’ என்போரும் குறிப்பிடப்படுகின்றனர். இவர்களைக் “கண்ணுளர் - கூத்தன்”[132] எனச் சங்க

இலக்கியச் செய்திக் களஞ்சியம் குறிப்பிட்டுள்ளது. மேலும், பக்தவத்சலபாரதி, "கண்ணுளர் என்பார் இசையோடு கூத்து நிகழ்த்துபவர்கள்"[133] எனக் கூறியுள்ளார். மேற்கூறியவற்றை நோக்கக் கூத்தர்களுள் ஒரு பிரிவினராகக் கண்ணுளர் விளங்கியுள்ளமையை அறிய முடிகின்றது. அதனோடு, "கண்ணுளர் என்பார் மாறுவேடம் பூண்டு ஆடும் கூத்தராவார். இவர்கள் சாந்திக் கூத்தாடுபவர்கள் என்று உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்."[134] எனும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது. கூத்துக்கலைஞரான கண்ணுளர்தனிப் பிரிவினராக இருந்துள்ளமையைப்

"வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி" (பதி.20:16)

எனும் பதிற்றுப்பத்துப் பாடல் வரியால் அறியலாம். மேற்கூறியவற்றை நோக்க குழுவாக வாழ்ந்த கூத்தர்களுக்குள் வயிரியர், கோடியர், கண்ணுளர் எனும் பிரிவுகள் இருந்துள்ளமையை அறிய முடிகின்றது.

### 3.9.8 கழைக்கூத்தாடிகள்

அன்றாட வாழ்வில் கலைகளை நிகழ்த்திய கூத்துக் கலைஞர்களைப் போலல்லாது பிழைப்பிற்காகக் கூத்து நிகழ்த்திய கழைக் கூத்தாடிகளும் இருந்துள்ளமையை குறுந்தொகை (7:3-5), நற்றிணை (95:12) பாடல்களால் அறியமுடிகின்றது. "ஊர்தோறும் கழைக்கூத்தினை நிகழ்த்தியோர் ஆரியக் கூத்தர், வேழம்பர் எனப்பட்டனர்"[135] என்ற காந்திதாசன் அவர்களின் கூற்றும் இங்கு நோக்கத்தக்கது. எனவே ஊர் தோறும் சென்று, பிழைப்புக்காகக் கயிற்றில் நின்று ஆடிய கலைஞர்களும் சங்க காலத்தில் இருந்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.9.9 இயவர்

சங்க காலத்தில் வயிரியர், கோடியர் போன்று இசைக்கருவிகளை இசைக்கும் இசைக்காராக 'இயவர்' என்போரும் இருந்துள்ளனர். இவர்கள் குழல் முதலிய இசைக்கருவிகளை இசைப்பதில் வல்லவராக விளங்கியுள்ளனர். இவர்கள், "தோற்கருவியாளன், வாத்தியக்காரன் இயவர் எனப்பட்டனர்"[136] எனச் சசிவல்லி குறிப்பிட்டுள்ளார். மேலும், "கோடியர் வயிரியர் ஆகிய இருவரும் தாம் இசைத்த கருவிகளால் பெயர் பெற்றதைப் போல இயவர்கள் 'இயம்' எனும் இசைக்கருவியை இசைத்ததால் இப்பெயர் பெற்றனர். இயம் என்றால் முரசை ஒத்த தோலிசைக் கருவியாகும் என்றும் இவர்கள் தட்டை, தண்ணுமை, குழல் ஆகிய பல்வேறு

இசைக்கருவிகளையும் இசைத்துள்ளனர்”[137] என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதும் இணைத்து நோக்கத்தக்கது. ‘இயவர்’ இசைக்காரராக விளங்கியுள்ளமையை, நற்றிணை (113:10-11), ஐங்குறுநூறு (215:3-4), பதிற்றுப்பத்து (27:4-6) பாடல்களும் குறிப்பிடுகின்றன. மேலும், நீர்த்துறைப் பகுதிகளை இருப்பிடமாகக் கொண்டு இவர்கள் வாழ்ந்துள்ளமையும் புலனாகின்றது.

### 3.9.10 இளையர்

சங்க இலக்கியத்தில் ‘இளையர்’ என்ற சொல் இளைஞர், வீரர் மற்றும் ஏவல் செய்பவர்கள் எனும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்து (41:1-2,48:5-8,51:33-34) இவ்விளையரை பாணரிடம் யாழ் பயில்வோராகவும் யாழ், தண்ணுமை கருவி வாசிப்பவராகவும் கூறுகிறது. மேலும், இளையர் என்பதற்கு, “பாணரிடம் யாழ் பயிலும் சிறுவர்”[138] எனக் குறிப்பிடுகிறார் உரையாசிரியர் ஆலிஸ். “இளையர்-இளைஞர், ஏவல் செய்வார், வீரர்”[139] எனப் பொருள் விளக்கம் தருகின்றது சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம். இவற்றை நோக்க இசைக் கருவிகளை இசைப்பதற்குப் பழகும் இளைஞரையே ‘இளையர்’ எனப் பெயரிட்டு அழைத்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

### 3.9.11பொருநன்

கலைத் தொழில் புரிந்து வந்த கலைஞர்களில் ‘பொருநர்’ என்ற பிரிவினரும் அடங்குவர். இவர்களை ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என மூவகையாகப் பிரித்துக் கூறுவர். அரசனுடைய வீரத்தைப் புகழ்ந்து பரணி பாடிய பதிவு புறநானூற்றில் (386:18-25) இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் பொருநன் ஒரு குறிப்பிட்ட மன்னனின் அருகில் மட்டும் இருந்து கொண்டு அவனைப் புகழ்ந்து பாடல் பாடும் இயல்புடையவனாக இருந்துள்ளதைக் காட்டுகிறது. “பொருநர்கள் பிறவகைக் கலைஞர்களிடமிருந்து சற்று வேறுபட்டவர்கள். இவர்கள் அரசர்களோடும் தலைவர்களோடும் நெருக்கமான உறவு கொண்டிருந்தனர். போரிலும் அரண்மனையிலும் பொருநர்கள் அரசர்களுடன் அருகில் இருந்தனர். மற்ற கலைஞர்களை விட பொருநர்கள் குறைவாகவே வெளியிடங்களில் அலைந்து திரிந்தனர்”[140] என்ற பக்தவத்சல பாரதி கூறும் கருத்தும் கவனிக்கத்தக்கது. எனவே பொருநர்கள் மன்னனின் புகழ்பாடிக்

கொண்டு அவர்களுக்கு மட்டுமே உரியவராகப் பரிசில் பெற்று வாழ்ந்துள்ளனர் என்பதை உய்த்துணரமுடிகின்றது.

### 3.9.12 அகவுநர்

பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் ‘அகவுநர்’ என்ற கலைப்பிரிவினரும் இருந்துள்ளனர். இவர்கள் இசைக்கருவிகள் இசைத்துப் பாடுவர் என்பதை அகநானூறு (249:3-4), (208:1-4), பரிபாடல் (15:42-43) குறிப்பிடுகின்றன. இவர்கள் குழல், முழவு, கிணை போன்ற இசைக்கருவிகளை இசைத்துப் பாடல் பாடியுள்ளனர். இவர்களை, “அகவுநர் பாடுவதோடு இசைக்கருவிகளையும் இசைக்கக் கூடியவர்கள். இவர்கள் கிணை, பறை, குழல், முழவு, யாழ் போன்ற இசைக்கருவிகளை இசைத்தனர் என்றும் கையில் நுண்கோல் கொண்டு குறி சொல்பவர்கள் வள்ளல்கள் நிலக்கிழார்கள் முன் நல்வாழ்த்துப் பாடி ஆடுகின்ற கலைஞரும் ஆவர்”[141] எனப் பக்தவத்சலபாரதி கூறியிருப்பதும் நோக்கத்தக்கது. இவ்வாறு அரசனைப் புகழ்ந்து இசைக்கருவிகள் கொண்டு பாடும் தொழிலைச் செய்தவர்களாக அகவுநர் இருந்ததை அறிய முடிகின்றது.

### 3.9.14 அகவலன்

அகவுநர் போன்று மன்னனை வாழ்த்திப் பாடியவரை ‘அகவலன்’ என்று குறிப்பிட்டுள்ளனர். இவர்கள் கோல் கொண்டு போர்க்களச் சிறப்பைப் பாடும் தொழிலை மேற்கொண்டுள்ளனர். இதனை, பதிற்றுப்பத்துக் (43:26-28) குறிப்பிடுகின்றது. மேலும் “மன்னர் தம் போர்க்களத்தையும் கொடை முதலியவற்றையும் சிறப்பித்துப் பாடுவார் அகவர் அகவலன் எனப்படுவார்”[142] என்று சண்முகம்பிள்ளை குறிப்பிடுவதும் மன்னனது போர்க்களத்தைப் பாடும் தொழில் செய்தவரும் இருந்திருப்பதைக் காட்டுகின்றது.

### 3.9.15 நகைவர்

பழங்காலத்தில் மன்னர்களை மகிழ்விக்கும் தொழிலைச் செய்தப் பிரிவினரை ‘நகைவர்’ என்று அழைக்கப்பட்டமையை,

“நகைவர் ஆர நன் கலம் சிதறி” (பதி.37:4)
“நகைவர் ஆர நன் கலம் சிதறி” (பதி.43:20)

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. மேலும், நகைவர் என்ற தொழிற்பிரிவினர் இருந்துள்ளமைக்குச் சான்றாக, “நகைவர் ஒருவகை இரவலர்க் கலைஞர்கள் வகையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் நகைச்சுவைக்

கலைஞர்கள் என்றும் அரசவைக் கோமாளிகள் என்றும் விகடகவி என்றும் சில அறிஞர்கள் கருதுகின்றனர்”[143] எனப் பக்தவத்சல பாரதி அவர்களைக் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது. “நகைவர் என்பதற்கு நட்பினர், இரப்போர்”[144] என விளக்கம் தந்துள்ளது சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம். இவற்றை ஆராயும் போது பெரும்பாலும் கலைத் தொடர்பான தொழில் செய்தவர்கள் அனைவரும் இரவலர்களாகவே வாழ்ந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. தமக்குத் தெரிந்த தொழில்களைச் செய்து வாழும் கலைப்பிரிவினா் தாம் பயன்படுத்திய பொருட்களின் அடிப்படையில் பெயர் பெற்று எளிய வாழ்வை வாழ்ந்துள்ளனா். தொழில் குடிகளை வாழ்வியல் தொடர்பான தொழில் செய்தவர்கள், வணிகத் தொழில் செய்தவர்கள், கலைத் தொழில் செய்தவர்கள் என மூவகையாகப் பிரித்துக் கூறுமளவிற்குத் தொழில் சார்ந்த மக்கள் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளதை இப்பகுதியால் அறியமுடிகின்றது. மேற்கண்டவற்றை நோக்க தமிழகத்தின் ஆதிக்குடிகளாகக் கருதப்படுவா் திணைக்குடிகள் இவா்கள் அந்தந்த திணைக்குரியவா்களாகவும் திணைக்கேற்ப தொழிலில் ஈடுபட்டவா்களாகவும் திகழ்ந்தனா். இவா்கள் தங்கள் வசதிக்கேற்ப அதே திணையில் (நிலத்தில்) வாழ்பவா்களாகவும் அத்திணையில் வாழ்க்கைக்கு ஏற்ப சூழல் இல்லாத போது வேறு திணைக்கு இடம்பெயரக் கூடியவா்களாகவும் இருந்தனா். அவ்வாறு அவா்கள் இடம்பெயரும் திணைக்களுக்கு ஏற்ப தொழிலில் ஈடுபட்டு வந்தனா். இவா்கள் திணைக்குடிகள் என்று அழைக்கப்பட்டனா். இவா்கள் திணைகளுக்கு ஏற்ப பாகுபடுத்தப்பட்டனா். பாலைத்திணையில் வசித்தவா்களைவிட மருதத்திணையில் வசித்தவா்கள் சிறப்பான வாழ்க்கை முறைகளை மேற்கொண்டவா்களாக இருந்தனா். இதனை அடிப்படையாகக் கொண்டே திணைக்குடிகளின் பாகுபாடு அமைந்திருந்தது. உணவு, உடை, இருப்பிடம், பொருளாதாரம் ஆகியவற்றில் இத்திணை குடிகளுக்கிடையே பாகுபாடும் ஏற்றத்தாழ்வுகளும நிலவின எனினும் அவை மாறும் இயல்புடையவனாக இருந்தன அதாவது கீழ்நிலையில் உள்ளவர்கள் உணவு உடை இருப்பிடம் பொருளாதாரம் ஆகியவற்றில் மேல் நிலையை அடைவதற்கும் மேல் நிலையில் உள்ளவர்கள் அசாதாரண சூழல்களால் கீழ்நிலையை அடைவதற்கும் வாய்ப்புகள் இருந்தன. சுருங்கக்கூறின் இப்பாகுபாடுகளும் ஏற்றத்தாழ்வும் மாறும் இயல்புடையனவாக இருந்தன எனலாம். அதேபோல் மக்கள் திணைகளில் நிலைத்து வாழத் தொடங்கிய போது திணைகளுக்கு ஏற்பவும் தேவைக்கு ஏற்பவும் புதுப்புது தொழில்கள்

தோன்றலாயின அவற்றைச் செய்தவர்கள் தொழில் குடிகள். இத்தொழில் குடிகள் திணைக்குடிகளிலிருந்து தோற்றம் பெற்றவர்கள் என்றாலும் பல நிலைகளில் திணைக்குடிகளிலிருந்து வேறுபட்டு வாழ தலைப்பட்டனர். இத்தொழில் உணவு, உடை, இருப்பிடம், பொருளாதாரம் ஆகியவற்றில் திணைக்குடிகளுக்கும் தொழிற்குடிகளுக்கும் இடையில் மிகப்பெரிய ஏற்றத்தாழ்வுகள் மலிந்தன எனினும் இவ்வேற்றத்தாழ்வுகள் தளர்வு நிலையிலேயே காணப்பட்டன. திணைக்குடிகள் தொழில் குடிகளாக மாறுவதற்கும் வாய்ப்புகள் இருந்தன. யாருக்கும் எவ்வித நிர்பந்தமும் இல்லாது இவர்களின் வாழ்க்கை வட்டச் சூழல் அமைந்தது. சுருங்கக்கூறின் இத்தொழில் பாகுபாடானது தனிப்பட்ட மனிதனுடன் தொடர்புடையதாக இருந்தது. ஒருவன் தன் அறிவு, உழைப்பு, திறமை ஆகியவற்றைப் பயன்படுத்தி ஒரு தொழில் இருந்து மற்றொரு தொழிலுக்கு முன்னோக்கிச் சென்றான். இங்குத் தகப்பனின் தொழில்தான் பிள்ளையும் செய்ய வேண்டும் என்ற நிலை இல்லை. இத்தொழில் குடிகளில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் இருந்ததே அன்றி தொழில் அடிப்படையிலான பிரிவினை வாதங்களும் ஏற்றத்தாழ்வுகளும் இல்லை. ஒருவன் ஒரு தொழிலில் இருந்து பிரிதொரு தொழிலுக்கு மாறும் நிலை இருந்தது. அவ்வாறு மாறுவதற்குச் சமுதாயத்தில் எவ்வித நிர்பந்தமும் இல்லை இங்குத் தந்தையின் தொழிலுக்கு மகன் உதவியாக இருந்தனே அன்றி தந்தையின் தொழிலைத்தான் மகன் செய்ய வேண்டும் என்ற நிர்பந்தம் இருந்தது இல்லை. இது தொழிலின் அடிப்படையிலும் பொருளாதார அடிப்படையிலும் ஏற்றத்தாழ்வுகளை உருவாக்கியதே தவிர ஒரு நிலையான ஏற்றத்தாழ்வுள்ள சமூகத்திற்கு வித்திடவில்லை தொழில் முறை மாறும் போது பொருளாதார நிலையும் மாறியது. இதனால் வறியவன் செல்வந்தனாகவும் செல்வந்தன் வறியவனாகவும் மாறும் நிலை இருந்தது இதனை அடிப்படையாகக் கொண்டே தொழிற்குடிகளின் பாகுபாடு அமைந்திருந்தது.

### 3.10 முடிவுரை

- 'எட்டுத்தொகை இலக்கியங்களில் குடிகள்' எனும் இவ்வியலில் நில அமைப்பைக் கொண்டு வாழ்ந்த திணை சார்ந்த மக்களும் தொழில் அடிப்படையில் வாழ்ந்த தொழில் சார்ந்த மக்களும் இடம்பெற்றுள்ளனர். குறிஞ்சி நில மக்கள், வரகு வைக்கோலால் வேயப்பட்ட 'குரம்பை' என்று அழைக்கப்பட்ட குடிசைகளில் வாழ்ந்துள்ளனர். இயற்கையில்

கிடைக்கக்கூடிய பொருட்களே இவர்களின் உணவு எனினும் நறு நெய்யிலே கடலையை வறுத்து, அதனோடு சோறு சமைத்து உண்டுள்ள மலை நாட்டினரும் இருந்துள்ளமை உணவால் உயர்வு தாழ்வு நிலவியதைக் காட்டுகின்றது.

- குறிஞ்சி நிலமக்களின் வேட்டைத் தொழில் குறைந்த பயன் தரவே, மலைகளில் உள்ள மரங்களை வெட்டி நிலத்தைத் திருத்தி உழுது, நெல், எள், வரகு, தினை, மிளகு ஆகியவற்றை விளைவித்துள்ளனர். வேட்டையாடிப் பொருள் தேடிக்கொணர்ந்த மக்கள் அந்நிலத்து உழைக்கும் மக்களாகவும் அத்தகைய மலைகளுக்கு உரிமை கொண்டாடுபவராக பாரி, ஓரி, பேகன், நன்னன், நாஞ்சில் வள்ளுவன், நள்ளி, ஆய் அண்டிரன், ஏறைக்கோன், குமணன், குதிரைமலை பிட்டங்குற்றன், ஆதனுங்கன், பொதியமலை திதியன், புல்லி, தொண்டையர் ஆவி - ஏழில் குன்றம் போன்றோர் குறிப்பிடப்பட்டுள்ளமை இவர்களுக்குள் இருந்த படிநிலைகளைக் காட்டுவதாய் அமைகிறது.
- முல்லை நில மக்கள் வாழ்ந்த பகுதியைப் ‘பாக்கம்’ என்று குறிப்பிட்டுள்ளனர். ஆநிரை மேய்த்தல் மட்டுமல்லாது வரகு, தினை முதலியவற்றை விளைவித்துள்ளனர். சங்ககாலத்தில் புல்லினத்து ஆயர் (ஆடுகளை மேய்ப்பவர்) கோவினத்து ஆயர் (மாடுகளை மேய்ப்பவர்) எனும் பாகுபாடு இருந்துள்ளமை புலனாகிறது.
- மருத நிலத்தில் உழுதுண்ணும் வேளாளர்கள், உழுவித்துண்ணும் வேளாளர்கள் களமர், தொழுவர், அரிநர், வினைஞர், அறைநனர், கூவலர், நிரைத்தொழுவர் எனப் பலரும் குறிப்பிடப்பட்டுள்ளனர். நெல்லறுப்பவர்கள் மடையில் இருந்த வாளை மீன், உழுபவர்கள் ஆமை, கரும்பு வெட்டுபவர் கரும்பிலிருந்து கிடைக்கும் தேன் முதலியவற்றை உணவாகக் கொண்டுள்ளமையே பல விதத் தொழில் பிரிவினர் இருந்துள்ளமைக்குச் சான்றாகின்றன. உழுவித்துண்ணும் உழவர்கள் உழுதுண்ணும் உழவர்களுக்கு ஆமை இறைச்சி, ஆரல் மீன், மது போன்றவற்றை வழங்கியுள்ளதும் பாகுபாட்டை உறுதிப்படுத்துகிறது.
- நெய்தல் நிலத்தவரில் ஒரு சிலர் சேரியிலும் ‘பாக்கம்’ என்ற பகுதிகளிலும் வசித்துள்ளமையே இரு தரப்பட்ட மக்கள் இருந்திருப்பதை உறுதிப்படுத்துகிறது. பரதவரில் தலைவர்களாகச் செயல்பட்டவர்களைத் ‘தென்பரதவர்’ எனக் குறிப்பிடுகின்றனர். இவர்களது வலிமை கண்டு

பேரரசர்களும் எதிர்த்துள்ளமை அவர்களுடைய சிறப்பான வாழ்க்கையைக் காட்டுவதாய் அமைகிறது.

- பாலை நில மக்கள் குறுகிய புதர் வடிவில் உள்ள குடிசையிலும் மறவர்கள் அரண்களிலும் வாழ்ந்துள்ளனர். குறிப்பாக எயினர் (வேட்டுவர், கூளியர்) என்ற பெயரில் உள்ளோர் வேட்டைத் தொழிலும், மறவர், மழவர் என்போர் வழிப்பறி செய்தல், ஆநிரை கவர்தல் போன்ற தொழில்களைச் செய்துள்ளமை. பாலை நிலத்திலும் மக்கள் பல பிரிவுகளாக வாழ்ந்துள்ளமையைத் தெளிவுபடுத்துகிறது.
- எட்டுத்தொகை நூல்களில் ஐவகைத் திணை சார்ந்த மக்கள் மட்டுமல்லாது தொழில் சார்ந்த மக்களும் இடம்பெற்றுள்ளனர். இவர்கள் வாழ்வியல் தொழில் செய்வோர், வணிகத் தொழில் செய்வோர், கலைத் தொழில் செய்வோர் என மூவகை படுவர் எனலாம்.
- வாழ்வாதாரத்திற்கானத் தொழிலில் ஈடுபட்ட வாழ்வியல் தொழிலினரான குயவர். கொல்லர்கள், போர்க்கருவிகள், வீட்டுப் பொருட்கள், வேளாண் கருவிகள் ஆகியவற்றைச் செய்துள்ளனர். இவர்களைக் ‘கம்மியர்’ என்று அழைக்கப்பட்டனர்.
- ‘புலையர்’ துடி கொட்டி செய்தி அறிவித்தல், பிணம் எறித்தல், ஈமச்சடங்கு செய்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளமையால் இவர்களைப் புறநானூறு இழிசினன், இழிபிறப்பளன் எனக் கூறி இழிவுபடுத்தியுள்ளது.
- சங்க கால மக்கள் தோலின் பயனறிந்து போர்க்கருவிகள்-முரசு இசைக்கருவிகள்- பறை, வீட்டுப் பொருட்கள் எனப் பலவற்றை சீரிய முறையில் செய்துள்ளனர். பண்டைத் தமிழ் மக்கள் தென்னை, பனை, மர ஓலைகளைக் கொண்டு கூடை, பாய் இவற்றைச் சோறு கொண்டு செல்ல, பூப்பறித்துப் போட, வெயில் மழையிலிருந்துத் தங்களைக் காத்துக் கொள்ள, நீர் இறைக்க எனப் பலவிதமான பயன்பாடுபொருட்களை செய்து கொடுத்துள்ளனர். புல், பொன், பூந்தாதுக்கள் கொண்டு பாவை செய்தல், துடியன், முரசு அறைவோர், பறையன், நாழிகைக் கணக்கர், அறிவன், சாணைக்கல் செய்யும் காரோடன், கரும்புச்சாறு எடுக்கும் அறைவனர், கட்டில் பின்னுவோன், தேர் ஓட்டும் வலவன், வண்டி ஓட்டும் கைப்போன், யானைப்பாகன், நறுமணப் பொருட்கள் தயாரிக்கும் அரைக்குநர், முத்து, மணி, பவளம்

கொண்டு பொருட்கள் செய்த கம்மியர், அகவன் மகள், காவலர்கள் காவலர்களுள் ஊர்க்காவலர், வயல் காவலர், மனைக் காவலர், நீர் நிலைக் காவலர் எனப் பலரும் தலைவன் தலைவியருக்கு ஏவல் பணி செய்த ஏவலர்களும் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளமை புலனாகிறது.

- வணிகத் தொழில் செய்த பூ விலைப்பெண்டு, தானியங்கள் விற்ற கூலம் பகர்நர், பொன் பகர்நர், மிளகு வணிகர், உமணர் வணிகர்களும் கலையியல் தொடர்பானத் தொழில் செய்த சிறு பாணர், பெரும்பாணர் கூத்தர், விறலி பொருநன், கூத்தருள் கோடியர், வயிரியர், கண்ணுளர் எனும் பிரிவினரும் கயிற்றில் நின்று ஆடிய கழைக்கூத்தாடிகள், குழல் முதலிய இசைக்கருவி இசைக்கும் இயவர், பாணரிடம் யாழ் பயில்வோரான இளையர். பரணி பாடிய பொருநன், இசைக்கருவி இசைத்துப் பாடிய அகவுநர், மன்னனது போர்க்களச் சிறப்பை வாழ்த்திப் பாடிய அகவலன், மன்னர்களை மகிழ்வித்த நகைவர் எனப் பல பிரிவனராகச் சங்க கால மக்கள் வாழ்ந்துள்ளனர் எனலாம்.

**சான்றெண்விளக்கம்**

1. மது.ச.விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.93.
2. மேலது, ப.39.
3. வித்துவான் வேங்கடராமன் (ப.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப.9.
4. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.22.
5. சாமி.சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.42.
6. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.24.
7. மேலது, ப.24.
8. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.37.
9. சாமி.சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.42.
10. மேலது, ப.22.
11. அ.ஆலிஸ் (உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.37.
12. மது.ச.விமலானந்தம், முந்நூல், ப.45.
13. சாமி.சிதம்பரனார், முந்நூல், பக். 414-415.
14. மேலது, பக்.45-46.
15. மது.ச.விமலானந்தம், முந்நூல், ப.43.
16. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.79.
17. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.19.
18. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.79.
19. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.19.
20. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.8.
21. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.143.
22. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.244.
23. க.வெள்ளைவாரணன், சங்க காலத் தமிழ் மக்கள், ப.34.
24. மேலது, ப.34.
25. உ.வே.சாமிநாதையர், புறநானூறு மூலமும் உரையும், ப.111.
26. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.355.
27. மேலது. ப.350.
28. உ.வே.சாமிநாதையர், முந்நூல், ப.94.
29. மேலது,ப.97.
30. மேலது, ப.109.
31. மேலது, ப.96.
32. மேலது, ப.98.

33. மேலது, ப.111.

34. மேலது, ப.93.

35. மேலது, ப.111

36. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.88.

37. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.35.

38. அ.தட்சிணாமூரத்தி, முந்நூல், ப.52.

39. வி.நாகராசன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.485.

40. அ.பாண்டுரங்கன், சங்க இலக்கியம்(சமயம், வழிபாடு, அரசு சமூகம்), ப.147.

41. இராசமாணிக்கனார், முந்நூல், ப.96.

42. மேலது, ப.97.

43. தேவநேயப்பாவாணர், பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.153.

44. அ.பாண்டுரங்கன், முந்நூல், ப.182.

45. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண்மைச்சமுதாயம், ப.75.

46. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.60.

47. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.50.

48. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.58.

49. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும், ப.630.

50. வேங்கடராமன் (ப.ஆ), முந்நூல், ப.630.

51. கு.வெ.பாலசுப்பிரமணியன், புறநானூறு மூலமும் உரையும் ப.765.

52. மேலது, ப.385.

53. உ.வே.சாமிநாதையர், முந்நூல், ப.97.

54. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.100.

55. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.25.

56. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.22.

57. மேலது, ப.62.

58. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.29.

59. .இராசமாணிக்கனார், முந்நூல், ப.100.

60. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.25.

61. க. வெள்ளைவாரணன், முந்நூல், ப.5.

62. இரா.செயபால் (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், ப.305.

63. மேலது, ப.676.

64. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும், ப.15.

65. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.79.

66. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.65.
67. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.93.
68. மேலது, ப.93.
69. மேலது, ப.93.
70. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.67.
71. மா.இராசமாணிக்கனார், முந்நூல், ப.93.
72. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.104.
73. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.88-89.
74. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.91.
75. அ.பாண்டுரங்கன், முந்நூல், ப.150.
76. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.102.
77. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப. 102.
78. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.89.
79. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.103.
80. அ.பாண்டுரங்கன், முந்நூல், ப.150.
81. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.88.
82. அ.பாண்டுரங்கன், முந்நூல்,பக்.149-150.
83. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.86.
84. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.80.
85. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.107.
86. பி.டி.சீனிவாச அய்யங்கார், தமிழர் வரலாறு, ப.329.
87. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.91.
88. கு.வெ.பாலசுப்பிரமணியன், புறநானூறு (மூலமும் உரையும்), ப.364.
89. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், பக்.50-51.
90. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.171.
91. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.253.
92. மேலது, ப.256.
93. மேலது, ப.198.
94. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.106.
95. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.307.
96. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.91.
97. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.113.

98. மேலது, ப.117.

99. மேலது, பக்.139-140.

100. மேலது, பக்.143, 261.

101. மேலது, பக்.145-145.

102. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல், ப.361.

103. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.104.

104. கு.வெ.பாலசுப்பிரமணின், முந்நூல், ப.470.

105. த.கோவேந்தன், சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், ப.190.

106. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.59.

107. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.195-196.

108. க.வெள்ளைவாரணன், முந்நூல், ப.41.

109. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.60.

110. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.161.

111. மேலது, ப.83.

112. மேலது, ப.163.

113. மேலது, ப.161.

114. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.103.

115. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.303.

116. மேலது, பக்.181-182.

117. மேலது, ப.181.

118. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.110.

119. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.305-306.

120. த.கோவேந்தன், முந்நூல், ப.201.

121. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.226.

122. அ.தட்சிணாமூர்த்தி, முந்நூல், ப.48.

123. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.295.

124. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.49.

125. பக்தவத்சலபாரதி, பாணர் இனவரைவியல், ப.71-72.

126. மேலது, ப.49.

127. மேலது, ப.99.

128. த.கோவேந்தன், முந்நூல், ப.144.

129. க.காந்திதாசன், முந்நூல், ப.79.

130. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.81.

131. மேலது, ப.83.

132. த.கோவேந்தன், முந்நூல், ப.119.

133. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.81.

134. க.கார்த்திதாசன், முந்நூல், ப.90.

135. மேலது, ப.46.

136. வி.சி.சசிவல்லி, முந்நூல், ப.83.

137. பக்தவத்சலபாரதி, (உ.ஆ), ப.84.

138. அ.ஆலிஸ் (உ.ஆ), பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்) ப.157.

139. த.கோவேந்தன் (உ.ஆ), முந்நூல், ப.91.

140. பக்தவத்சலபாரதி, (உ.ஆ), முந்நூல், ப.76.

141. மேலது. பக். 87-88.

142. மு.சண்முகம்பிள்ளை, முந்நூல், ப.124.

143. பக்தவத்சலபாரதி, முந்நூல், ப.91.

144. த.கோவேந்தன், முந்நூல், ப.179.

# சங்ககாலக் குடிகளின் மேல்நிலையாக்க முயற்சிகள்

## 4.0 முன்னுரை

சங்க இலக்கிய நூல்கள் சங்ககாலச் சமூகத்தை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. அவற்றில் குறிஞ்சி, முல்லை, மருதம்,நெய்தல், பாலை எனும் ஐந்திணைகளை அடிப்படையாகக் கொண்ட குறவர், இடையர், உழவர், பரதவர், மறவர் எனும் மக்கள் பாகுபாட்டைக் காணமுடிகின்றது. இத்திணை சார்ந்த மக்களுள் தச்சர், குயவர், வண்ணார், கொல்லன் போன்ற பல விதத் தொழில் சார்ந்த பிரிவினரும் இடம்பெறுகின்றனர். இத்தகைய தொழில் குடிகளோடு பாணன், பொருநர், விறலி போன்ற கலைப்பிரிவினரும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பெறுகின்றனர். இத்தகைய திணைத் தொழில் குடிகளை வழிநடத்தத் தலைவர்களும் இருந்துள்ளனர். மேலும், இவர்களுக்குள் (குடிகளுக்குள்) பாகுபாடுகளும் வேறுபாடுகளும் நிலவியதைக் காணமுடிகின்றது.

திணைமக்களுக்குள் வாழ்ந்த தொழிற்பிரிவினரின் தோற்றப்பின்புலம் நிலமக்களுக்கும், தலைமைப் பண்புடையாருக்குமிடையே நிலவிய வேறுபாடுகள் அவர்களின் இயல்பு மற்றும் வாழ்க்கை முறை ஆகியவற்றையும் கிடைத்ததைக் கூடி உண்டு சேர்ந்து வாழ்ந்து வந்த இனக்குழு வாழ்க்கையில் மக்கள் பிரிவினுள் மேல்நிலையாக்க முயற்சிகள் நடைபெற்றிருப்பதையும் அதற்கான காரணங்களையும்ஆராய்ந்து விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

## 4.1 சங்ககாலக் குடிகளின் வேறுபாடு

ஐந்திணைகளிலும் வாழ்ந்து வந்த மக்கள் எளிய முறையில் புல், வரகு, வைக்கோல் போன்றவற்றால் குடிசை அமைத்து வாழ்ந்துள்ளனர். அவர்கள் அந்தந்த நிலத்தில் கிடைக்கக்கூடியவற்றையே உணவாக உண்டுள்ளனர். அன்றாட வாழ்க்கையைப் போராடி வாழ்ந்துள்ளனர். குறிஞ்சி நில மக்கள் வேட்டை விலங்குகளால் துன்பம் ஏற்பட்ட போதும் தளராது முயன்று வேட்டையாடி வாழ்ந்துள்ளனர். முல்லை நிலத்தார் பிற விலங்கினங்களால் ஆபத்து நேராவண்ணம் தம் கால்நடைகளை இரவு, பகல் பாராது பாதுகாப்பதும் அங்கேயே உறங்குவதுமாக வாழ்ந்துள்ளனர். மருத நிலத்தார் உழவுத் தொழிலை நாள் முழுவதும் செய்து தமது வாழ்வை வயல் பகுதிகளிலேயே பெரிதும் செலவழித்துள்ளனர். நெய்தல் நிலத்தார்

இரவு, பகல் என ஆழ்கடலுக்குள் சென்று தொழில்புரிந்துள்ளனர். பாலை நிலத்தார் பகைவரது பசுக்கூட்டங்களைக் கவர்தல், வழிப்பறி செய்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களைச் செய்து, சரியான உணவுக் கூடக் கிடைக்காமல் வசதியற்ற சூழலில் தம் வாழ்வை மேற்கொண்டுள்ளனர். இவ்வாறு ஐந்திணை மக்களும் எளிய வாழ்வையே வாழ்ந்து வந்துள்ளனர். ஆனால் இவ்ஐந்திணை மக்களை வழிநடத்துவோா் நல்ல செல்வ செழிப்புமிக்க மாட மாளிகைகள் பெரிய இல்லங்கள் என ஆடம்பரமாக வாழ்ந்துள்ளனர்.

### 4.1.1 நகரங்களில் இல்ல அமைப்பு

செல்வந்தர்கள் நீண்ட தூண்களைக் கொண்ட உயர்ந்த மாடங்களில் வாழ்ந்துள்ளனர். அம்மாடங்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. அவை புழுதியைத் தன் மேல் பூசிக் கொண்ட யானையைப்போல் காட்சியளிப்பதாக வருணித்துள்ளனர். மேலும், அம்மாடங்களில் ஏற்றியிருக்கின்ற விளக்கின் ஒளியைக் கொண்டே பரதவர்கள் இரவுப் பொழுதில் கடலுக்குச் சென்று மீன் பிடித்துள்ளதை,

“நெடுங்கால் மாடத்து ஒள்எரி நோக்கி
கொடுந்திமில் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்” (பட்.111-112)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. “காவிரிப்பூம்பட்டினத்து மருவூர்ப்பாக்கத்தில் கடற்கரைக்கு அண்மையில் உயர்ந்த மாடங்களைக் கொண்ட வளமனைகள் இருந்தன. அவற்றில் விளக்குகள் இரவு முழுமையும் எரிந்து கொண்டிருந்தன. விடியற்காலையில் கடலில் மீன் பிடிக்கச் சென்ற பூம்புகார்ப் பரதவருக்கு அவ்விளக்குகள் ஓரளவு துணைபுரிந்தன”[1] எனும் இராசமாணிக்கனார் கருத்தும் நோக்கத்தக்கது. செல்வந்தா் வீடுகளில் முற்றங்கள் இருந்துள்ளன. அம்முற்றங்களில் அமர்ந்து கொண்டு நெல்லைத் தின்ன வரும் கோழிகளைத் தம் காதுகளில் அணிந்திருக்கும் பொன்னால் ஆன மகரக்குழைக் கொண்டு விரட்டியுள்ளனர். அக்குழை சென்று புதல்வர்கள் ஓட்டிச் சென்ற சிறு தேரினைத் தடுத்துள்ளது. இவா்கள் பகையேதும் அறியாது செல்வம் நிறைந்துள்ள வளமை பொருந்திய மனைகளில் வாழ்ந்துள்ளதை,

“அகல்நகர் வியன் முற்றத்து
சுடர்நுதல் மட நோக்கின்
நேர் இழைமகளிர் உணங்கு உணாக்கவரும்
கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவி இன்று உருட்டும்

முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்கு பகை அல்லாது கலங்குபகை அறியா
கொழும் பல்குடிச் செழும்பாக்கத்து" (பட்.20-27)

எனும் வரிகள் இதனை உறுதிப்படுத்துகின்றன. "பிள்ளைகள் மூன்று உருளைகளைக் கொண்ட சிறு தேரை உருட்டி விளையாடுவதற்கேற்றபடி செல்வர் வீடுகளில் அகன்ற முற்றம் இருந்தது"[2] எனும் இராசமாணிக்கனார் கருத்தும் நோக்கத்தக்கது. செல்வச் செழிப்புடைய வீடுகளைக் கொண்டு பல தெருக்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அங்குள்ள வீடுகளில் உள்ள பெண்கள் பொற்சிலம்பு ஒலிக்க, வானத்தைத் தீண்டும் மேல்நிலை மாடத்தின்கண் நின்று பந்தாடியுள்ளனர். பந்தாடி இளைத்த பின் அம்மாளிகையின் முன் இருந்த மணலில் அமர்ந்து கழங்காடியுள்ளனர். பொன்னாலான அணிகலன்களை அணிவதும் பொழுது போக விளையாடி மகிழ்வதுமாக, எந்தவித துன்பமுமின்றி சிறப்பானதொரு வாழ்வை மேற்கொண்டிருந்தமையை,

"கூழ்உடை நல்இல் கொடும்பூண் மகளிர்
................ கால
தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப உயர்நிலை
வான்தோய் மாடத்து வரிப்பந்து அசைஇ
கைபுனை குறுந்தொடி தத்த பைபிய
முத்த வார் மணல் பொற்கழங்கு ஆடும்
பட்டின மருங்கின்" (பெரு.327:331-336)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. மேலும், விண்ணைத்தொடும் மாடங்களைக் கொண்ட நகரங்களும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளன. இதனை,

"விண்தோய் மாடத்து விளங்குசுவர் உடுத்த
வாடா வள்ளியின் வளம்பல தரூஉம்
நாடுபல" (பெரு.369:371)

எனும் வரிகள் சுட்டுகின்றன. இதையே, "தொண்டைமான் இளந்திரையனுடைய நாட்டில் விண்ணுறவோங்கிய மாடங்கள் மிகுந்திருந்தன என்றும் கொடும்பூண் அணிந்த மகளிர் மால்வரை மீது மயிலாடுவது போல் காற்சிலம்பு கலீர் கலீர் என இசைக்க விண்டோய் மாடத்தில் வரிப்பந்தாடினர்"[3] என அ.தட்சிணாமூர்த்தியும் "தொண்டைநாட்டில் இருந்த வீடுகள் மாடங்களைப் பெற்று உயர்ந்திருந்தன. அம்மாடங்களில் பேரணிகலங்களையுடைய மகளிர் வாழ்ந்தனர். அம்மாடங்களில் பந்தடித்து விளையாடினர் அம்மாளிகைகளின் முன் இருந்த மணலில் அம்மாடங்களுக்குரிய செல்வ மகளிர் அமர்ந்து கழங்காடினர்"[4] என இராசமாணிக்கனாரும் குறிப்பிட்டுள்ளமை கவனிக்கத்தக்கது.

விண்ணுலகத்தைத் தீண்டும்படி உருவாக்கப்பட்டுள்ள எழுநிலை மாடங்களின் மேல்மாடத்தில் இளவேனில் காலத்தில் உறங்குவதற்கெனப் படுக்கைகளும் தென்றல் காற்று வழங்கும் சாளரங்களும் அமைக்கப்பட்டுகூதிர்காலத்தில் காற்றுப் புகாதவாறு கதவுகள் நெருக்கமாக உருவாக்கப்பட்டிருந்ததை,

"வான்உற நிவந்த மேல்நிலை மருங்கின்
வேனில் பள்ளித் தென்வளி தருஉம்
நோய்வாய்க் கட்டளை திரியாது திண்நிலைப்
போர் வாய்க் கதவம் தாழொடு துறப்ப" (நெடு.60-63)

எனும் வரிகளால் அறியமுடிகின்றது. "மொட்டை மாடி வேயா மாடம் எனப்பட்டது. கோடைக்காலத்தில் நிலவுப் பயன்கொள்ளுதற்கு நிலா முற்றங்கள் அமைக்கப்பட்டிருந்தனகூதிர் காலத்தில் காற்றுச் சாளரங்கள் மூடப்பட்டுக்கிடந்தன"[5] என அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிட்டுள்ளார். அத்தகு செல்வ மனைகளில் இருப்போருக்குக் காவல் புரிவோரும் குற்றேவல் செய்வோரும் இருந்துள்ளனர். அவர்கள் கத்தூரி முதலிய மணப்பொருள்களைச் சேர்த்து சாந்து அரைத்துக் கொடுத்துள்ளதை,

"கடியுடை வியல்நகர்ச் சிறுகுறுந்தொழுவர்
கொள்உறழ் நறுங்கல் பல கூட்டு மறுக" (நெடு.49-50)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. இதனை உறுதிப்படுத்தும் வகையில், "மதுரை நகரத்துச் செல்வர் இல்லங்கள் அகன்றிருந்தன. காவலரைப் பெற்றிருந்தன. குற்றேவல் இளைஞரையும் பெற்றிருந்தன"[6] என்ற இராசமாணிக்கனார் கூற்றும் செல்வர்கள் வாழ்ந்த செழிப்பான வாழ்வுக்குச் சான்றாகும். பல பெயர்களைத் தன்னகத்தே கொண்ட தேவர் உலகில் சென்று தங்கும்படியான உயர்ந்த வீடுகள் இருந்துள்ளன. அவ்வீடுகள் பல சாளரங்களைப் பெற்று அவை ஆறு கிடப்பது போன்று இருபுறமும் நெடிய தெருக்களைக் கொண்டு அமைந்திருந்ததை,

"......................அணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு
வையை அன்ன வழக்குடை வாயில்
வகைபெற எழுந்து வானம் மூழ்கி
சில்காற்று இசைக்கும் பல்புழை நல்இல்
யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெருவில்" (மது.353-359)

எனும் மதுரைக்காஞ்சி வரிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடல் தெய்வத்தன்மை பொருந்தியதும் நெய் இட்டுக் கருகிய கதவுடைய மாடங்களைக் குறிப்பிடுகிறது. "பாண்டியன் தலைநகரான மதுரையில் இருந்த சில இல்லங்கள் பல கூறுபாடுகளைப் பெற்று வானளாவியிருந்தன. தென்றற்காற்று

ஒலிக்கும் பல சாளரங்களையுடையனவாயிருந்தன. பல கூறுபாடுகள் மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை என்றாற்போலும் பெயர்களைக் கொண்ட இல்லப்பகுதிகள்"[7] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது. செல்வம் நிறைந்த இல்லங்கள் மலை மற்றும் மேகம் போல ஓங்கி, ஆறு போன்ற பெருந்தெருக்களைக் கொண்டு விளங்கியமையை,

"நிதியம் துஞ்சும் நிவந்து ஓங்கு வரைப்பின்
பதி எழல் அறியாப் பழங்குடி கெழீஇ
வியல் இடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து
யாறு எனக் கிடந்த தெருவின்
மலைஎன மழைஎன மாடம் ஓங்கி" (மலை.478-481, 484)

எனும் வரிகளின் மூலம் அறியமுடிகின்றது. பெரிய மாடங்களில் நிலா முற்றங்கள் அமைந்திருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அத்தகைய நிலா முற்றங்களில் நின்று கொண்டு செல்வ மகளிர் திருவிழாக்களைக் கண்டு மகிழ்ந்துள்ளனர். இதனை,

"வான வண்கை வளம்கெழு செல்வர்
நாள் மகிழ் இருக்கை காண்மார் பூணொடு
தென்அரிப் பொற்சிலம்பு ஒலிப்ப ஒள் அழல்
தா அற விளங்கிய ஆய்பொன் அவிர் இழை
அணங்கு வீழ்வு அன்ன பூந்தொடி மகளிர்
…………………………………..
……………………………………
நிரை நிலை மாடத்து அரமியம் தோறும்
மழைமாய் மதியின் தோன்றுபு மறைய" (மது.442-446,451-452)

எனும் வரிகள் சுட்டுகின்றன. இதனை, "பெரிய மாடங்களில் நிலா முற்றங்கள் அமைந்திருந்தன. அம்மாடங்களில் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. (அவை, அவர்கள் சமயத்தை உணர்த்திய கொடிகளாயிருக்கலாம்) மங்கையர் அம்மாடங்களில் இருந்த நிலா முற்றங்களில் நின்று கோயில் விழாக்களைக் கவனித்தனர்"[8] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டுள்ளமை மேலும் உறுதிபடுத்தும். செல்வர்கள் உயர்ந்த இல்லங்களில் பாவை விளக்குகள் ஒளி வீசிய உயர்ந்த ஏழடுக்கு மாடங்களில் வாழ்ந்துள்ளதை,

"பாவை விளக்கில் பரூஉச்சுடர் அழல
இடம்சிறந்து உயரிய எழுநிலை மாடத்து" (முல்:85-86)

எனும் முல்லைப்பாட்டு வரிகள் குறிப்பிடுகின்றன. நகரங்கள், உயர்ந்த நீண்ட மாடங்கள் நடுவே நீர் பாய்தற்கு என மதகுகள் கொண்டு விளங்கியுள்ளதை.

"நெடுமால் சுருங்கை நடு வழிப்போந்து
நெடுநீர் மலிபுனல் நீள் மாடக்கூடல்" (பரி.20:103,105)

எனும் பரிபாடல் அடிகளால் அறியமுடிகின்றன. மேற்கூறியவற்றை நோக்க, மலை, காடு, கடல், வயல் என அனைத்துப் பகுதிகளில் வாழ்ந்து வந்த திணை மக்கள் போலல்லாது, நகரங்களின் பல இடங்களிலும் மக்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள் மிகுந்த வசதியோடு எவ்விதப் பசியும் துன்பமும் அறியாது வாழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது. மேலும், பொன்னாலான பல அணிகலன்களை அணிந்து கொண்டு, அதைக் கோழிகளை விரட்ட, விளையாட்டுப் பொருளாகப் பயன்படுத்துமளவுக்குச் சிறப்பானதொரு வாழ்வை வாழ்ந்துள்ளனர். சங்க காலத்தில் எளிய வாழ்வை வாழ்ந்தவர்கள் மட்டுமல்லாது நகரங்களில் குடியமர்ந்து செல்வச் செழிப்புடன் மக்கள் வாழ்ந்திருப்பது மக்களுள் நிலவிய ஏற்றத் தாழ்வைக் காட்டுகின்றது. இவசங்கச் சமூகம்பொருளாதார அளவில் ஏற்றத்தாழ்வுகள் நிறைந்து காணப்பட்ட சமூகமாகச் இருந்துள்ளமையை ஒருவாறு உய்த்துணர முடிகின்றது.

### 4.1.2 அரண்மனை அமைப்பு

மக்களை வழிநடத்திய மன்னன் வாழ்ந்தப் பகுதியை ‘அரண்மனை’ எனக் குறிப்பிடுவர். அம்மன்னனது அரண்மனைகள் நுட்பமாக ஒவ்வொரு பகுதியும் அமைய வேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு அத்திசையில் உள்ள தெய்வங்களுக்கு வழிபாடுகள் நிகழ்த்தி, மன்னனது தேவைக்கும் தகுதிக்கும் ஏற்ப மனைகள், மண்டபங்கள், வாயில்கள் எனப் பாகுபடுத்தி அமைத்துள்ளனர். அரண்மனைக் கட்டடங்கள் எல்லாவற்றையும் ஒரு சேர வளைத்து உயர்ந்த நிலைகளைக் கொண்ட கோபுர வாயிலை உருவாக்கியுள்ளனர். அங்குப் பொருத்தப்பட்ட கதவுகள் ஆணிகளாலும் இரும்புகளாலும் உருவாக்கப்பட்டிருந்தன. செவ்வண்ணம் பூசப்பெற்று கற்பலகைகள் செருகப்பட்டு, பிடிகளின் உருவங்களும் நடுவில் திருமகள் உருவமும் பொறிக்கப்பட்டிருந்தன. மேலும், மதிலின் வாயிலைப் பல மரங்களைச் சேர்த்து முடுக்கி உருவாக்கியுள்ளனர். யானைகள் நுழைவதற்கேற்ப அகலமாகவும் உயரமாகவும் அமைத்துள்ளனர். வாயில் முற்றத்தில் புதுமணல் பரப்பி, கவரிமான்களும் அன்னப்பறவைகளும் தாவி விளையாடும் அளவிற்கு வசதிகளுடன் அமைத்துள்ளனர். இது வளமுடன் வாழ்ந்த தலைவனின் நிலையைக் காட்டுகின்றது. அரசியர் படுக்கக்கூடிய கட்டில் யானையின் தந்தங்களால் உருவாககப்பட்டுள்ளது. அதோடு

முத்துக்களைத் தொங்கவிட்டு மயிர்க்கற்றைகளை நடுவே பரப்பி, தூய துணிகள் விரிக்கப்பட்டு சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தது. இதனை,

“ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பின்
பரு இரும்பு பிணித்து செவ்வர்க்கு உரீஇ
துணைமாண் கதவம் பொருத்தி இணை மாண்டு
நாளொடு பெயரிய கோள் அமைவிழு மரத்து
போது அவிழ் குவளைப் புதுப்பிடி கால்அமைத்து
தாழொடு குயின்ற போர்அமை புணர்ப்பின்
கைவல் கம்மியன் முடுக்கலின் புரைதீர்ந்து
ஐயவி அப்பிய நெய்அணி நெடுநிலை
வேன்று எழு கொடியோடு வேழம் சென்று புக
குயின் குன்றன்ன ஓங்குநிலை வாயில்
திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
நெடுமயிர் எகினத் தூநிற ஏற்றை
குறுங்கால் அன்னமொடு உகளும் முன்கடை” (நெடு.,72-92)

எனும் பகுதிகள் வழி அறியமுடிகின்றது. வசதியற்ற உழைக்கும் மக்கள் விலங்குத் தோலைப் படுக்கையாகப் பயன்படுத்தியதையும் செல்வ வளமிக்கோர்இன்பமான வாழ்வை மேற்கொண்டிருந்ததை இப்பாடல் உணர்த்தி நிற்கிறது.

### 4.2 தொழிற்குடிகளின் தோற்றம்

நிலத்தின் சூழல் மற்றும் தன்மையைக் கொண்டு மலைசார்ந்த பகுதியில் வாழ்வோரைக் குறிஞ்சி நிலமக்கள் என்றும் காடுசார்ந்த பகுதியில் வாழ்வோர் முல்லை நில மக்கள் என்றும் வயல் சார்ந்த பகுதியில் வாழ்வோர் மருத நில மக்கள்என்றும் கடல் சார்ந்த பகுதியில் வாழ்வோர் நெய்தல் நில மக்கள்என்றும் வளம் குறைந்த பகுதியில் வாழ்ந்தோர் பாலை நில மக்கள் என்றும் வகைப்படுத்தியுள்ளனர்.இந்நிலங்களில் ஐந்திணை சார்ந்த மக்களல்லாது ஒவ்வொரு நிலத்திலும் தொழிலடிப்படையில் தோன்றிய சில குழுக்களும்வாழ்ந்த வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அன்றாட வாழ்க்கைக்கு ஆதாரமான தொழில்களைச் செய்து வந்தோரை வாழ்வியல் தொழில் செய்வோர், வணிகத்தொழில் செய்வோர், கலைத் தொழில் செய்வோர் என பாகுபடுத்தி மேற்கண்ட இயல்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. எனவே ஐந்து நிலத்திற்குள் பிறத் தொழில் செய்வோர்கள் எத்திணைக்குரியோர் என்பது பற்றி அறிய வேண்டிய தேவையுள்ளது.

### 4.2.1 வாழ்வியல் குடிகள்

சங்ககாலத்தில் வாழ்வியல் தொழில் செய்த மக்களை குயவர், தச்சர், புலைத்தி, புலையர், கணியன், நாழிகைக்கணக்கர், கொல்லன், காருகர், பருத்திப் பெண்டிர், அட்டில் தொழிலர், தோல்மற்றும் ஓலைத் தொழில், பாவை செய்தல், கயிறு திரித்தல், வளையல் செய்தல், அறவோன், துடியன், முரசு, பறை அறைவோர், கட்டில் பின்னுவோர், வண்டி, தேர் ஓட்டுவோன், அறைநர், கூவலர், அரைக்குநர், காவலர், யானைப்பாகன், கம்மியன், கட்டுவிச்சி, ஏவலர், சுங்கம்கொள்பவர் எனப்பல வகையினராகப் பாகுபடுத்தலாம்.

ஆரம்ப காலத்தில் ஐந்திணைக்குரிய மக்கள் தங்கள் நிலங்களில் விளையும் பொருட்களைப் பண்ட மாற்று செய்து கொண்டனர். பின்னாட்களில் தங்கள் நிலங்களில் கிடைக்கும் உபரிப்பொருட்களைத் தொழில் முறை என்ற நிலையில் விற்கத் தொடங்கியுள்ளனர். மலைசார்ந்த பகுதியிலும் காடு சார்ந்த பகுதியிலும் வாழ்ந்த மக்கள் பெரிய அளவிலான சமையல் கலங்களோ, அணிகலன்களோ அல்லது ஆடைகளோ பெரிதும் பயன்படுத்தவில்லை. அவ்வகையில் மருத நில மக்கள்தான் நாகரிகமான முறையில் வாழத் தலைப்பட்டனர். எனவே அந்நிலத்தில்தான் குயவர், தச்சன், கொல்லன் (பொற்கொல்லன், இரும்புக்கொல்லன்) சலவைத் தொழில், நெசவுத் தொழில் இவையெல்லாம் தோன்றியிருக்க வேண்டும். ஏனெனில் அந்நிலத்தில் தான் நீர் வளமும் நிலவளமும் நிரம்பியிருந்தது. நீர் உள்ள பகுதிகளில் தான் சலவை செய்வதற்கேற்ப ஏரி, துறைகள் அமைக்கப்பட்டிருக்கும். அதில் துணிகளை அழுக்குப் போகத் துவைத்து எடுக்க வசதியும் இருந்திருக்கும். மேலும் உவர்மண் இருக்கும் இடத்தில் இருந்து மண் சேகரித்து நீர்த்துறைகளுக்குச் சென்று துவைத்தலும் நடந்திருக்கிறது. புலைத்தி குறித்து இடம்பெறும் பாடல்கள் பெரும்பாலும் மருதத் திணையைக் களமாகக் கொண்டுள்ளன. அதனை,

“நலத்தகைப் புலத்தி பசைதோய்த்து எடுத்த
தலைப்புடைப் போக்கித் தண் கயத்து இட்ட
நீரின் பிரியாப் பரூஉத் திரி கடுக்கும்
பேர் இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான் பூ” (குறு.330.1-4)
“… … … ஊரவர்
ஆடை கொண்டு ஒலிக்கும் நின் புலைத்தி” (கலி.72.14-15)

“ஆடு இயல் விழவின் அழுங்கல் முதூர்
உடையோர் பன்மையின் பெருங் கை தூவா

வறன் இல் புலைத்தி எல்லித்தோய்த்த
புகாப் புகா் கொண்ட புன் பூங் கலிங்கமொ" (நற்.90:1-4)

குறுந்தொகை, கலித்தொகை மற்றும் நற்றிணை பாடல்கள் வழி அறியமுடிகிறது. இந்த மூன்று பாடல்களும் மருதத் திணையில் அமைந்திருப்பது மற்றுமொரு சிறப்பம்சமாகும். நெல், கரும்பு. தென்னை போன்ற பொருட்களை விளைவிக்க ஏற்ற நிலம் மருத நிலம். எனவே அங்கு தான் பெரும்பாலான கலன்களைப் பயன்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. எனவே அதை எண்ணியே குயவர்கள் கலங்களை உருவாக்கியுள்ளனர். மண் வளம் பெற்றுத் திகழ்வதால் மட்கலன்கள் செய்ய ஆரம்பித்தனர். உற்பத்திப்பொருட்களின் எண்ணிக்கையைப் பொறுத்து கலங்களின் பயன்பாடும் அதிகரித்திருக்கும் எனலாம். இவர்கள் பெரும்பாலும் அரசு உருவான மருத நிலத்தில் தோன்றிய மன்னர்களுக்கும் பிற மன்னர்களுக்கும் பானை, முதுமக்கள் தாழி போன்ற பலப் பொருட்களைச் செய்து கொடுத்துள்ளனர்.

"தாழிக் குவளை வாடுமலா் சூட்டி" (அக.165.,11)
"தாழியும் மலா்பல அணியா" (அக.369.,6)

என்று அகநானூறு குறிப்பிடுகிறது. இப்பாடல் வரிகள் தாழி- பானைகளில் பூக்கள் சூடாமல் இருந்ததைக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"நனந்தலை மூதூா்க் கலம் செய் கோவே
… …. … நெடுமாவளவன்
தேவா் உலகம் எய்தினன் ஆதலின்
அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி
வனைதல் வேட்டனை ஆயின் எனையதூம்
இருநிலம் திகிரியா பெருமலை
மண்ணா வனைதல் ஒல்லுமோ" (புற.228.,4,10-15)

எனும் பாடலில் மூதூரில் கலங்கள் செய்யும் குயவனே, நெடுமாவளவனுக்குத் தாழி செய்ய விரும்பினால் நிலவைச் சக்கரமாகவும் பெருமலையை மண்ணாகவும் கொண்டு செய்ய முடியுமா என மன்னனின் சுற்றத்தாா் வினவுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலும் பெருமைக்குரியவருக்கு அவரது தகுதிக்கேற்ப தாழி அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடுவதாய் இப்பாடல் அமைந்துள்ளது.

"தன்னொடு
சுரம் பல வந்த எமக்கும் அருளி
வியல் மலா் அகன் பொழில் ஈமத் தாழி
அகலிதாக வனைமோ
நனந்தலை மூதூா்க் கலம் செய் கோவே" (புற.,256:3-7)

எனும் பாடலானது பெண் தன் கணவன் போரில் இறந்துபட, தனக்கும் கணவனுக்கும் பொருந்தும் படியான அகன்ற தாழியைச் செய்துகொடுக்கும் படி குயவனிடம் கேட்டுள்ளாள். மேற்குறிப்பிட்டுள்ள பாடல்களின் வழி பழமைவாய்ந்த ஊர்களில் வாழ்ந்து வந்த குயவர்கள் தாழி செய்துக்கொடுத்துள்ளனர் என்பதை அறியலாம். நெசவுத் தொழில் செய்வதற்கு முதலில் வேண்டப்படுவது நூல். அதனை, பருத்தி, பட்டு மரநார் இவற்றிலிருந்து எடுத்து துணிகள் நெய்தனர். குறிஞ்சி நிலத்தார் மரப்பட்டையில் உள்ள நாரினை எடுத்துப் பின்னி ஆடையாகப் பயன்படுத்தியுள்ளனர். முல்லை நிலத்தார் விலங்குகளின் தோலை ஆடையாகப் பயன்படுத்தியுள்ளனர். மருத நிலத்தார் கைத்தொழில் வண்ணம் மிகுந்து காணப்பட்ட ஆடை, அணிகலன்களைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருத்தமைவை, "நீர்வளம் குறைந்த வறட்சி மிகுந்த இடங்களில் பருத்தி விளையும் தினைப்புனத்தில் தினையின் இடையிடையே பருத்தியை விதைத்தலும் உண்டு"[9] என்கிறார் சசிவல்லி. எனவே முல்லை நிலத்தில் விளையும் பருத்தியிலிருந்து பஞ்சு எடுக்கும் தொழிலை ஆரம்பித்துள்ளனர். அவற்றை மருத நிலப் பகுதிகளில் உள்ளோர் நெசவுத் தொழில் செய்வதற்குப் பயன்படுத்தி ஆடைகளை நெய்துள்ளனர் என ஒருவாறு உணரமுடிகிறது.

தென்னை, பனை மரத்தின் ஓலைகளைக் கொண்டு பொருள் செய்துள்ளனர். ஆரம்பத்தில் கைத்தொழில்கள் யாவும் முல்லை, குறிஞ்சி நிலங்களில் தோன்றியிருந்தன. கலித்தொகை 117ஆவது பாடல்,

"மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்தது ஓர்
போழின் புனைந்த வரிப்புட்டில்" (கலி.,117:6,7)

என்று குறிப்பிடுகின்றது. இப்பாடல் பனை ஓலை பாய், குடை, புட்டில் போன்ற பொருட்களைப் பெரிதும் பயன்படுத்தியவர்களாக, விற்றவர்களாக குறிஞ்சி, முல்லை நில மக்களைக் குறிப்பிடுகின்றது. கலித்தொகைப் பாடல் முல்லை நிலப் பெண் இடையர் குலத் தலைவிக்குக் கைத்தொழிலால் செய்த பொருட்களைக் கொடுத்துள்ளதைக் குறிப்பிடுகின்றது. பொன், இரும்பு, செம்பு போன்ற பொருட்களை நிலத்திலிருந்து தோண்டி எடுத்துள்ளனர். ஏரி, குளம், கிணறு முதலானவற்றைத் தோண்டும்போது இவை கிடைத்துள்ளன. அவற்றைக் கொண்டு பொருட்கள் செய்யத் தொடங்கினர். மருத நிலத்தில் உள்ளவரககள் செல்வச் செழிப்பான

வாழ்வை வாழத்தொடங்கியுள்ளனர். பெரும்பாலான உயர் விலை மதிப்புள்ள அணிகலன்களை அணிந்தவர்கள் இந்நில மக்களே. போருக்கான தொடக்கம் ஏற்பட்ட நிலையில் படைக்கருவிகள் செய்யும் பணி தொடங்கிற்று. வேளாண்மை செய்வதற்குரிய கருவிகளையும் அவர்களே உருவாக்கியுள்ளனர். ஏனெனில் களைப்பறிக்க, உழவுக்கென கலப்பை, அரிவாள் போன்றவற்றை உருவாக்கிப் பயன்படுத்தியுள்ளனர். மேற்கண்டவற்றின் அடிப்படையில் நோக்கும்பொழுது, இங்கு தான் தச்சுத் தொழிலும் கொல்லுத் தொழிலும் தோன்றின என்பது உறுதிப்படுகிறது. இக்கருத்தினை பின்வரும் பாடலடிகளும் மெய்பிக்கின்றன.

“குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
அரிகால் போழ்ந்த தெரி பகட்டு உழவர்” (அக.41:1,5-6)

“நெல் அரி தொழுவர் கூர் வாள் உற்றென
பல் இதழ் தயங்கிய கூம்பா நெய்தல்” (நற்.195:6-7)

“செந்நெல் அரிநர் கூர் வாட் புண்ணுறக்
காணார் முதலொடு போந்தென பூவே” (நற்.275:1-2)

முதலான பாடலடிகள் சான்று பகர்கின்றன. ஓரிடத்தில் நிலையாகத் தங்கி சிறப்பான உணவு வகைகளை உண்டவராகவும், வழங்கியவராகவும் மருத நில மக்கள் வாழ்ந்துள்ளனர். சமையல் செய்து வாழும் வாழ்க்கையையும் இவர்களே முதன்முதலில் மேற்கொண்டுள்ளனர். இந்நில மக்களிடமே குறையாத நெல் முதலிய செல்வ வளங்கள் நிறைந்திருந்தன. தோல் தொழில் செய்யும் முறை குறிஞ்சி, முல்லை நிலங்களிலே தோன்றின. ஏனெனில் அவர்களது தொழில் வேட்டையாடுதல் ஆகும். இறைச்சியைத் தனியே பிரித்து எடுத்துவிட்டு தோலை இசைக்கருவிகள் இன்னப் பிறப் பொருட்கள் செய்வதற்கும் பயன்படுத்தியுள்ளனர். கால்நடைகளை மேய்ப்பவர்கள் தங்கள் கால்களிலே தோலினால் ஆன செருப்பையே அணிந்திருந்துள்ளனர். இதற்கு,

“தொடுதோல்மரீஇய வடுஆழ் நோன்அடி” (பெரு..169)
“தொடுதோல் அடியர்” (மது.636)

என்ற அடிகள் சான்றாக அமைகின்றன. முரசு, பறை முதலான இசைக்கருவிகளைக் காளைகளது தோலினால் தான் செய்துள்ளனர். இதனை,

“அண்ணல் நல் ஏறு இரண்டு உடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண் பிணி முரசம்” (புற.288:1-4)

"ஓடா நல்ஏற்று உரிவை தைஇய
ஆடுகொள் முரசம் இழுமென முழங்க" (அக.334:1-2)

"சிறுதோட் கோத்த செவ் அரிப்பறை" (நற்.58:2)

என்ற சங்க இலக்கிய பாக்கள் விளக்கி நிற்கின்றன. மேலும், மான்தோலையும் இதற்குப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

"புள்ளி இரலைத் தோல் ஊன் உதிர்த்துத்
தீது களைந்து எஞ்சிய திகழ் விடு பாண்டிற்
பருதி போகிய புடை கிளை கட்டி
எ∴குடை இரும்பின் உள் அமைத்து வல்லோன்
சூடுநிலை உற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பு ஆடு மரபின் பருந்து ஊறு அளப்ப" (பதி.74: 10-15)

என்னும் பதிற்றுப்பத்தின் பாடல்அடிகள் எடுத்துரைக்கின்றன. இத்தொழில் வேட்டை நிலப்பகுதியாகிய மலைகளிலும் காடுகளிலும் பெரும்பாலும் தோன்றியிருக்க வேண்டும் எனலாம்.

கரும்புச்சாறு எடுக்கும் தொழில் மருத நிலத்தில் சிறப்பாக நடைபெற்றுள்ளது. இதனை,

"……………. அறைநர்
கரும்பில் கொண்ட தேனும்" (புற.42:14-15)

என்ற புறநானூற்றுப் பாடல்அடிகளால் அறியலாம்.யானைப்பாகன், தேர், வண்டி ஓட்டுவோன் எல்லாம் வளமாக மருத நிலத்தாருக்குரியவர்களே ஆவர். இத்தொழில் செய்வோர் குறித்து,

"முள்ளிட்டு ஊர்மதி வலவ – நின்:
புள் இயல் கலி மாப்பூண்ட தேரே" (ஐங்.481:3-4)
"தெரி இழை அரிவைக்குப் பெரு விருந்து ஆக
வல் விரைந்து கடவுமதி பாக" (ஐங்.482:1-2)
"கால் பார் கோத்து ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு கைப்போன் மாணின்
ஊறு இன்றாகி ஆறு இனிது படுமே" (புற.185:1-3)

முதலான பாடல்கள் எடுத்துரைக்கின்றன. இப்பாடல் நேர்த்தியுடன் வண்டியைச் செலுத்துவோன் பற்றி குறிப்பிட்டுள்ளது. வினை முடித்து மீளும் தலைவன், தலைவியை விரைந்து சென்று காண வேண்டும் என்பதைத் தேர்ப்பாகனுக்கு உணர்த்தி, தேரை விரைந்து செலுத்துமாறு தலைவன் கூறியிருப்பதை உய்துணரமுடிகிறது. வயலில் நீர் இறைத்து ஊற்றி காவல் பணி புரிந்தோர் பற்றிய குறிப்புகளை மருத நிலப் பாடல்கள் வழி அறியமுடிகின்றது. மருத நிலத்தில் வளமான மனைகள் இருந்துள்ளன. மனை, மாளிகைகளைக் காவல் செய்வதற்குக் காவல் தொழில் செய்வோர் இருந்துள்ளனர்.

“நல்மனை நெடுநகர்க் காவலர்” (அக.22:16)

“எந்தை ஓம்பும் கடியுடை வியல் நகர்த்
துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி
இரவின் வரூஉம் அதனினும் கொடிதே” (நற்.98:8-10)

போன்ற பாடல்கள் மருத நிலத்தில் மனை என்ற சொல் இடம்பெற்றதைச் சுட்டி நிற்கின்றன. பின்பு நெய்தல் நிலப் பட்டின மக்களுக்கும் இத்தொழில் செய்வோர் பணிபுரிந்திருப்பர்.

கட்டு, குறிஞ்சி நிலத்தில் தோன்றிய தொழிலாக இருக்க வேண்டும்.இதனை,

“……… அவர்
நல்நெடுங்குன்றம் பாடிய பாட்டே” (குறி.23:1-5)
“வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்” (குறு.298:6)

எனும் அடிகள் சுட்டிகின்றன. குன்றுமலை குறிஞ்சி நிலத்திற்குரியவை. குன்றத்தைப் பாடுவதாகக் குறிப்பிடுவது இதனை உறுதிப்படுத்தும்.

நாழிகைக் கணக்கர், கணியர் போன்றோர் மன்னர்களுக்கும் செல்வர்களுக்கும் (மது:477-481) நேரத்தைக் கணக்கிட்டுக் கூறியமையால் மருதம் மற்றும் நெய்தல் திணைகளில் தோன்றியிருக்க வேண்டும். மருத்துவர் (அறவோன்) என்னும் தொழில் பிரிவினர் குறிஞ்சி நிலத்திலே தோன்றியிருப்பர். ஏனெனில் மரம், இலைகளிலிருந்து மருந்து எடுத்துப் பயன்படுத்தும் இயல்பு இயல்பாகவே அவர்களிடம் உண்டு. அவர்கள் தங்களது உடலில் ஏற்பட்ட காயங்களுக்கு, நோய்களுக்கு இயற்கை முறையிலான மருந்தைப் பயன்படுத்துவது உண்டு. அதுவும் மரத்திலிருந்து மருந்து எடுத்துப் பயன்படுத்திய இயல்பினை நற்றிணை மற்றும் புறநானூறு பாடல்கள் சான்று பகர்கின்றன. இதனை,

“மருந்து கொள் மரத்தின் வாள் வடு மயங்கி
வடு இன்று வடிந்த யாக்கையன்” (புற.180:5-6)
“மரம் சா மருந்தும் கொள்ளார் மாந்தர்” (நற்.226:1)

பாடலடிகளால் அறியமுடிகின்றது.

### 4.2.2 வணிகக் கலைக்குடிகள்

சுங்கம் கொள்பவர் பற்றிய குறிப்புகளும் ‘வணிகம்’ பற்றிய குறிப்புகளும் நெய்தல் திணைப் பாடல்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. நெய்தல் திணையில் வணிகம், வணிகர் என்ற சொல்லாட்சிகள் நெய்தல் திணைப் பாடல்களிலேயே மிகுதியாகக் காணப்படுகின்றன. கடல் வழியாகப்

பொருட்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்து அயல் நாடுகளுடன் தொடர்புகளை ஏற்படுத்தினர். எல்லாவிதமான வணிகத் தொழில்களும் நெய்தல் நிலத்தில் தொடங்கிப் பரவியிருக்க வேண்டும். இதற்குச் சான்று உமணர்கள், மிளகு வணிகர். கடல் வழியாக வணிகம் செய்வதற்கு இந்நிலத்தில் பொருட்களைக் குவித்து வைக்கப்பட்டுள்ளமையை,

"தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரை சேரும்
ஏமுறு நாவாய் வரவு எதிர்கொள்வார்" (பரி.10:38-39)

"பெருங்கடல் நீந்திய மரம் வலியுறுக்கும்
பண்ணிய விலைஞர்" (பதி.76:4-5)

எனும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

கலை தொடர்பான தொழில் செய்த பாணன் விறலி, பொருநர், கூத்தர் போன்றோர் நாடோடி வாழ்க்கையை வாழ்ந்தவர்கள் எனினும் பாணர், கூத்தர், மருத நிலத்ததை ஒட்டிய நெய்தல் நிலப் பகுதிகளில் வாழ்ந்துள்ளமைக்குச் சான்று கிடைக்கப்பெறுகின்றன. இதனை,

"வையைத் துறை துறை தோறும்
பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி
அழுந்துபட்டிருந்த பெரும்பாண் இருக்கையும்" (மது.340-343)

"……………..சிறுசில்
மீன் சீவும் பாண் சேரி" (புற.348:3-4)

"………….ஒருசார்
பாடுவார் பாக்கம் கொண்டென" (பரி.7:30-31)

"நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்
தான்புனல் அடைகரைப் படுத்த வரால்" (அக.216.,1,2)

மேற்சுட்டிய மதுரைக்காஞ்சி, புறநானூறு பரிபாடல், மற்றும் அகநானூறு முதலிய சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. பாணர்கள் மருத, நெய்தல் பகுதிகளில் மீன் பிடிக்கும் தொழில் செய்துள்ளமையும் மற்றொரு சான்றாகும்.

சங்ககாலத்தில் சலவைத் தொழில் செய்தவர் நாள்தோறும் இரவு, பகல் பாராது உழைத்துள்ளனர். விழாக்காலங்களில் கூட ஓய்வில்லாது, விழாவில் பங்கெடுக்க முடியாத சூழலில் வாழ்ந்துள்ளனர். இதற்கு,

"ஆடியல் விழவின் அழுங்கல் மூதூர்
உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு" (நற்.90:1-4)

எனும் பாடல் அடிகள் சான்றாகின்றன.

மரங்களை வெட்டி அறுத்து வண்டி, தேர் இன்னும் பிற பொருட்களைச் செய்பவனாகிய தச்சன் ஒரு நாளில் எட்டுத் தேர்களைச் செய்யும் அளவிற்குத் திறமை வாய்ந்தவர்களாக இருந்துள்ளான். இதனை,

"..................வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோனே" (புற.87:2-4)

எனும் அடிகள் உறுதிபடுத்துகின்றன. எனினும் மன்னனுடைய தேர் பல நாட்கள் செலவழித்துச் செய்யப்பட்டள்ளது. இதனை,

"................நின் செய்வினை நெடுந்தேர்" (நற்.221:7)

எனும்அடி சுட்டிகிறது.

கொல்லன் பற்றிய பதிவிலும் 'வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே' எனும் அடியில் அரசனுக்கு வேல் வடித்துத்தருவது கொல்லனுக்குக் கடமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இறப்புச்சடங்குச்செய்தல், மன்னனைத் துயிலெழுப்புதல், மன்னனைப் பாதுகாத்தல். தேர் ஓட்டுதல், தூது செல்லுதல் என அனைத்துப் பணிகளும் மன்னர்களது ஆதிக்கத்திற்குள் நடைப்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. மருதம், நெய்தல் நிலத்தில் வாழ்ந்த செல்வந்தர்களுக்கும் தலைவர்களுக்கும் ஏவல்பணி செய்வோர், காவல் பணி செய்வோர் முதலிய பணியாளர்கள் உதவி புரிந்துள்ளனர். இதனை,

".............துவர் புகை, சாந்தம்
எறிவன எக்குவ ஈரணிக்கு ஏற்ற
நறவு அணி பூந்துகில் நன் பல ஏந்தி
பிற தொழின .......ம் பின் தொடர" (பரி.22:17-20)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் வேறு இடத்திலிருந்து பிழைப்புக்காகவும் மற்ற திணையிலிருந்து கைப்பற்றப்பட்டு வந்தவர்களாகவும் காணப்படுகின்றனர். ஒவ்வொரு திணையிலும் வாழ்ந்த மக்கள் தங்களுக்குத் தேவையான அடிப்படைத் தேவைகளைத் தாமே உருவாக்கிக் கொண்டு வாழத் தலைப்பட்ட மக்கள் பின்னாளில் அத்தொழிலைச் செய்பவர்களாகவே மாற்றம் பெற்றிருக்க வேண்டும். ஏனெனில் தொழிற்குழுக்கள் அனைத்துமே தலைமைப் பண்பு வகுத்தவர்களுக்குக் கீழ் தொழிற்புரியும் நிலையில் குறிப்பிடப் பெற்றிருப்பதும் இதற்குச் சான்றாகும். "ஐந்து நில மக்களும் தங்களுக்குரிய வீடுகளை அமைக்கும் தொழிலையும் செய்து வந்தார்கள். மண்சுவர் எழுப்புதல், வைக்கோல் முதலியவற்றைக் கொண்டு கூரையமைத்தல், மன்னைக் கொண்டு செங்கல் செய்து உலர்த்துதல்,

உலர்ந்தவற்றைச் சூளையிலிட்டுச் சுடுதல், முதலிய தொழில்களையும் அறிந்திருந்தார்கள். ஒவ்வொரு நிலத்திலும் பறை, துடி, முழவு, பம்பை முதலிய கருவிகளைச் செய்யும் தொழிலும் நடைபெற்றது. சுருங்கக் கூறின் ஒவ்வொரு நிலத்திலும் அவ்வந்நில மக்களுடைய சூழ்நிலைக்கு ஏற்பத் தொழில்கள் அமைந்திருந்தன எனலாம். இத்தொழில்களில் ஆடவரும் பெண்டிரும் தத்தமக்குரிய பகுதியைச் செய்தனர் என்று கூறுதல் பொருத்தமாகும்”[10] எனும் மா.இராமாணிக்கனார் கூற்றும் இதனை உறுதிப்படுத்தும்.

### 4.3 வர்க்கப்பிரிவுகள்

சங்கச்சமூகத்தில் ஐந்திணை மக்கள் மட்டுமே வாழ்ந்துவந்த போதிலும் வர்க்கப்பிரிவுகள் காணப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

#### 4.3.1 அந்தணர்

சங்க காலத்தில் அந்தணர்கள் அந்தணர், பார்ப்பார், நான்மறை முனிவர், பெரியோர், இருப்பிறப்பாளர் எனும் சொற்களால் குறிப்பிடப்படுகின்றனர்.

“அந்தணன் என்பதற்குப்பிராமணன் அழகிய மனபக்குவம் உடையவன்”[11] என லிப்கோ தமிழ் ஆங்கில் பேரகராதி கூறுகிறது. அந்தணர் என்ற சொல்லிற்கு அந்தத்தை (வேதாந்தை) அணவுவார் என்கிறார் நச்சினார்க்கினியர்.

“தவ வாழ்க்கையை வழியாகக் கொண்டிருந்த ஆசிவகத் துறவிகளைக் குறிக்க வழங்கி வந்த சொல் அந்தணர்”[12]எனக் குணா குறிப்பிடுகிறார்.

“அந்தணர், பார்ப்பார் என்னும் இரு பெயர்களும் தமிழ்ப் பெயர்களாகும். அந்தணர் என்னும் தமிழ்ச்சொல் பிராமணர் என்னும் வடசொல்லின் மொழிப்பெயர்ப்பெனக் கொள்ளப்பட்டது”[13]என்கிறார் புலவர் குழந்தை.

“அந்தணர் என்ற சொல் பிற்காலத்தினரால் உரையாசிரியர்களுக்கு முன்பே பார்ப்பனர் என மாற்றப்பட்டிருத்தல் வேண்டும்”[14] என்கிறார் சாமி.சிதம்பரனார்.

“பார்ப்பனன், பார்ப்பான்- என்பதற்கு அந்தணன், பிராமணன்”[15] எனச் சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம் விளக்கம் தருகின்றது.

மேற்கூறியவற்றை நோக்க அந்தணன் என்பதற்குப் பார்ப்பான் என்ற பெயரும் வழங்கி வந்திருப்பதை அறிய முடிகின்றது. இவர்கள் வேதம் ஓதுபவராக உயிர்களிடத்து அன்புள்ளம் கொண்டவராகத் தவவாழ்க்கையில் ஈடுபட்டவராக இருந்துள்ளதை அறியமுடிகின்றது.

### 4.3.2 அந்தணர் இருப்பிடம்

அந்தணர்கள் கோழி, நாய் நெருங்காத இடத்தில் இருப்பிடம் அமைத்து வாழ்ந்துள்ளனர். சிறிய கால்களைக்கொண்ட பந்தர் அமைத்து, தரையினைச் சாணத்தால் மெழுகித், தங்களது இல்லத்தை வடிவமைத்துள்ளனா். அவர்கள் வாழ்ந்த இல்லங்கள் மலையைக் குடைந்து அமைக்கப்பட்டதைப் போன்று பெரிதாக இருநதமையை,

“செழுங்கன்று யாத்த சிறுதாட் பந்தர்
பைஞ்சேறு மெழுகிய படிவ நல்நகர்
மனைஉறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளிப் பயிற்றும்
மறைகாப்பாளர் உறைப்பதி” (பெரு.297:301)

“பெரியோர் மேஎய் இனிதின் உறையும்
குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்” (மது.473-474)

ஆகிய வரிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், “அந்தணர்கள் கோழியும் நாயும் நெருங்காத இடத்தில் வாழ்ந்தனர். அவர்களின் வீடுகள் பெரிய அளவினவாகும். எனவே ‘நன்னகர்’ என்று குறித்தாா். வீட்டில் பசிய சாணமிட்டு மெழுகினர். புனிதமான அவ்வீட்டின் முன்னர் செழுங்கன்று கட்டப்பட்ட பந்தல் இருந்தது”[16] என்றும் ‘‘மதுரையிலிருந்து அந்தணர் பள்ளி குன்றினை இடையே குடைந்து அமைத்தாற் போல அளவு பெரிதாக இருந்தது”[17] என்ற அ.தட்சிணாமூர்த்தியின் கூற்று நோக்கத்தக்கது. இதேகருத்தை“மருதநிலப் பகுதியிலே தான் மறையவர் வாழ்ந்து வந்தனர். வீட்டின் முன் புறம் பந்தல் அமைந்திருந்தது. அதன் சிறிய கால்களுள் ஒன்றில் பசுக்கன்று கட்டப்பட்டிருந்தது. அவ்வீட்டைக் கோழியும் நாயும் நெருங்கவில்லை. வீட்டில் கிளி வளர்க்கப்பட்டது. அதற்கு வேத ஓசை கற்பிக்கப்பட்டது”[18] என இராசமாணிக்கனார் குறிப்பிட்டிருப்பதும் இணைத்து நோக்கத்தக்கது. மேற்கூறியவற்றை நோக்க அந்தணர்கள் பெரிய இல்லங்களில் வாழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது.

### 4.3.3 அந்தணர் உணவு

அந்தணர்கள் பறவைப்பெயர் கொண்ட நெற்சோறு, வெண்ணெயில் வெந்த மிளகுப்பொடி, கறிவேப்பிலைக் கலந்த மாதுளங்காய் பொறியல், மா ஊறுகாய் இவற்றை உணவாக உட்கொண்டுள்ளனர். இதனை,

"…………பறவைப் பெயர்ப்படு வத்தம்
சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து
உருப்புற பசுங்காய்ப் போழொடு கறிகலந்து
கஞ்சக நறுமுறி அளைஇ பைந்துணர்
நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த
தகைமாண் காடியின்" (பெரு.305-310)

எனும் வரிகளில் குறிப்பிடுகின்றன. மேலும், "'பறவைப் பெயர்ப்படுவத்தம்' என்றது. கருடன் சம்பா என்னும் பெயருடைய நெல்லைக் குறிக்கும் என்பர். நச்சினார்க்கினியர், 'பறவைப் பெயர்ப்படு வத்தம்' என்றது. இராசான்னம் என்னும் பெயர் பெறுகின்ற நெல்லென்றவாறு ஆகுதி பண்ணுதற்கு இந்த நெல்லுச் சோறே சிறந்ததென்று இதனைக் கூறினார். இனி மின்மினி நெல்லென்பாருமுளர். இப்பெயர் வழக்கின்மையும் ஆகுதிக்குச் சிறவாமையும் உணர்க என்று கூறுவர்"[19] எனும் நெல்லின் பெயர் குறித்த கருத்தாக்கங்களை இரா.மோகன் தமது உரையில் குறிப்பிட்டுள்ளமை கவனிக்கத்தக்கது. அது மட்டுமல்லாது, "பாற்சோறு, பருப்புச்சாறு ஆகுதி பண்ணுதற்கு ஏற்ற இராசான்னம் என்னும் நெல்லின் சோறு, மிளகின் பொடியுடன் கலக்கப்பட்டுக் கறிவேப்பலை இடப்பட்டுப் பசு நெய்யிற் கிடந்து வெந்த கொம்மட்டி மாதுளங்காய் மாவடு ஊறுகாய் என்பவற்றைத் தொண்டைநாட்டு மறையவர் உண்டனர்"[20] என்பார் இராசமாணிக்கனார். இதே கருத்தமைவை, "மறைகாப்பாளர்கள் இராசா அன்னம் என்னும் உயர்வகை நெல்லரிசியை உணவாகக் கொள்வர். சேதாவின் நறுமோர் அவர்க்கு மிக விருப்பமானதாகும். மாதுளங்காயோடு மிளகினைச் சேர்த்து வெண்ணெயில் பொரித்துண்பர். மேலும், மாங்காய் வடு ஊறுகாயும் உண்பர்"[21] என அ.தட்சிணாமூர்த்தியும் குறிப்பிட்டுள்ளார். மேற்கூறியவற்றை நோக்க அந்தணர்கள் பெரிய இல்லங்களில் வசித்ததோடு, உயர்ந்த வகை நெற்சோறு போன்ற உணவு வகைகளையும் உண்டு வாழ்ந்திருப்பதை அறியமுடிகின்றது.

### 4.3.4 அந்தணர் தொழில்

சங்கப்பாக்கள் அந்தணர்களின் தோற்றம்,தொழில், இயல்பு ஆகியவற்றை விரிவாகப் பதிவு செய்துள்ளன.

“கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப” (முல்.37-38)

“எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடை நீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிபடச் சுவல் அசைஇ வேறு ஓரா நெஞ்சத்துக்
குறிப்பு ஏவல் செயல் மாலைக் கொளைநடை அந்தணீர்” (கலி.9:1-4)

“முக்கோல் கொள் அந்தணர் முதுமொழி நினைவார்” (கலி.126:4)
“பார்ப்பனக் குறுமகப் போலத்தாமும்
குடுமித் தலைய” (ஐங்.202:2-3)

ஆகிய பாடல்வரிகள் கையில் முக்கோல், கமண்டலம், குடுமி எனும் தோற்றமுடன் இருப்பதைக் குறிப்பிடுகின்றன. அந்தணர்கள் வேதம் ஓதுதல்,வேள்வி செய்தல் போன்ற பணிகள்செய்துள்ளமையை,

“போது பிணி விட்ட கமழ் நறும் பொய்கைத்
தாது உண் தும்பி போது முரன்றாங்கு
ஓதல் அந்தணர் வேதம் பாட” (மது.654-656)

“பார்ப்பார் ஓதுக” (ஐங்.4:2)

“அறம்புரி அருமறை நவின்ற நாவின்
திறம் புரி கொள்கை அந்தணிர்” (ஐங்.387:1-2)

“ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான்” (கலி.69:5)

ஆகிய பாடல் அடிகள் உறுதிபடுத்துகின்றன. அந்தணர்கள் வேதம் ஓதுதல், வேள்வி செய்தலை மேற்கொண்டுள்ளனர். இதனை.

“அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கின்” (புற.2:22-23)

“கேள்வி அந்தணர் கடவும்
வேள்வி ஆவயின்” (கலி.36:25-26)

“கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு” (புற.361:4)

“அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த
தீயொடு” (புற.397:20-21)

எனும் அடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. மேற்கூறியவற்றை நோக்க அந்தணர்கள் வேதம் ஓதுதல்,வேள்வி செய்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளமை தெளிவு. மேலும், தூது செல்லும் பணியையும் செய்துள்ளனர். இதனை,

“……….பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்கு
சொல்லிய சொல்லே சிலவே” (புற.305:2-4)

எனும் அடிகள் மெய்பிக்கின்றன. இப்பாடல் அந்தணன் ஒருவன், இரவுப் பொழுதில் வந்து வாயிற்காவலனிடம் சொல்லாது, அரண்மனைக்குள் புகுந்து அரசனிடம் சில சொற்களை உரைத்துச் சென்றுள்ளமையைக் குறிப்பிடுகின்றது. அகநானூற்றுப் பாடல், ஓலை எடுத்துக்கொண்டு பார்ப்பான் தூது சென்றமையை,

“தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலைப்” (அக.337:7)

எனக் குறிப்பிடுகிறது. இவற்றை நோக்க, வாயில் காவலனிடம் கூறாமல் அரண்மனைக்குள் செல்லும் அளவிற்கு அந்தணர்களுக்குச் சங்ககாலத்தில் மதிப்பு வழங்கப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது. அந்தணர்களுக்கு வேதம் கற்பிப்பதே தொழிலாக இருந்த நிலையில் சிலர் வேத வேள்விகள் செய்யாது சங்கு அறுத்து வளையல் செய்துள்ளனர். இவர்களை‘வேளாப் பார்ப்பார்’ எனப் பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனை,

“வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளை” (அக.24:1-2)

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றன. “என்றும் போல் அன்றும் தமது புரோகித குல ஆசாரத்தைக் கடைபிடிக்காத பிராமணர்கள் இருந்தனர். வேத வேள்விகளை இயற்றாமையால் ‘வேளாப்பார்ப்பார்’ எனப்பட்டனர்”[23] என்கிறார் ந.சுப்ரமண்யன். “சங்குகளை அறுத்து வளையல்கள் செய்யும் தொழிலில் பார்ப்பனரில் ஒரு பிரிவினர் ஈடுபட்டிருந்தனர்”[24] என்பதை அ.பாண்டுரங்கனும் குறிப்பிடுகின்றார். மேலும்,“சில பிராமணர்கள் சங்கறுத்தல் போன்ற தொழில்களைச் செய்தனர். எனினும் பெரும்பான்மையோர் வேதம் ஓதுதல் போன்ற கடமைகளைச் செய்தோரேயாவர்”[25] என்கிறார் அ.தட்சிணாமூர்த்தி. இவர்களின் கூற்றுப்படி வேத வேள்விகள் செய்யாது தூதுசெல்லுதல், சங்கு அறுத்து வளையல்செய்தல் போன்ற தொழில்களைச் செய்தவர்கள் அத்தொழில்களில் விருப்பமில்லாது தனித்த பிரிவினராகச் செயல்பட்டவர்கள் எனலாம். இதன் வழி சங்ககாலத்தில் உயர்வாகப் பேசப்பட்ட அந்தணருக்குள்ளும் தொழிலடிப்படையிலான சிலப் பிரிவுகள் இருந்திருக்கின்றன என்பதைக் காட்டுகின்றது.

### 4.3.5 அரசர்

சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டியரது வாழ்க்கைமுறை பெரிதும் பேசப்படுகின்றது. மூவேந்தர்களும் குறுநில மன்னர்களும் தமிழ்நாட்டின் பகுதிகளை ஆண்டு வந்துள்ளனர். “பல்வேறு நிலப்பகுதியை

ஆண்டவர்களைப் பண்டைத்தமிழ் மக்கள் அரசன், இறைவன், கொற்றன், கோ, கோன், மன்னன், வேந்தன் எனப் பல்வேறு சொற்களால் குறித்துள்ளனர். இச்சொற்கள் ஆள்வோரைக் குறிக்கும் சொற்களாக இருப்பினும் அவை வெவ்வேறு அடிப்படைகளில் தோன்றி வழக்குப் பெற்றதாகத் தெரிகின்றன”[25] என்கிறார் அ.பாண்டுரங்கன். மன்னர்கள் செழிப்பான முறையில் அரண்மனைகள் அமைத்து வாழ்ந்துள்ளனர். அரண்மனைகள் அமைப்பதற்கு முன்பு ‘திருமுளைச் சார்த்து’ என்னும் சடங்கு செய்யப்பட்டுப் பின்பு அரண்மனையின் ஒவ்வொரு பகுதியையும் அமைத்துள்ளனர். வடக்கிலும் தெற்கிலும் இரு கோல்கள் நட்டு, ஞாயிற்றின் கதிர் பட்டு உண்டாகும் நிழல், ஒரு பக்கத்தைச் சாராமல், நேர் ஒழுங்காக வீழும் காலம் குறித்து, அந்நாளில் அரசனுடைய அரண்மனை அமைப்பதற்குச் சடங்கு செய்யப்பட்டுருக்கிறது. இதனை,

“.......போதே மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இரு கோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏர்பு
ஒருதிறம் சாரா அரைநாள் அமையத்து
நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து” (நெடு.72-78)

எனும் வரிகளின் மூலம் அறியலாம். மேலும், அரண்மனையில் உள்ள அந்தப்புரப்பகுதிகள் மலைகளைக் போன்று உயர்ந்த தோற்றத்தைக் கொண்டுள்ளன. மலைகளைச் சார்ந்து வானவில் கிடப்பது போலப் பலநிறக் கொடிகள் தொங்கி அசைந்துள்ளன. வெள்ளியைப் போன்ற சாந்தினால் பல இடங்கள் பூசப்பட்டிருந்தன. அவை நீல மணியைக் காண்பது போன்ற வலிமை வாய்ந்த தூண்களுடையன. செம்பினால் உருவாக்கப்பட்டது போன்ற நீண்ட சுவர்களும் அவற்றில் பல நிறப் பூக்களோடு கூடிய வல்லிக்கொடி, சுற்றிலும் ஓவியமாகத் தீட்டப்பட்டு ஒவ்வொரு பகுதிகளும் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளன. இதனை,

“வரை கண்டன்ன தோன்றல வரைசேர்பு
வில் கிடந்தன்ன கொடிய பல்வயின்
வெள்ளி அன்ன விளங்கும் சுதை உரீஇ
மணி கண்டன்ன மாத்திரள் திண்காழ்
செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்
உருவப் பல்பூ ஒருகொடி வளைஇ
கருவொடு பெயரிய காண்புஇன் நல்இல்” (நெடு.108-114)

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. நாடாளும் மன்னர்கள் உயர்வான கட்டடங்களை அழகுற வடிவமைத்து வசித்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

### 4.3.6 அரசர்களின் உணவு

சங்ககாலத்தில் மன்னா் மற்றும் குறுநிலமன்னா்களது உணவுமுறை அவா்கள் ஆட்சிசெய்த பகுதிகளுக்கேற்ப வேறுபட்டிருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. சோழநாட்டு மன்னனான கரிகாலனது அரண்மனையில் செம்மறியாட்டின் இறைச்சி, பிற வகைஇறைச்சி, பல்வேறு திண்பண்டங்கள், முல்லை மொட்டு போன்ற அரிசிச்சோறு, பொறிக்கப்பட்ட கறிவகைகள் என பல உணவுவகைகள் சமைக்கப்பட்டுள்ளன, இதனை,

"காழின் சுட்ட கேழ்ஊன் கொழுங்குறை
……………………………………..
……………….. முகிழ்த்தகை
முரவை போகிய முரியா அரிசி
விரல் என நிமிர்ந்த நிரல்அமை புழுக்கல்" (பொரு.105,112-114)

எனும் வரிகளால் அறியலாம். நல்லியக்கோடன் அரண்மனையில் பாம்பின் நஞ்சு மயக்கம் தருவது போன்ற கள், பல்வேறு சுவையுடைய அடிசில் ஆகியவற்றைப் பொன்னாலான உண்கலன்களில் உண்டுள்ளனர். இதனை,

"பாம்பு வெகுண்டன்ன தேறல் நல்கி
…………
பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்
விளங்கு பொற் கலத்தில்" (சிறு.237, 241, 244)

எனும் வரிகள் உணா்த்துகின்றன. இளந்திரையன் அரண்மனையில் பல இறைச்சித் தசைகள் செந்நெல்சோறு. பிற உணவு வகைகள் தயாரித்து வழங்கப்பட்டிருக்கின்றன. இதனை,

"வல்லோன் அட்ட பல் ஊன் கொழுங்குறை
அரிசெத்து உணங்கிய பெருஞ்செந்நெல்லின்
தெரிகொள் அரிசித் திரள் நெடும் புழுக்கல்
அருங்கடித் தீம்சுவை அதொடு" (பெரு.472-475)

எனும் வரிகள் உறுதிப்படுத்துகின்றன. நன்னன் அரண்மனையில் பெண்நாய் கடித்துக் கொணர்ந்த தசைகளும் வெண்ணெல் அரிசிச்சோறும் உண்டுள்ளனா். இதனை,

"முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு
நெடு வெண்ணெல்லின் அரிசி முட்டாது" (மலை.564-565)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. சோழன் கிள்ளி வளவனது இடத்தில், வெண்ணெல் அரிசிச் சோறு, புளிக்குழம்பு, சுறாமீன் இறைச்சி, வள்ளைக்கீரை, பாகற்காய், முழுத்த சோறு எனப் பலவகை உணவுகள் சமைக்கப்பட்டுள்ளதை,

"அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்
……………………………………..
ஓங்கு சினை மாவின் தீம்கனி நறும்புள
மோட்டு இரு வராஅல் கோட்டுமீன் கொழுங்குறை
செறுவின் வள்ளை சிறுகொடிப்பாகல்
பாதிரி ஊழ்முகை அவிழ்விடுத்து அன்ன
மெய்களைந்து இனனொடு விரைஇ
மூழ்ப்பப் பெய்த முழு அவிழ்ப் புழுக்கல்" (புற.399:1,4-9)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. மேற்கூறியவற்றை நோக்க, மன்னர்கள் நிலப்பகுதிகளுக்கேற்ப பலவிதமான உணவுகளை உண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

### 4.3.7 வணிகர்

வணிகர் எனும் பிரிவினரும் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளனா். இவர்கள் நடுநிலையில் வணிகம் செய்து செல்வச் செழிப்புடன் வாழ்ந்துள்ளனர். இவர்கள் வாழ்ந்த இல்லங்களும் உயர்வான முறையில் அமைக்கப்பட்டிருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 4.3.8 வணிகர் இருப்பிடம்

வணிகர்கள் வீதியில் அமைந்திருந்த மாடங்களின் அருகருகே படிகளைக் கொண்டு ஏணிகள் சார்த்தப்பட்டு திண்ணைகளையுடைய வீடுகள் கட்டப்பட்டிருந்தன. மேலும், சிறிய பெரிய வாயிலுடன் மேகங்கள் தீண்டும் உயா்வான மாடங்களில் வணிகர்கள் வாழ்ந்துள்ளதை,

"குறுந்தொடை நெடும் படிக்கால்
கொடுந்திண்ணை பல் தகைப்பின்
புழை வாயில் போகு இடைகழி
மழை தோயும் உயர் மாடத்து" (பட்.142-145)

எனும் வரிகளால் அறியலாம். மேலும், மலையைக் காண்பது போன்ற உயர்வான இல்லங்களில் வணிகா்கள் வாழ்ந்துள்ளமையை,

"குறும்பல் குழுவின் குன்று கண்டன்ன
பருந்து இருந்து உகக்கும் பலமாண் நல்இல்" (மது:501-502)

எனும் வரிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதனை உறுதிப்படுத்துவதாக "காவிரிப்பூம்பட்டினத்துப் பெரிய மாளிகைகளில் மாடத்திற்குச் செல்லத்தக்க

அணுகின படிகளையுடைய நெடிய ஏணிகள் இருந்தன. பல கட்டுகள் இருந்தன. பெரிய வாயிலும் சிறிய வாயிலும் இருந்தன. பெரிய இடைகழிகள் இருந்தன. இவ்வமைப்பினையுடைய வளமனை 'மழை தோயும் உயர் மாடத்தை உடையது'"[26] எனும் இராசமாணிக்கனார் கருத்தும் அமைகின்றது. இவ்வாறு நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந்த வணிகர்கள் பெரிய மாட மாளிகைகளில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்துள்ளனர். மேலும்,அம்மகளிர் தென்றல் காற்று வீசக்கூடிய சாளரங்களைச் சார்ந்து நின்று கொண்டு வீதிகளில் நடைப்பெற்ற விழாவினைக் கண்டுள்ளனர். இவர்கள் சிவந்த கால்கள், செறிந்த தொடைகள், பசுமை வாய்ந்த அணிகலன்கள் மற்றும் பெரிய அல்குல், தூசு என்னும் மெல்லிய ஆடை, பவளம் போன்ற நிறம், மான் போன்ற பார்வை கிளி மொழி போன்ற மழலை மொழிகள், மயில் போன்ற மென்மை தன்மை இவற்றை உடையவர்கள் என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். (பட்.146-151) இங்குக் குறிப்பிடப்பெற்றுள்ள வணிக மகளிரின் தோற்றமும் இல்ல அமைப்பும் அவர்கள் சிறப்பானதொரு வாழ்வை வாழ்ந்துள்ளமைக்குச் சான்றாகின்றன.

### 4.3.9 வணிகர் தொழில்

வணிகர்கள் நீர் வழியாகவும் நிலம் வழியாகவும் சென்று வாணிகம் செய்துள்ளனர். அவ்வாறு வணிகம் செய்யும் போது அறநெறியில் நின்று பொருட்களை விலைக் கூறி விற்றுள்ளனர். கரிய மிளகுப் பொதிகள், மேரு மலையில் தோன்றிய மாணிக்க மணிகள், சம்பூநதம் என்னும் பொன், பொதியமலையில் தோன்றிய சந்தனம், அகில் கட்டைகள், பவளங்கள். கங்கையாற்றுப் பகுதியில் விளைந்த பொருட்கள்,ஈழநாட்டின் உணவுப் பொருட்கள், நுகர் பொருட்கள் சீனம் முதலிய பிற நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட கருப்பூரம், பன்னீர், குங்குமம் போன்ற பொருட்கள் பெரிய பல பொருட்களும் நீர் வழியாகவும் நிலத்தின் வழியாகவும் புகார் நகரத்தில் விற்பனை செய்யப்பட்டதை,

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவுயும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணக்கடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரப் பயனும்
ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்" (பட்.185-193)

எனும் வரிகளால் அறியமுடிகின்றது. மேலும், வணிகர்கள் பல் வேறுபட்ட பண்டங்களையும் பல உணவுகளையும் நிலத்திடத்தும் நீரிடத்தும் பிற இடத்தும் கிடைக்கும் பொருட்களையும் அழகிய மணிகள் முத்துக்கள், பொன் ஆகியவற்றைப் பெற்றுக் கொண்டு விற்பனை செய்துள்ளதை,

"பல்வேறு பண்டமோடு ஊண் மலிந்து கவினி
மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்
பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்" (மது.503-506)

எனும் மதுரைக்காஞ்சி வரிகள் குறிப்பிடுகின்றன. உண்ணுவதற்குரியப் பொருட்கள், பூசிக் கொள்வதற்குரிய பொருட்கள், அணிந்து கொள்வதற்குரிய பொருட்கள் உடுத்திக் கொள்வதற்குரிய உடைகள், நீராடுவதற்குரிய பொருட்கள், மணி, பொன் முதலான மலைபடு பொருட்கள் கடல்படு பொருட்கள் ஆன பண்டங்கள், பருத்தி, பட்டு ஆகியவற்றால் ஆன துணிகள் ஆகிய குற்றமற்றப் பயன்படு பொருட்கள் உள்நாட்டிலிருந்தும் பிற வெளிநாடுகளிலிருந்தும் கொண்டு வரப்பட்டு வணிகம் செய்துள்ளனர். இதனை,

"...உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை
மண்ணுவ மணி பொன் மலைய கடல
பண்ணியம் மாசு அறு பயம் தரு காருகப்
பண்ணிய வணிகர்" (பரி.திர.22-25)

எனும் அடிகளால் அறியலாம். பல்வேறு பண்டங்களை விற்பனை செய்வதற்காக வரும் மரக்கலத்தின் வருகையினை, விரும்பி எதிர்நோக்கிக் காத்திருந்து வரவேற்று மகிழ்வுடன் வாழ்ந்துள்ளமையை,

"தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரை சேரும்
ஏமுறு நாவாய் வரவு எதிர் கொள்வார்போல்
யாம் வேண்டும் வையைப் புனல் எதிர்கொள் கூடல்" (பரி.10:38-40)

எனும் பரிபாடல் அடிகளின் மூலமும் அறியமுடிகின்றது. வணிகர்கள் வணிகம் செய்யும் போது நடுநிலையில் பொருளை விற்றுள்ளதை, புறநானூறு மற்றும் பட்டினப்பாலை முதலிய நூல்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

''அறவிலை வணிகன்" (புற.139:2)
"நெடு நுகத்துப் பகல் போல
நடுவு நின்ற நல் நெஞ்சினோர்
வடு அஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடி
கொள்வதூஉம் மிகை கொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது"

"பல் பண்டம் பகர்ந்து வீசும்
தொல் கொண்டி துவன்று இருக்கை" (பட்.206-213)

எனும் சங்கப்பாக்களால் அறியமுடிகின்றது. இங்கு வணிகர்களிடம் நுகத்தடியின் நடுவில் தைக்கப்பட்டுள்ள பகலாணி போல நடுவுநிலை என்ற குணம் நிலைப்பெற்றுள்ளது. பொய் கூடாது தமது பொருளையும் பிறரது பொருளையும் வேறுபடுத்தி நோக்காது, ஒப்ப ஆராய்ந்து பார்ப்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், வணிகர்கள் தாம்கொடுக்கும் பொருட்களை மிகுதியாகக் கொடுக்காமலும் வாங்கும் பொருளை மிகுதியாகப் பெறாமலும் வணிகம்செய்துள்ளனர்.

### 4.3.10 வேளாளர்

'வேளாளர்' எனும் சொல் வெள்ளத்தை ஆள்பவன் என்னும் பொருளில் அழைக்கப்பட்டுள்ளது. "வேளாண்மையை மக்கள் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட பிறகு வேளாண்குடி அல்லது வேளாண்மாந்தர் என அழைக்கப்பட்டனர். வேளாண்தொழில் செய்த தனிமனிதன் விவசாய வேளாளன் என அழைக்கப்பட்டான். இறுதியில் வேளாண் தொழில் செய்வோர் வேளாளர் என அனைவரையும் குறிக்கும் பொதுச்சொல்லாக மாறியது. வேளாளரின் சிறந்த பண்பு விருந்தோம்பல் அதனாலேயே உழவன் வேளாளன் எனப்பெற்றான் உழவுத்தொழிலும் வேளாண்மை எனப்பெற்றது"[27] என்கிறார் தேவநேயப்பாவாணர்.

"வேளாளன் என்னும் சொல் வெள்ளத்தை ஆள்பவன் அதாவது உழுது பயிரிடுவோர் என்றும் சிவமூர்த்தியின் சடாவியில் எழுந்தருளியிருக்கும் கங்காதேவிக்கும் சிவானுகிரகத்தால் வேளாளர் பிறந்தனர்"[28] என்றும் அபிதான சிந்தாமணி கூறுகிறது. இவற்றின் அடிப்படையில் உழவுத் தொழிலான வேளாண்மை செய்பவரையே 'வேளாளர்' எனக் குறிப்பிட்டுள்மையை அறியமுடிகின்றது.

வேளாண்மைத் தொழில் செய்து வாழும் இவ்வேளாளரை உழுதுண்போர், உழுவித்துண்போர் என இரு பிரிவாகக் கூறுவர். இதனை, "வேளாளர்களில் உழுதுண்போர் என்ற பிரிவினர் சிறு நில விவசாயிகளாகத் திகழ்ந்தனர். உழுவித்துண்போர் கீழ் இருந்த வினைவலர்கள் எனப்பட்ட பணியாளர்கள் அதாவது உழுதுண்ட வேளாளர்கள் கீழ் மக்களாகக்

கருதப்பட்டுள்ளனர்”[29] என்ற பெ.மாதையன் கருத்தும் இருவகையான வேளாளர்கள் இருந்துள்ளமைக்குச் சான்றாகும்.

“இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் நிலமற்ற உழவர்கள் இருந்தனர். நிலமற்ற வகுப்பினர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எனக் கருதப்பட்டனர். நிலமுள்ள உழவர்கள் வேளாளர்கள் என்றும் உயர்ந்த வகுப்பினராகக் கருதப்பட்டனர். இவ்விரு வகுப்பினரும் ஒழுக்கத்திலும் நாகரிகத்திலும் பழக்கவழக்கங்களிலும் மாறுபட்டிருந்தனர்”[30] எனச் சாமி.சிதம்பரனார் இந்த வேறுபாட்டை எடுத்துக் கூறியுள்ளார். இவற்றை நோக்க, வேளாளர்களில் உழுதுண்போர், உழுவித்துண்போர் எனும் பாகுபாடு இருந்துள்ளமை தெளிவு. இதனை உறுதி செய்யும் விதமாக, பெரும்பாணாற்றுப்படையில் (222-228),(245-255) உழுதுண்போர், குடில்களில் வாழ்ந்து எளிய உணவை உண்டுள்ளதையும் உழுவித்துண்போர், வீடுகள் ஏணிக்கும் எட்டாத உயரத்தில் நெற்கூடு கொண்டு அமைந்திருப்பதையும் குறிப்பிடுகின்றன. மேலும், பொருட்களை விளைத்துத் தரும் உழவர்கள் வாழ்ந்த பகுதியையும் உழுவித்துண்போராகிய வேளாளர்கள் குடியிருந்த பகுதிகளையும் பரிபாடல் குறிப்பிடுகின்றது. இதனை,

“விளைவதை வினை எவன் மென் புல வன் புலக்
களமர் உழவர் கடி மறுகு பிறசார்
ஆங்க” (பரி.தி.26-27)

எனும் அடிகளால் அறியலாம். மேற்கூறியவற்றை ஆராயும்போது சங்க காலத்தில் திணை, தொழில் பிரிவுகள் மட்டுமல்லாது வர்க்கப்பிரிவுகளும் காணப்படுகின்றன. வேளாளருக்குள்ளும் பிரிவுகள் இருப்பதைக் காணமுடிகின்றது. அதுமட்டுமல்லாது, சங்ககாலத்தில் நால்வருணப் பாகுபாடுகள் இருந்துள்ளமை தெளிவாகிறது.

## 4.4 மேல்நிலையாக்க முயற்சிகள்

### 4.4.1 **மேல்நிலையாக்கம் - விளக்கம்**

மேல்நிலையாக்கம் என்பதற்கு,கீழ்படியிலுள்ள சாதிகள் மேற்படியிலுள்ள சாதியினரைப் போன்று வாழ்க்கை நெறிகளை மேற்கொள்ளும் போக்கு ‘மேல்நிலையாக்கம்’ என்று கூறப்படுகின்றது. “மேல்நிலை (படிநிலைகள்) உயர்மட்டத்தில் இருப்பது”[31] எனக் க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் தருகிறது.

“மேல்நிலையாக்கம் தான் இலக்கியத்தின் இயல்பான பணி. மேல்நிலையாக்கம் என்ற சொல்லைப் பலர் மிகவும் ஒற்றைப்படையாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆதிக்க வர்க்க அழகியலையும் கருத்தியலையும் நோக்கியே மேல்நிலையாக்கம் நிகழ வேண்டும் என்ற அவசியம் இல்லை. அதற்கு எதிரான சக்திகளாலும் மேல்நிலையாக்கம் நிகழலாம்”[32] என்கிறார் ஜெயமோகன்.

“சமூகத்தரத்தில் தாழ்நிலையாகக் கருதப்படும் சாதிகளைச் சேர்ந்தோர் தங்களைவிட உயர்சாதியாகக் கருதப்படும் மக்களின் நடையுடை பாவனை உள்ளிட்ட வாழ்க்கை முறைகளைப் பின்பற்றுவதன் வாயிலாகத் தாங்கள் அவர்களாக மாறுவதற்கான மேல்நோக்கிய அசைவியக்கத்தை ‘சமஸ்கிருதவயமாக்கம்’ (Sanskritization) என்ற சொல்லால்’’[32] குறிப்பிடுவர் என்ற எம்.என்.சீனிவாசன் கருத்தை ஆறு.இராமநாதன் குறிப்பிடுகிறார்.

மேலும், சாதி அடிப்படையில் இருநிலைகளில், மேல்நோக்கிய அசைவியக்கங்கள் நடைபெறுகின்றன என்றும் ஒன்று தனிமனித முயற்சி, மற்றொன்று குழுவினரின் முயற்சி எனறும் விளக்கமளிக்கிறார். ‘‘தனிமனித முயற்சி – சமூகத் தரத்தில் தாழ்நிலையாகக் கருதப்படும் ஒருவர், கல்வி பொருளாதரத்தில் சற்று மேம்பாடடையும்போது அல்லது மேல்சாதியினரின் பழக்கவழக்கங்களில் ஈர்க்கப்பட்ட போது, தங்களைவிட மேல்சாதியைச் சேர்ந்தவர்களின் நடையுடை பாவனைகளையும் பேச்சுக்களையும் வழிபாட்டு முறைகளையும் பின்பற்றுவர். இதனால் தான் வாழும் சமூகக் குழுவில் தன்னை மேம்பட்டவராகக் காட்டிக் கொள்வர். ஒரு குழுவினரின் முயற்சி – சமூகத்தரத்தில் தாழ்த்தப்பட்ட தரத்தில் உள்ள ஒரு சாதிக்குழு தாங்கள் தாழ்நிலைக்குக் காரணமாகக் கருதப்படும் பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்வதன் வாயிலாக மேல்நிலையாக்கம் பெற முயலும் போக்கு பல காலமாகக் காணப்படுகிறது”[34] எனும் கருத்தும் கவனிக்கத்தக்கது.

மேற்கூறியவற்றை ஆராயும் போது, க்ரியாவின் அகராதி கூறிய, படிநிலையில் உயர்ந்தோர் என்னும் கருத்து ஆய்விற்குப் பொருத்தமானதாக அமையும். ஏனெனில் ஒரு படிநிலை வரிசையில் வாழ்ந்து வந்த சங்க கால மக்கள் தங்களை மேலும் உயர்வாகக் காட்டிக் கொள்ள, அவ்விடத்தைத் தக்க வைத்துக் கொள்ளப் பலவிதமான உத்திகளையும் முயற்சிகளையும் கையாண்டுருக்கின்றனர். சங்ககாலத்தில் அரசர், அந்தணர், வணிகர்,

வேளாளர் எனும் வர்க்கப்பிரிவுகள் பாகுபாடுகள் இருந்துள்ளன. இவர்கள் அனைவரிலும் அரசரே முதன்மையாகப் போற்றப்படக் கூடியவர். எனினும் அந்தணர் முதன்மைப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இதற்கான காரணங்களை ஆராய்வது அவசியமான ஒன்றாகும்.

### 4.5 அந்தணர் -நிலைநாட்டல்

சங்ககாலத்தில் நால்வகைப் பிரிவுகளுள் அந்தணர் உயர்வாகக் காட்டப்பட்டிருக்கின்றனர். அரசரினும் அந்தணர் உயர்ந்தவர் எனும் கருத்து மேலோங்கியிருப்பதை,

"சிறந்த வேதம் விளங்கப் பாடி
வீழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து
நிலம் அமர் வையத்து ஒரு தாம் ஆகி
உயர்நிலை உலகம் இவண் நின்று எய்தும்
அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்
பெரியோர்" (மது.468-473)

எனும் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. அந்தணர் வேதம் ஓதுதல், விழுமிய ஒழுக்கம் உடைமை, யாருக்கும் இணையில்லாத இயல்புடைமை, சுவர்க்கப் பேற்றை இந்நிலவுலகத்திலிருந்தே அடையுந்தன்மை, அறநெறி பிழையாமை, அன்புடைமை எனும் ஒழுக்கங்களை உடையோர் என இவர்களது இயல்பு விவரிக்கப்படுகின்றது. மேலும், பதிற்றுப்பத்து அந்தணர் நூல்களைக் குறையாதபடி நிறையக் கற்றுள்ளதாகக் குறிப்பிடுகின்றது. இதனை,

"…………………தம் துணைத்
துறையின் எஞ்சாமை நிறையக்கற்று
கழிந்தோர் (பதி.90:3-5)

எனும் அடிகள் தெளிவுபடுத்தும். மேலும், அறநெறியில் தவறாது வாழ்பவர்களே அந்தணர் எனவும் கூறப்பட்டுள்ளது, இதனை

"… … … ஒருசார்,
அறத்தொடு வேதம் புணர்தவம் முற்றி
விறல் புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்
திறத்தின் திரிவு இல்லா அந்தணர் ஈண்டி
அறத்தின் திரியா பதி" (பரி.தி.18-21)

எனும் அடிகள் மெய்ப்பிக்கும். அந்தணர்கள் வேதங்களைக் கற்று அறத்துடன் வாழ்வதால் அப்பகுதியில் வாழ்ந்த் பிறரும் அறநெறியில் வாழ்ந்துள்ளதாகக் கூறப்படுகின்றது. இவற்றை நோக்க சங்ககாலத்தில் அந்தணர்கள் உயர்வாகக்காட்டப்பட்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. அந்தணர் வழியில் நடந்தால் அரசர் உலகம் முழுவதும் தம் வழிபட்டு நடக்கும்படியான பெரும் புகழை அடைவர் எனக் கூறி, அந்தணர்

மேன்மையை மற்றும் துணையை நாட வேண்டியதன் அவசியத்தை அறிவுறுத்தியுள்ளனர். இதனை,

"அறம்புரி அந்தணர் வழி மொழிந்து ஒழுகி
ஞாலம் நின் வழி ஒழுக பாடல்சான்று
நாடுடன் விளங்கும் நாடா நல்லிசைத்
திருந்திய இயல் மொழித் திருந்திழை கணவ" (பதி.24:8-11)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. அந்தணர் அரசரிடம் பெரும் செல்வாக்கு பெற்று பொதுநிலையில் போற்றுவதற்கும் பாதுகாப்பதற்கும் உரியவர்களாய் காட்டப்படுகின்றனர். இதனை,

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும்
……………………………………
…………………………………….
நும் அரண் சேர்மின் என" (புற.9:1-2, 5)

என்றும்,

"நின் முன்னோர் எல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்" (புற.43:13-14)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. பார்ப்பாரைக் கொல்வது பாவமாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

"பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயும் உள" (புற.34:3-4)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. வையையில் புதுவெள்ளம் வர, ஆடவர் மகளிர் நீராடியதனால், தூய்மையொழிந்தது எனக் கருதி நீராடாது, வாசப் பொருட்கள் தூவப்பெற்றுத் தூய்மையொழிந்தது எனக் கருதி நீராடாது சென்றுள்ளனர். நீர், தேன் கலக்கப்பெற்று வழுவழுப்பு உடையதாக மாறியதால் தூய்மையில்லாமல் போய்விட்டது எனக் கருதி வாய் பூசாது விட்டுள்ளதைபரிபாடல் திரட்டு பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

"ஈப் பாய் அடு நறாக் கொண்டது இவ் யாறு எனப்
பார்ப்பார் ஒழிந்தார் படிவு
மைந்தர் மகளிர் மணவரை தூவிற்று என்று
அந்தணர் தோயலர் ஆறு
வையை தேம் மேவ வழுவழுப்பு உற்றென
ஐயர், வாய் பூசுறார் ஆறு" (பரி.தி.57-63)

இப்பாடலை ஆராயும்போது, பிற மக்கள் பயன்படுத்தியதால் தாம் அதைப் பயன்படுத்தக்கூடாது என நினைத்து சென்றுள்ளனர்.

"யானே பரிசிலன் மன்னும் அந்தணன்" (புற.200:13)
"அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே" (புற.201:7)

எனும் புறப்பாடல்களில் தாம் ஒரு அந்தணன் எனக்கூறி தங்கள் உயர்வை எங்கும் நிலைநாட்ட விரும்பியுள்ளனர் என்பதை இதன்மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

### 4.5.1 அந்தணர் - அடிப்பணியச்செய்தமை

அந்தணர்கள், தங்களிடம் பிறர் அடிபணிந்து தம்மை போற்றி வாழவேண்டும் என அறிவுறுத்தியுள்ளனர்.

"ஓதல், வேட்டல், அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்து ஒழுகும்
அறம்புரி அந்தணர் வழி மொழிந்து ஒழுகி
ஞாலம் நின்வழி ஒழுக" (பதி.24:6-8)

எனும் அடிகளில் வேதத்தை ஓதுதல், வேள்வி செய்தல், பிறரும் வேதத்தை ஓதச் செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், கொள்ளத்தகும் பொருட்களை ஏற்றல் என்று சொல்லப்பட்ட ஆறு தொழில்களையும் தவறாது செய்தொழுகுபவரும் தருமத்தை விரும்பிச் செய்பவருமாகிய அந்தணற்பாற் பணிந்தொழுக வேண்டும் என அறிவுறுத்தியுள்ளமை கவனிக்கத்தக்கது. மேலும்,

"இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே" (புற.6:19-20)

என்றும்,

"பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே" (பதி.63:1)

எனப் பார்ப்பனப் பணிவு வேந்தர்களிடம் அறிவுறுத்தப்படும் நிலையில் அரசரை விட அந்தணர் உயர்ந்த நிலையைப் பெறவிரும்பியுள்ளதைத் தெளிவுபடுத்தும். மேலும், "பிராமணத் தன்மைத்தான் ஷத்திரியத் தன்மைக்கு உற்பத்தி ஸ்தானம் என்பது ஆதலால் ஷத்திரியன் அனைத்திற்கும் மேலான பதவியை அடைந்த போதிலும் கடைசியாக அவன் பிராமணத் தன்மையின் மேல்தான் இருக்கிறான். எனும் தேவிபிரசாத் சட்டோபாத்யாய குறிப்பிடும் இந்தியச் சமுதாயப் பொதுச் சூழலைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன"[35] என்ற பெ.மாதையன் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

"கடல் கொளப்படாஅது உடலுநர் ஊக்கார்
கழல்புனை திருந்து அடிக்காரி நின் நாடே
அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே" (புற.122:1-3)

எனக்காரியின் நாடு அந்தணருக்கு உரியதாய்க் கூறப்பட்டுள்ளமைக் கவனத்திற்குரியது. மேலும், மன்னர்களும் அந்தணர்களுக்குப் பொருட்களை

நீர்வார்த்துக் கொடுத்துள்ளனர். எஞ்சியவற்றையே பிறருக்குக் கொடுத்துள்ளனர். இதனை,

"…………………உயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
வரைகோள் அறியாச் சொன்றி" (குறு.233:4-6)

எனும் அடிகள் மெய்ப்பிக்கின்றன. மேலும் அந்தணர்களுக்கு, நாடு மட்டுமல்லாது, பெறற்கரிய அணிகலன்களையும் நீர் வார்த்துக் கொடுத்துள்ளமையை,

"…………..நன்பல
கேள்விமுற்றிய வேள்வி அந்தணர்க்கு
அருங்கலம் நீரொடு சிதறி" (புற.361:3-5)

"ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து" (புற.367:4-5)

எனும் அடிகளால் அறியலாம். "வேள்விகள் இயற்றிய அந்தணர்கள் தமிழ்ச் சமுதாயத்தில் மேல்நிலையில் வைத்துப் போற்றப் பெற்றனர். அந்தணர்களுக்குப் பொன்னும் பொருளும் கொடுத்ததோடு நில்லாமல், மன்னர்கள் அவர்களுக்கு நிலங்களையும் தானமாகக் கொடுத்துள்ளனர். அவ்வாறு தானம் கொடுக்கும் பொழுது தமிழ் மன்னர்கள் அத்தானத்தை நீரோடு அட்டிக் கொடுத்தனர்"[36] எனும் கருத்தும் அந்தணர்கள்தமது இயல்பினால் தம்மை மேம்படுத்திக் காட்டியுள்ளமை தெளிவு.

### 4.5.2 வேள்வி செய்யத்துண்டல்

அந்தணர்அரசரிடம் வேள்விகள் செய்வதும் அவசியக் கடமை எனக்கூறி அதற்கேற்ப பலவித யாகங்களும் நிகழ்த்தப்பட்டுள்ளன. "போர் வெற்றிக்கு யாகபலிகள் இன்றியமையாதனவென்று கருதப்பட்டன. பொதுவாகப் போரிடும் மன்னரின் வெற்றிக்கு அவை அவசியமாக இருந்தன என்ற டி.டி.கோசம்பி கருத்தை ஏற்று, போர்கள் மலிந்திருந்த சங்ககாலப் பகுதியில் மூவேந்தர் பிறருடனும் தமக்குள்ளும் போரிட்டுக் கொண்டு பெருமன்னராய் உயரத் தலைப்பட்ட காலச் சூழலில் யாகங்கள் முக்கியத்துவம் பெற்றுள்ளன"[37] எனும் மாதையன் கருத்தும் கவனத்திற்குரியது. அந்தணர் சொற்படியே மன்னர்களும் பல வேள்விகள் செய்துள்ளமையை,

"அடுகளம் வேட்ட அடு போர்ச் செழிய
ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றம் ஆக

மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய் வாள் வேந்தே" (புற.26:11-15)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடலில் நான்மறை வேதம் கற்ற அந்தணர்கள் சுற்றமாக இருக்க, தலையாலங்கானத்து செழியன் வேள்வி செய்துள்ளமை குறிப்பிடப்படுகின்றது. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் வேள்வி செய்து பல தூண்கள் நட்டுள்ளதை,

"............... நால் வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம் மலி ஆவுதி பொங்க பல்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன் களம் பலகொல்?" (புற.15:17-21)

எனும் பாடல் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. சோழன் கரிகாற் பெருவளத்தான், அந்தணரின் அவையில் வேள்விக்குரிய முறையை நன்கு கற்றுத் தம் குல மகளிரோடு வேள்வித் தூண் சமைத்து வேத வேள்விகளைச் செய்து முடித்துள்ளதை,

"அறம் அறக் கண்ட நெறி மாண் அவையத்து
முறை நற்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூஇயல் கொள்கைத் துகள் அறு மகளிரொடு
பருதி உருவின் பல் படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழில் முடிந்ததூஉம்" (புற.224:4-9)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், "சோழ மன்னன் கரிகால் பெருவளத்தான் அந்தணர்கள் உதவியுடன் தன் மனைவியரோடு வேள்விச் சாலையுள் புகுந்து பருந்தை விழுங்குவது போல் வகுக்கப்பட்ட (கருட சயன்ம) வேள்வித் தூணிடத்து வேதங்களில் கூறப்பட்டவாறு வேள்வித் தொழிலை முடித்தான்"[39] எனும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

செல்வக்கடுங்கோ வாழியாதன், அழியாத கோட்பாட்டையுடைய சுற்றத்தார் சூழ்ந்து இருக்க வேள்விகள் செய்து, வேதங்கள் ஓதி தேவர்களை இன்புறச் செய்துள்ளான். இதனை,

"தொலையாக் கொள்கைச் சுற்றம் சுற்ற
வேள்வியில் கடவுள் அருத்தினை கேள்வி
உயர்நிலை உலகத்து ஐயர் இன்புறுத்தினை" (பதி.70:17-19)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், இருபத்தொரு வேள்வித் துறைகளையும் குறையின்றி செய்து முடித்த புகழமைந்த அறிவுடையோர் மரபில் வந்தவன் என்றும் நீர் நாணும்படி நெய்யை வழங்கி, எண்ணிடமுடியாதப் பல வேள்விகளைச் செய்தவனாகக்

குறிப்பிடப்பெறுகின்றான். இவ்வாறு, செல்வக்கடுங்கோ வாழியாதன் வேள்விகள் செய்து தேவர்களை மகிழ்வித்துள்ளமை நோக்கத்தக்கது. பெருஞ்சேரல் இரும்பொறை, வேத விதிகளைக் கேட்டறிந்து வேள்விக்குத் துணையாக உள்ள விரதங்களில் கலந்துகொண்டு தேவர்கள் மகிழும்படியாக வேள்விகளைச் செய்து முடித்தான் எனப் புகழப்படுவதை,

“கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது
வேள்வி வேட்டனை உயர்ந்தோர் உவப்ப” (பதி.74:1-2)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. “அந்தணர் கூறிய விரதங்களிலிருந்து வழுவாமல் தேவர்கள் மகிழும்படி வேள்விகள் நடத்தியவனாய்ப் பெருஞ்சேரல் இரும்பொறை காட்டப்பட்டுள்ளான்”[39] என பெ.மாதையனும் “பெருஞ்சேரல் இரும்பொறை வேதவேள்விகளில் வல்ல அந்தணர்களை அணுகி அவர்களிடம் வேள்வி வேட்டலுக்குரிய விதிகளைக் கேட்டு உணர்ந்து வேள்வி செய்வதற்காகக் காக்க வேண்டிய விரதங்களைக் காத்து வேள்வி செய்தான்”[40] என அ.பாண்டுரங்கனும் கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது. அந்தணர்களால் வேத வேள்விகள் மையப்படுத்தப்பட்டு, வலியுறுத்தப்பட்டு செல்வாக்குப் பெற்றுள்ளது. மேலும், சங்க காலத்தில் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய குலம், பண்பு, அறிவு ஆகிய காரணங்களால் மேன்மை அடைந்துள்ளனர் என்பதை உணர்த்திநிற்கிறது. அந்தணர்கள் செய்த தொழில், பண்பு, குணம் ஆகியவையே அவர்களை உயர்வாக எண்ணி, அரசர்களைப் பின்பற்றுமாறு செய்துள்ளது. “இந்த நால்வகை வருணத்திலும் அந்தணரே முதன்மைப்படுத்தப்பட்டுள்ளனர். இதற்கு அரசு உருவாக்கச் சூழலே காரணமாய் இருந்துள்ளது. இவர்கள் அரசர்களிடம் மிக அணுக்கமாய் இருந்ததையும் அவர்களிடம் தங்கள் மேலாண்மையை வற்புறுத்தியதையும் வேள்வி வேட்டலை வலியுறுத்தி பல வேள்விகள் பல செய்ததையும் இனக்குழு மக்களின் பல்வேறு சமுதாயப் பிரிவினரின் வழிபாட்டு நெறிகளை எல்லாம் ஒரு தெய்வ, பெருந்தெய்வ வழிபாட்டுக்குள் கொணர முடிந்ததையும் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன”[41] எனும் கூற்றும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. அரசர்கள் மட்டுமல்லாது வணிகர்களும் வேள்வி செய்துள்ளதை,

“அமரர் பேணியும் ஆவுதி அருந்தியும்
……………………………………..
நான்மறையோர் புகழ்பரப்பியும்” (பட்.200-202)

எனும் வரிகள் உறுதிப்படுத்தும். அரசர், வணிகர் மட்டுமல்லாமல் காடுகளில் வசித்த முனிவர்களும் வேள்வி செய்துள்ளனர். அதற்குக் களிறு விறகுக் கொண்டு வந்து தந்து உதவியதாக,

“செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறு தரு விறகின் வேட்கும்” (பெரு.498-499)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன.“காட்டில் வாழும் முனிவர்களும் வேள்வி செய்தனர். அவ்வேள்வி குறைவற நடக்குமாறு விலங்குகளும் அவர்களுக்குத் துணை செய்தன”[42] எனும் கருத்தும் நோக்கத்தக்கது. மேற்சுட்டிய பாடல்களின் வழி சங்ககாலத்தில் அந்தணர்கள் தங்களின் செல்வாக்கை அனைவரிடமும் நிலைநாட்டி வாழ்ந்து வந்திருப்பதை அறியமுடிகின்றது. “சமண பௌத்த நெறிகளை விடவும் வைதீகநெறி சங்க காலத்தில் பெருஞ்செல்வாக்குப் பெற்றதற்கு யாகங்களின் பெருக்கமும் அந்தணர் செல்வாக்குமே சிறந்த சான்றுகள்”[43] எனும் பெ.மாதையன் கூற்றும் இங்குக் குறிப்பிடத்தக்கது. இவர்கள் தங்களது செல்வாக்கு மற்றும் பிற உத்திகளைப் பயன்படுத்தி, அரசர், வணிகர் போன்ற பிறரை அடிப் பணிய வைத்திருப்பது தெளிவு.

### 4.6 அரசர் உயர்வு காட்டல்

மூவேந்தர்கள் நாட்டையும் நாட்டு மக்களையும் காக்கும் பணியைச் செய்தவர்கள். இவர்கள் தங்களுக்குள்ளே மேம்பட்டவராய் உயர விரும்பி போரிட்டிருப்பதை,

“ஓங்கு மலைப் பெருவில் பாம்பு ஞாண் கொளீஇ
ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி
பெரு விறல் அமரர்க்கு வென்றி தந்த
கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கும் ஒரு கண்போல
வேந்துமேம்பட பூந்தார் மாற” (புற.55:1-6)

எனும் பாடலடிகள் உறுதிப்படுத்தும். ஒரே அம்பினால் மூவர் மதிலை அழித்து அமரர்க்கு வெற்றி தந்தவன், விடமுண்டு கருமை படிந்த கழுத்துடைய இறைவன். அழகிய திருமுடியில் சூடிய பிறை கண் போல வேந்தர் மூவருள்ளும் உயர்ந்தவனாக, (பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்) குறிப்பிடப்பெறுகின்றான். மேலும்,தம்மை பிறர் உயர்வாக எண்ண விரும்பி சிறுசொல் சொல்லிப் போரிட விரும்பும் வேந்தரை முரசங்களுடன் கைக்கொள்ளுமாறு வஞ்சினம் கூறியுள்ளதை,

“சிறுசொல் சொல்லிய சினம் கெழு வேந்தரை

அருஞ் சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்கு அகப்படேஎன்” (புற.72:7-9)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. சங்ககாலத்தில் மன்னர்கள் தங்களுக்குள்ளே அடக்கி ஆள விரும்பி இருப்பதை அறியமுடிகின்றது. மேலும், பாண்டிய மன்னன், சேரன், சோழன் மற்றும் குறுநில மன்னர்களாகிய வேளிர்கள் தளர்ந்து போகுமாறு போர் செய்து வென்றுள்ளான் என்றும் அவர்களோடு மலைப்பகுதிகளில் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர்களையும் வென்றிருப்பதை,

“இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்
பொருது அவரைச் செருவென்றும்
இலங்கு அருவிய வரை நீந்தி
சுரம் போழ்ந்த இகல் ஆற்றல்
உயர்ந்து ஓங்கிய விழுச் சிறப்பின்” (மது.55-59)

எனும் வரிகள் மெய்ப்பிக்கின்றன. பாண்டிய மன்னன், சேர, சோழரின் கடல் போன்ற சேனைகள் கலங்குமாறு தாக்கியிருப்பதைஅகநானூறு குறிப்பிடுகின்றது. இதனை,

“……………..மறப்போர்ச் செழியன்
……………………………………
உடன் இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்
கடல் மருள் பெரும் படை கலங்கத் தாக்கி” (அக.116:13, 15-16)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. பாண்டிய மன்னன், சேர, சோழர் தம் படைகளை வென்று அவர்களுடைய புலி, வில் கொடிகளை நீக்கித் தன் மீன் கொடியை அவ்விடத்தில் நாட்டியதாக,

“மலிதிரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின்
மெலிவு இன்றி மேல் சென்று மேவார் நாடு இடம்பட
புலியொடு வில் நிக்கி, புகழ்பொறித்த கிளர் கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்” (கலி.104:1-4)

கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகின்றது. சேரன் பெருஞ்சேரல் இரும்பொறை, சோழ, பாண்டியரை வென்றமையைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. இவன் சோழ, பாண்டியர்களாகிய இரு பெரு வேந்தரையும் ஒரு சேர வென்று, அவர்களுடைய முரசு, குடை, முடி ஆகியவற்றைக் கைக்கொண்டு கள வேள்வி செய்துள்ளான். அதனோடு அதிகனின் தகடூரையும் அழித்து, மதிலைக் கைப்பற்றியமையை,

“இருபெரு வேந்தரையும் உடன்நிலை வென்று
முரசும் குடையும் கலனும் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டு

துகள் தீர் மகளிர் இரங்க துப்பு அறுத்து
தகடூர் எறிந்து நொச்சி தந்து எய்திய
அருந்திறல் ஒள் இசைப் பெருஞ்சேரல் இரும்பொறை” (பதி.6-11)

எனும் பாடல் உணர்த்திநிற்கிறது. மேற்கூறியவற்றை நோக்க மூவேந்தர்களும் தங்களுக்குள்ளே போரிட்டு மேம்பட்டவராய் இச்சமூகத்தில் வாழ எண்ணியிருந்தமையை அறிய முடிகின்றது.

### 4.7 பேரரசு- சிற்றரசு வேறுபாடு:

#### 4.7.1 குறுநில மன்னர்களைப் பணிய வைத்தல்

சங்ககாலத்தில் மூவேந்தர்களுக்குக் கீழ் இருந்தே குறுநில மன்னர்கள் ஆட்சி செய்துள்ளனர். மலையமான் திருமுடிக்காரி மூவேந்தர்களுக்கும் உதவியாய் இருந்ததனால் மன்னன் அவனுக்குப் பொருள் தந்திருக்கிறான். இதனை,

“வீயாத் திருவின் விறல் கெழு தானை
மூவருள் ஒருவன் ‘துப்பு’ ஆகியர் என
ஏத்தினர் தரூஉம் கூழே நும்குடி” (புற.122:4-6)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. நாஞ்சில் வள்ளுவன் வறுமையுற்று நிற்கும் காலத்தில் சேரன் அவனுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து உதவியதால் அம்மன்னனுக்காகச் சாவதற்கும் அஞ்சாது வாழ்ந்துள்ளதை,

“உயர்சிமைய உழாஅ நாஞ்சில் பொருந
……………………………………….
……………………………………….
ஈதல் ஆனான் வேந்தே வேந்தற்குச்
சாதல் அஞ்சாய் நீயே” (புற.139:8, 11-12)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. சேரமான் கோதை பிட்டன், கொற்றன் எனும் மலைநாட்டையுடைய குறுநில மன்னனுக்குத் தலைவனாக இருந்ததால் அவனை நாடிச் சென்று பொருளைப் பெறலாம் எனக் புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. இதனை,

“வன்புல நாடன் வயமான் பிட்டன்
ஆர் அமர் கடக்கும் வேலும் அவன் இறை
மாவண் ஈகைக் கோதையும்
மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே” (புற.172:7-10)

எனும் அடிகளால் அறியலாம். நாலைக் கிழவன் நாகன் தன்னோடு மாறுபட்ட பகைவர்களின் முரசு மற்றும் நாடு பலவற்றையும் கைக்கொண்டு பாண்டியனின் படைத் தலைவனாக இருந்துள்ளான். பாண்டியனுக்குப் படை

வேண்டியவிடத்து வாட்போரையும் வேண்டியவற்றை வேண்டியவாறு தந்து அவ்வரசனுக்குத் தந்துதவியுள்ளதை,

“விசி பிணி முரசமொடு மண் பல தந்த
திரு வீழ் நுண் பூண் பாண்டியன் மறவன்
படை வேண்டுழி வாள் உதவியும்
வினை வேண்டுவழி அறிவு உதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன்
……………………………..
தோலா நல் இசை நாலை கிழவன்” (புற.179:4-9)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. குறுநில மன்னர்கள் மூவேந்தர்களுக்குப் படைத்தலைவனாகவும், பல்வேறு உதவிகள் புரிந்து அவர்களுக்குத் துணையாய் இருந்தும் ஆட்சிபுரிந்து வாழ்ந்துள்ளனர். மேலும், மூவேந்தர், தமக்குப் பணியாதவர்களிடம் நிறையப் பொருள்களைத் திறையாகச் பெற்றிருக்கின்றனர். இதனை,

“பணியார் தேஎம் பணித்துத் திறை கொண்மார்” (மது.230)

எனும் வரி சுட்டுகின்றது. மேலும், இக்குறுநிலமன்னர்கள் அரிய அணிகலன்கள் மற்றும் முன்னோர்கள் தேடிவைத்த பெரிய செல்வங்களையும் வருத்தத்துடன் திறையிட்டுருப்பதை,

“பெருங்களிற்று யானையோடு அருங்கலம் தராஅர்
மெய்பனி கூரா அணங்கு எனப் பராவலின்
பலி கொண்டு பெயரும் பாசம் போல
திறை கொண்டு பெயர்தி” (பதி.71: 21-24)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. வேந்தரது வீரர்கள் வந்து, எம் அரசனுக்குத் திறையை இடுக என்று சொல்லி அவனைச் சுற்றி நின்று பெற்றுள்ளதை,

“ஒடிவு இல் தெவ்வர் எதிர்நின்று உரைஇ
இடுக திறையே புரவு எதிர்த்தோற்கு என
அம்புடை வலத்தர் உயர்ந்தோர் பரவ
அனையை ஆகன்மாறே” (பதி.80:9-12)

எனும் அடிகளால் விவரிக்கின்றன. மேலும், குறுநிலமன்னர்கள் தமிழ்நாடு மூவேந்தருக்கும் பொதுவானது என்பதைப் பொறுக்காது, சேரன் வேண்டும் திறையைக் கொடுத்தால் தான் அச்சமின்றி வாழ முடியும்.இல்லையேல் ஒரு பகல்கூட நிம்மதியாக வாழமுடியாது என எண்ணித்திறை செலுத்தியுள்ளதை,

“தண் தமிழ் பொது எனப் பொறாஅன் போர் எதிர்ந்து
கொண்டி வேண்டுவன் ஆயின் கொள்க எனக்
கொடுத்த மன்னர் நடுக்கு அற்றனரே

அளியரோ அளியர் அளி இழந்தோரே
……………………………………………
ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோரே" (புற.51:4-7,11)

எனும் பாடலின் வழி அறியலாம். குறுநிலமன்னர்கள் பெருநில மன்னர்களுக்குப் பயந்து வாழும் சூழலுக்குத் தள்ளப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது. முற்றிக்கிடக்கும் நெல்மணிகளையுடைய நெற்கதிர்கள் நிறைந்த, பழமையான ஊரில் உள்ளோர் அவ்வூர் தங்களுக்கே உரிமையாக வேண்டுமெனில் அதியமான் நெடுமான் அஞ்சிக்குத் திறை செலுத்திப் பணிய வேண்டும் என வலியுறுத்தப்பட்டுள்ளதை,

"…………………தடந்தோள்
பணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்கு உரித்தாகல் வேண்டின் சென்று அவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே மறுப்பின்
ஒவ்வான் அல்லன்" (புற.97:17-21)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. சங்க காலத்தில் திறை செலுத்துவோர் நல்ல அணிகலன்களைக் களிறோடு திறையாகக் கொண்டு வந்து கொடுத்து, வணங்கிப் பணிவைப் புலப்படுத்தக்கூடிய மொழிகளைக் கூறிச் செல்லவேண்டும் என அறிவுறுத்தப்பட்டுள்ளது. இதனை,

"நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து
சென்றீஇ என்ப ஆயின் வேந்தனும்" (அக.124:1-3)

எனும் அடிகளால் அறியமுடிகின்றது. பாண்டியன் (வழுதி) ஆட்சி செய்த போது அம்மன்னனுக்கு அஞ்சி தாமாகவே திறைப் பொருளைக் கொண்டு வந்து கொடுக்கும் நிலையிலே குறுநிலமன்னர்கள் வாழ்ந்துள்ளனர்.இதனை,

"பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை
போல கொடுதார் தமர்" (கலி.141:24-25)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், சங்ககாலத்தில் மூவேந்தர்களுக்குக் கீழ் ஆட்சி புரிபவராகவும் அவர்களுக்கு அடங்கித் திறை செலுத்தியும் குறுநில மன்னர்கள் வாழ்ந்து வந்திருப்பது மன்னர்களுக்குள் ஏற்றத்தாழ்வுகள் இருந்துள்ளமைக்கு மற்றுமொரு சான்றாகின்றது. பேரரசர்களுக்கு அஞ்சிப், பணிந்து, திறை செலுத்தி வாழுமாறு குறுநில மன்னர்களது வாழ்க்கைமுறை கட்டமைக்கப்பட்டிருப்பதை இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. இதனை,"பேரரசு, சிற்றரசு எனும் படித்தரநிலையில் சங்ககால அரசு அமைந்திருந்ததைக் காட்டும் சான்றுகளாய் உள்ளன"[44] எனும் பெ.மாதையன் கூற்றும்

இங்குப்பொருத்தமுடையதே. மேலும் "தமிழகத்தில் முடிமன்னர் மூவர் சங்க காலத்தில் ஆண்டு வந்தனர். இம்மூவர் தவிர பல குறுநில மன்னர்கள் நாட்டின் ஆட்சியைப் பகிர்ந்து கொண்டனர். இச்சிற்றரசர்கள் ஒவ்வோரமயம் முடிமன்னர்த் தம் அடிசாராது சுதந்திரமாக ஆட்சி புரிந்தனர். ஆயினும் கொள்கையளவிலேனும் அவர்கள் மூவரில் ஒரு மன்னருக்குக் கீழ்படிந்தவராகவே கருதப்படுவார். அத்தகைய சிற்றரசர்களின் தொகை நூற்றிருபது என்று ஸ்மித் கணக்கிடுகின்றார்"45 எனும் ந.சுப்ரமண்யன் கூற்றும் இணைத்து நோக்கத்தக்கது.

வலிமை வாய்ந்த அரசர்கள், தங்களுக்குக்கீழ் உள்ள அரசர்களை வென்று தங்களின் புகழை நிலைநாட்டியிருப்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. ஒளிநாட்டைச் சார்ந்த பலரும் திருமாவளவனைப் பணிந்துள்ளனர். அருவா நாட்டினர் தாங்கள் செய்ய வேண்டிய தொழில் யாது என வேண்டியுள்ளனர். அருவா நாட்டின் வடப்புறத்தில் உள்ள அருவா வடதலை நாட்டினர் புகழை இழந்து வாழ்ந்துள்ளனர். குடநாட்டில் உள்ள அரசர்கள் மன எழுச்சி குன்றியவராகவும் இடையராய் இருந்து அரசராய் விளங்கியவர்களின் சுற்றத்தார்கள் அனைவரும் கெட்டு அழிந்துள்ளனர். வேளிர் குலம் முழுவதும் வீழ்ந்துபட்டுள்ளது. என உரையாசிரியர் விளக்கம் தந்துள்ளனர். இவையனைத்தும் மேல்நிலையில் இருந்தவர்களின் அதிகாரத்தன்மையைக் காட்டுவதாய் அமைகின்றன. இதனை,

"பல் ஒளியர் பணிபு ஒடுங்க
தொல் அருவாளர் தொழில் கேட்ப
வடவர் வாட குடவர் கூம்ப
தென்னவன் திறல்கெட சீறி மன்னர்
மன் எயில் கதுவும் மதனுடை நோன்தாள்
மரத்தானை மற மொய்ம்பின்
செங்கண்ணால் செயிர்த்து நோக்கி
புன் பொதுவர் வழி பொன்ற
இருங்கோவேள் மருங்கு சாய"                (பட்.274-282)

எனும் வரிகளால் அறியமுடிகின்றது. இப்பாடலின் வழி திருமாவளவன் பல நாட்டு மன்னர்களையும் அடிபணியச் செய்துள்ளமை தெளிவாகின்றது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு (சேர மன்னனுக்கு) அஞ்சி, பெரிய நகரங்களில் வாழ்ந்த மன்னர்களும் துயில் கொள்ளாமல் நடுங்கி வாழ்ந்துள்ளமையைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது. இதனை,

"முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது
மாதிரம் பனிக்கும்"                (பதி.12:7-8)

எனும் அடிகளால் அறியலாம். பாண்டிய மன்னன் தலைமைப் பண்பு வகித்த கொற்றவர்களின் அரண்களை முற்றுகையிட்டுக் கைப்பற்றி அவர்களை நாடுகளை விட்டே வெளியேறும்படிச் செய்துள்ளான். இதனை,

“உயர்ந்து ஓங்கிய நிரைப் புதவின்
நெடுமதில் நிரை ஞாயில்
அம்பு உமிழ் அயில் அருப்பம்
தண்டாது தலைச் சென்று
கொண்டு நீங்கிய விழுச் சிறப்பின்
தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடளி எல்லைத்
தொன்று மொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்து ஒழுகிய
கொற்றவர் தம் கோன்” (மது.65-74)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. பாண்டிய மன்னன் ‘தலையாலங்கானம்’ என்னும் ஊரில் தங்கி, அங்குள்ள பெரு, குறுநில மன்னர்களையெல்லாம் வென்று, அவர்களுடைய முரசங்களைக் கைக்கொண்டு களவேள்வி செய்திருப்பதை,

“ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து
அரசுபட அமர் உழக்கி
முரசு கொண்டு களம் வேட்ட
அடுதிறல் உயர்புகழ் வேந்தே” (மது.127-130)

எனும் பாடல் விவரிக்கின்றது. இவர்கள் வளமை சான்ற நிலங்களை அழித்து அங்குள்ள மக்களை விரட்டியடித்து, நாடுகளையும், பிற இடங்களையும் கைப்பற்றியுள்ளனர். உழவு மற்றும் வணிகத்தொழிலகளில் சிறப்புபெற்ற ‘முதுவெள்ளிலை’ என்னும் ஊரில் பாண்டியனின் ஏவலைக்கேட்க எண்ணி அவ்வூரைத் தீயிட்டுக் கொளுத்தியுள்ளான். இதனை,

“முது வெள்ளிலை
……………………..மீக்கூறும்
வியல் மேவல் விழுச் செல்வத்து
இரு வகையான் இசை சான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீஇய நால் நிலவரொடு
தொன்று மொழிந்து தொழல் கேட்ப
கால் என்னக் கடிது வராஅய்
நாடு கெட எரிபரப்பி” (மது.119-126)

எனும் வரிகளால் அறியமுடிகின்றது. திருமாவளவன் பிற நாட்டரது மருத நிலத்தைப் பாழ்படுத்தி, அந்நிலத்தில் உள்ள மக்களையெல்லாம் ஓடும்படியாகச் செய்துள்ளான். இதனை,

“முனைகெடச் சென்று முன் சமம் முருக்கி
தலை தவச் சென்று” (பட்.,239,242)

பட்டினப்பாலை மற்றும் பதிற்றுப்பத்து (23:11-15,) (26:6-11) அடிகள் குறிப்பிடுகின்றன. மேற்கூறியவற்றை நோக்க, மன்னர்கள் மன்னர் மன்னராய் உயரத் தலைப்பட்டு, வளம் பொருந்திய நாடுகளை அழித்து நாட்டுமக்களையும் வெளியேற்றியுள்ளனர். பேரரசர்களுக்கு அஞ்சி குறுநிலமன்னர்கள் துயிலாது வாழும் அவல நிலையும் ஏற்பட்டதை அறியமுடிகின்றது. குறுநில மன்னர்கள் மற்ற மன்னர்களோடு போரிட்டு உயர முற்பட்டிருப்பதே இதற்குக் காரணம் எனலாம்.

### 4.7.2 திணைத் தொழிலினரைப் பணியவைத்தல்

மன்னர்கள் குறுநிலமன்னர்கள் மட்டுமல்லாது திணை சார்ந்த மக்களையும் தங்களுக்குக் கீழ் அடங்கி நடக்குமாறு செய்துள்ளனர். பாண்டியன் நெடுஞ்செழியன் குறுநில மன்னர்களாக விளங்கிய பரதவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்று அவர்களை அடிபணியச் செய்வதற்குப் போர் நடத்தியுள்ளதே இதற்குச் சான்றாகும். இதனை,

“செற்ற தெவ்வர் கலங்கத் தலைச் சென்று
அஞ்சுவரத் தட்கும் அணங்குடைத் துப்பின்
கோழ் ஊஉன் குறைக் கொழுவல்சி
புலவு வில் பொலி கூவை
ஒன்றுமொழி ஒலி இருப்பின்
தென்பரதவர் போர் ஏறே” (மது.139-144)

எனும் பாடலால் உய்த்துணர முடிகின்றது. இப்பாடலின் வழி திணைக்குடிகள் தனது நிலையிலிருந்து உயரத் தலைப்பட்ட போது, அதை விரும்பாது அடிப்பணிய வைக்க முயன்றிருப்பதை அறியமுடிகின்றது. சேரமன்னன், முல்லை நிலத்தாரது பசுக்கூட்டங்களையெல்லாம் கவர்ந்து சென்றமையால் அவர்களது அன்றாட வாழ்வு நாட்கணக்கில் பாதிப்படைவது கண்டு இடையர்குலத் தலைவன் கழுவுள் என்போன் அவனை அடிபணிந்து வணங்கி வேண்டியுள்ளதை,

“………………..ஏறோடு
கன்றுடை ஆயம் தரீஇப் புகல் சிறந்து
புலவுவில் இளையற் அங்கை விடுப்ப
மத்துக் கயிறு ஆடா வைகற் பொழுது நினையூஉ
ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்க” (பதி.71:13-17)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. புறப்பாடலில் மன்னர்கள் பரிசில் கொடுக்கும் பொழுது களிறு, குதிரை, பசுக்கூட்டம், நெற்போர்க்களங்கள்

இவற்றோடு மருத நிலத்தில் பணிபுரிந்த களமரையும் பரிசிலாகக் கொடுத்துள்ளனர். இதனை,

"குன்று உறழ்ந்த களிறு என்கோ?
கொய் உளைய மாஎன்கோ?
மன்று நிறையும் நிரை என்கோ
மனைக் களமரொடு களம் என்கோ
ஆங்குஅவை கனவு என மருள வில்லே நனவின்
நல்கியோனே" (புற.387:22-27)

எனும் அடிகளால் அறியலாம். இப்பாடலில் திணைமக்களைப் பரிசில் பொருளாகக் கொடுக்கும் நிலை இருந்ததை அறியமுடிகிறது. மேலும், அவர்களை அடிமைகளாக நடத்தியிருப்பதும் சங்ககாலச் சமூகத்தில் திணை மக்களுக்கு இருந்த இடத்தினைக் காட்டுகின்றது. இவற்றை ஆராயும்போது சங்ககால மன்னர்கள் மக்களது உழைப்பைச் சுரண்டும் வர்க்கங்களாகவே வாழ்ந்திருப்பது திண்ணம். கரிகாலனது நாட்டில் மருத நிலத்தாரது உடல் உழைப்பில் நாள்தோறும் மலையென நெல் குவித்து வைக்கப்பட்டுள்ளது. அதோடு ஒரு வேலி நிலத்தில் ஆயிரங்கல நெல் விளையும் படி மருத நிலத்தார் உழைத்துள்ளனமயை,

"……… நாள்தோறும்
குன்று எனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்
சாலி நெல்லின்சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட்டு ஆக
காவிரி புரக்கம் நாடுகிழவோனே" (பொரு.243-248)

எனும் வரிகள் குறிப்பிடுகின்றன. முடிவாக, சங்ககாலத்தில் பேரரசர்களாக வாழ்ந்தவர்கள் குறுநில மன்னர்களையும் மூவேந்தர்கள் தங்களுக்குள்ளும் போரிட்டு உயரத்தலைப்பட்டுள்ளனர். தங்களது மேன்மையை உயர்த்தவும் நிலைநாட்டவும் பிற மன்னர், தலைவர்களை மட்டுமல்லாது திணை சார்ந்த மக்களையும் தங்களுக்குக் கீழ் அடிபணிந்து வாழுமாறு செய்துள்ளனர். தொழில் சார்ந்த குழுக்களும் மன்னர்களது தலைமையின் கீழ் அவர்களுக்கு வேண்டியவற்றைச் செய்து கொடுத்து உதவி புரிந்துள்ளனர். ஏற்றத்தாழ்வுகளோடு பல படிநிலைகளாக மக்கள் வாழ்ந்ததோடு மட்டுமல்லாது வர்க்கப் பிரிவுகளும் தோற்றம் பெற்று மேல் நிலையாக்க முயற்சிகளும் சங்ககாலச் சமூகத்தில் நடந்தேறியிருக்கின்றன என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், சங்ககால இனக்குழு வாழ்க்கை முறையில் பொருளாதார அடிப்படையிலான வேறுபாடுகள் செய்யும் தொழிலினால் பாகுபாடுகள், ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டுள்ளதே தவிர

அவர்களுக்குள் மேல்நிலையாக்க முயற்சிகள் ஏதும் தோற்றம் பெறவில்லை என்பதும் இவ்வாய்வின் முடிவாக அமைகின்றன. எனவே திணைச் சமுதாயத்திலும் தொழில் சமுதாயத்திலும் இல்லாத பிறப்பின் அடிப்படையான ஏற்றத்தாழ்வு சாதிய சமுதாயத்தில் உருவாக்கப்பட்டது. காரணம் இக்காலகட்டத்தில் ஆரியர் செல்வாக்கு மிக்கவர்களாகத் திகழ்ந்தனர். இந்நிலையைத் தக்க வைத்துக்கொள்ள அவர்களால் உருவாக்கப்பட்டதே பிறப்பின் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வு. இதனால் அந்தணனின் (பார்ப்பனனின்) தொழில் நிலைநிறுத்தப்பட்டது. அவனுக்குப்பின் அவனது தொழில் மகனுக்குக் கடத்தப்பட்டது. இதன்வழி சாதிக்கான தொழில் நிர்ணயிக்கப்பட்டது. இதனால் கீழ்நிலையில் இருந்தவன் மேலை செல்வதற்கு தடை இருந்தது. சாதியப் படிநிலையில் உயர்ந்தவன் மேலாகவும் கீழ்நிலையில் இருப்பவன் தாழ்த்தப்பட்டவனாகவும் ஆக்கப்பட்டான். இம்மாதிரியான சமூகக் கட்டமைப்பு அறிவு, உழைப்பு, திறமை இல்லாதவனையும் பிறப்பின் அடிப்படையில் உயர்ந்தவனாக்கியது. அதேவேளை கீழ்நிலையில் இருப்பவன் மேற்க்கண்ட தகுதிகளை உடையவனாக இருந்தபோதும் பிறப்பின் அடிப்படையில் அவன் முன்னேற்றத்திற்குத் தடையாக அமைந்தது. இவ்வகையில் இம்மூவகை குடிகளையும் நோக்கும் போது திணை சமூகத்திலும் தொழில் சமூகத்திலும் பிரிவினை வாதம் என்பது பொருளாதாரம் சார்ந்ததாகவும் கிடைநிலை அமைப்பும் கொண்டதாக இருந்ததையும் சாதிய சமூகம் தோற்றம் பெற்றபின் பிறப்பின் அடிப்படையில் தொழில் முறை உருவாக்கப்பட்டு செங்குத்து சமூக அமைப்பாக மாற்றப்பட்டதையும் அறியலாம்.

### 4.8 முடிவுரை

- ‘‘சங்ககாலக் குடிகளின் மேல்நிலையாக்கமுயற்சிகள்’’ எனும் நான்காம் இயலில் திணைமக்கள் மலை, காடு, வயல், கடல் எனும் பகுதிகளில் எளிய வாழ்வு வாழ்ந்து அந்தந்த நிலச் சூழலுக்கேற்ப இல்லம் அமைத்து உணவு உண்டு வாழ்ந்துள்ளனர். பெரும்பாலும் குறிஞ்சி, முல்லை, பாலை நிலத்தார் புல், வரகு, வைக்கோல் போன்றவற்றால் குடிசை அமைத்தும் மருதம் மற்றும் நெய்தல் நிலத்தார் இல்லங்கள் அமைத்தும் வாழ்ந்துள்ளதை இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. அம்மக்களை ஆட்சி செலுத்திய மன்னர்கள், மாட மாளிகைகளிலும் அரண்மனைகளிலும் வளமையோடு

